# தெய்வத் தமிழ் அலங்கல்

'செந்தமிழ்ச் செல்வர்', 'தமிழாகரர்'

'நல்லாசிரியர்'

முனைவர் ச. சாம்பசிவனார், எம்.ஏ.,பிஎச்.டி.,

மதுரை - 1

வளவன் வெளியீடு

அ.பெ.எண். 155

மதுரை - 625001.

முதற்பதிப்பு, திசம்பர், 1994
உரிமை : ச. சாம்பசிவனார்
விலை ரூ. 50—00

# DEIVA TAMIZH ALANGAL

By

DR. S. SAMBASIVANAR, M.A.,Ph.D.,

This book is published with the financial assistance of Tirumala Tirupati Devasthanams under their scheme aid to publish Religious Books. My sincere thanks to T.T.D. - Author.

Published by :

DR. S. SAMABASIVANAR
Prop. VALAVAN VELIYEEDU
P. B. No. 155
MADURAI-625001 (Tamil Nadu)

Amuthachakam, MADURAI-625016. (Ph :602029)

# முன்னுரை

தமிழர் வாழ்வில், ''சைவம், வைணவம்'' ஆகியவை, ஒளிதரும் இருகண்கள் எனத்தகும். இவ்விரு சமயங்களிலும் தோன்றிய அடியார்களும், ஆழ்வார்களும் அருட்பாக்களால் ஆண்டவனைப் போற்றியுள்ளனர்.

தமிழில் உள்ள இத்தகைய பாக்களைத் 'தெய்வத் தமிழ்' எனல் சாலும். ''நற்றமிழ், தீந்தமிழ், பைந்தமிழ், இன்றமிழ், முத்தமிழ், என்றெல்லாம் ஏத்தப்படும் இம்மொழி, 'தெய்வத் தமிழ்' என்றும் கூறுப்படும். 'அலங்கல்' என்பது 'மாலை'. அருட்பிரகாச வள்ளலாம் இராமலிங்க அடிகளார், ''பொதுவில் ஆடுகின்ற அரசே, என் அலங்கல் அணிந்தருளே'' எனப் பாடுவது இவண் சுட்டத்தகும். எனவே ஈண்டு 'அலங்கல்' என்பது, 'பாமாலை'யைக் குறிக்கும். 'தெய்வத் தமிழ் அலங்கல் என்பது, ''தெய்வத்திற்குச் சூட்டப்படும் பாமாலை' என்றும், ''தெய்வத்தோடு தொடர்புடைய தமிழால் ஆன பாமாலை'' என்றும் பொருள்கொள அமைந்தது.

இந்நூலின்கள், ''சங்க இலக்கியங்களில் சைவ சிந்தாந்தம்'' முதல் ''சோலைமலை'' ஈறாகப் பதினெட்டுக் கட்டுரைகள் உள்ளன. இறுதிக்கட்டுரை நீங்கலாக ஏனைய-வெல்லாம், தெய்வத் தமிழ்ப் பாக்களின் அடிப்படையில் உருவானவை. இக்கட்டுரைகளிற் சில, உலகளாவிய மாநாடுகளில் ஆராயப்பட்டவை, சில, பல்கலைக் கழகக் கருத்தரங்குகளிற் வழங்கப்பட்டவை; சில மலர்களில் இடம் பெற்றவை; சில, வானொலிப் பொழிவுகளாகவும் அமைந்தவை. எனவே, ஒரு சில கட்டுரைகளில் 'கூறியது கூறல்' இடம்பெற்றிருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இந்நூலினை வெளியிட நிதியுதவி அளித்த 'திருமலை-திருப்பதித் தேவத்தானம்' இறைபணியாளர் அவர்கட்கும் மற்றவர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

தமிழ்ப் பெருமக்கள் அனைவர்க்கும், குறிப்பாகச் சைவ-வைணவ சமயப் பற்றாளர்கட்குப் பெரிதும் பயன்படும் இந்-நூலினை வாங்கி ஆதரவு நல்க வேண்டுகின்றேன்.

மதுரை-625 001. தமிழ் வாழ்க! அன்பன்,
தி. வ. ஆ. 2025 ச. சாம்பசிவனார்
27—12—1994.

# உள்ளுறை

# 1

# சங்க இலக்கியங்களில் சைவசித்தாந்தம்

## முன்னுரை

சைவ சமயம், இவ்வுலகின்கண் மிகமிகப் பழங்காலந்தொட்டே இருந்துவரும் சிறப்புடையது.[1] சிந்துவெளி நாகரிக காலந்தொட்டுச் 'சிவவழிபாடு' இருந்து வருவது என்பது அறிஞர் பலர் ஒத்துக்கொண்ட உண்மை. எனவே சைவ சித்தாந்தமும் மிகப் பழமையானது என்று இயம்புவதும் ஏற்புடைத்தே[2]

"தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி"[3]

என மணிவாசகர் மொழிவதை நோக்குமிடத்துச்சிவபெருமானை முழுமுதற் பரம்பொருளாக எண்ணி வழிபடுவது, ஏனையோரைவிடத் தென்னக மக்களுக்குப் பெரிதும் உரிமையுடைத்து என்னும் உண்மை புலனாம்.[4] சங்க இலக்கியங்களை ஊன்றி நோக்கினால் அவற்றின்கண் சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகள் இடம்பெறக் காணலாம்[5] அவை குறித்து ஒருசிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

## சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகள்

'சிவம்' என்ற சொல்லிலிருந்து தோன்றியது 'சைவம்'. 'சிவம்' என்ற சொல் செம்மையடியாகப் பிறந்தது. 'செம்மை' என்பது நன்மை, நேர்மை, சிறப்பு, செந்நிறம் எனப் பல பொருள் தரும். சிவத்தோடு சம்பந்தம் உடையது 'சைவம்'. அந்தச் சம்பந்தத்தை அறிந்து, உணர்ந்து, அச்சிவத்தோடு சேர்ந்து அதனால் மக்கள் மேனிலைக்கு உயர்வதற்காக இறைவன் திருவுள்ளம் இருந்தபடி தோன்றியது சைவ சமயம்.[6] அச்சமயம் ஒத்துக்கொள்ளும் முடிபே, சைவர்கட்குச் 'சித்தாந்தம்' எனப்படும்[7]

சங்க இலக்கியங்களிலும் அவற்றின் பின்னர்த் தோன்றிய நூல்களிலும்'சைவசித்தாந்தக்' கருத்துக்கள் இயம்பப்பட்டுள்ளன.

எனினும், சைவ சித்தாந்தக் கொள்கை, சித்தாந்த சமயம் ஆகியவை பற்றிய தெளிவான அமைப்பைத் தம் 'சிவஞான போதம்'வாயிலாகத் தமிழுலகிற்குத்தந்தவர், கி.பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவரான மெய்கண்டாராவர்.

இச் 'சிவஞான போதம்' உணர்த்தும் அடிப்படைக் கொள்கைகளாவன : (1) உலகம் அவன், அவள், அது எனச் சுட்டி உணரப்படுவது தோன்றி நின்று மறைந்து மீளத் தோன்றுவதாய் உள்ளது. ஆதலால், இவ்வுலகை நியமித்து ஒழுங்குபட நடாத்திவரும்முதல்வன்ஒருவன் இருத்தல்வேண்டும். (2) இம் முதல்வன் உயிர்களோடு கலந்து, ஒன்றாய், வேறாய், உடனாய் நின்று, அவை தாம் முற்செய் வினைக்கு ஏற்பத் தொழிற்பட்டு நடக்குமாறு அவற்றைத் தனது ஐந்தொழிலிற்படுத்தி நடத்துவன். அவன், தானும் தன் சத்தியும் எனத் தன்னுள் இருவேறு வகைப்பட நின்று உலகினை நடத்துவன். (3) உடம்புதோறும் காணப்படும் ஒழுங்குபட்ட அறிவு செயல்களுக்கு மூலமாய், யான் என்னும் உணர்வு வடிவில் விளங்குவதே 'உயிர்' அல்லது 'ஆன்மா' எனப்படும். (4) உயிர்களுக்கு அறியாமையை விளைவிப்பதாக இயற்கை மலம் ஒன்றுண்டு. (5) இறைவன் உயிர்களைத் தொழிற்படுத்துகின்றான். அவன், எல்லா உயிர்களுக்கும் உதவுபவனாக இருந்தும், தான் சிறிதும் விகாரப்படுவதில்லை. (6) முதல்வன் 'சிவசத்து'. (7) ஆன்மா 'சதசத்து'. (8) முன்முன் பிறவிகளில் பயன் கருதாது செய்து வந்த சரியை, கிரியை, யோகங்களாகிய தவ முதிர்ச்சியினால், உயிர்க்குயிராக இருந்து உணர்த்திவரும் முதல்வன் ஞானாசிரியனாகத் தோன்றி மெய்யுணர்வை அளித்தருளுவன். உயிர் தத்துவக் கூட்டங்களினின்றும் நீங்கி, முதல்வன் திருவடியில் பிரிப்பின்றி ஒன்றி, இன்புறு நிலை எய்தும். (9) 'யான் எனது' என்ற செருக்கு அற அடங்கி நிற்பின், அருளுக்கு முதலாக உள்ள சிவம், பேரின்பவடிவாய்த் தோன்றி, ஆன்மாவைத் தன் வயப்படுத்தி இன்பூட்டும். அதுவே 'சிவஞானம்' எனப்படும். (10) 'எல்லாம் முதல்வன் செயலே' என உணர்ந்து 'அருள் வழி' நின்றால், ஆணவ வாதனை நீங்கும் 'மெய்யுணர்வு நிலை' உண்டாகும். (11) பிறப்பு, வீடு என்ற இரண்டிலும் முதல்வன் செய்யும் உதவியைச் சிவஞானத்தாற் சிவனைக்

காண்போர் 'சிவஞானிகள்' எனப்படுவர். மெய்யுணர்வின் பயனாய் 'அன்பே சிவமாய்' அமர்ந்திருப்பர். (12) தம்மோடு ஒத்த மெய்யன்பரோடு கூடி நிற்பர். திருக்கோயில்களில் உள்ள திருவுருவங்களையும் சிவவேடத்தையும் 'சிவன்' எனவே தெளியக்கண்டு தொழுவர்.[9]

தொல்காப்பியத்தில் 'சைவ சித்தாந்தம்'

தமிழ் இலக்கண நூல்களில், காலத்தால் பழமையானது, 'தொல்காப்பியம்'. அதன்கண் சமய வழிபாடும் இயம்பப்பட்டிருக்கின்றது. சைவ சித்தாந்தக் கொள்கைகள் பற்றிய குறிப்புக்கள் ஆங்காங்கு மிக மிக நுட்பமாய்க் கண்டு உணர்தற்கேற்ற வகையில் மொழியப்பட்டுள்ளன.[10]

'இறைவன் ஒருவன் உண்டு' எனுங் கருத்துத் தொல்காப்பியர்க்கு உடன்பாடே. "மாயோன் சேயோன், கடவுள், கொற்றவை, தெய்வம், கந்தழி"[11] எனுஞ் சொற்கள் சான்று. இவற்றுள் 'சேயோன்' எனுஞ் சொல், செந்நிறமுடைய முருகனைக் குறிக்கும் எனினும் சிவபெருமானைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். 'கொற்றவை' என்பது உமாதேவியைக் குறிக்கும்.[13]

"நிலந்தீ நீர்வளி விசும்பொ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம்"[14]

என 'விசும்பை'யும் ஒத்துக்கொண்டமையால், இதன்கண் சைவசித்தாந்தக் கொள்கையே இடம் பெற்றதாகக் கொள்ளலாம்.

"பால்பிரிந் திசையா உயர்திணைச்" சொற்களைப் பேசவந்தவிடத்துத் தொல்காப்பியர், பால்வரை தெய்வம்' என்ற ஒன்றையும் குறிப்பர். இதற்குத் தெய்வச் சிலையார், "ஆணும் பெண்ணும் அலியுமாகிய நிலைமையை வரைந்து நிற்கும் பரம்பொருள்" என்பர்.[15] சைவ சித்தாந்தக் கொள்கை, இதன்கண் இயம்பப்பட்டுள்ளமை வெளிப்படை.

"களவொழுக்கத்தின்கண்ணோ, முன்பின் அறியாத தலைவனும், தலைவியும் ஒருவரையொருவர் கண்டு காமுற்று, இயற்கைப் புணர்ச்சிக்கண் இன்பம் துய்த்தற்கும் முற்பிறவியிற்

செய்த நல்வினைப் பயனே காரணம்'' என்பது தொல்காப்பியர் கூற்று.

''ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப''[16]

என்று கூறுவதனால், ''பிறவிகள் பல உண்டு என்பதும், நல்வினை தீவினை உண்டு என்பதும்'' தெளியலாம். இந் நூற்பா, சிவஞானபோதத்தில் வரும், ''அவ்விரு வினையிற் போக்குவரவு புரிய. ஆணையின்''[17] எனும் கருத்தொடு ஒப்புநோக்கத்தக்கது. ''ஆன்மாக்களுக்கு இருவினைப் பயன், முதல்வன் ஆணையால் வரும்'' என்பதே சைவ சித்தாந்தக் கொள்கை. ஈண்டுப் 'பாலது ஆணை' என்பதற்குப் 'பரம் பொருள் ஆணை' எனப் பொருள் கோடலே ஏற்புடைத்து 'உயிர் உண்டு' என்பதைத் தொல்காப்பியர், ''சென்ற உயிரின் நின்ற யாக்கை''[18] என்ற நூற்பாவால் குறிப்பிடுவர் உயிர்கள் அடைகின்ற இன்ப துன்பங்கட்கு அவை முற்பிறவியில் செய்த வினைதான் காரணம். வினை (கன்மம்) இருவகைப் படும். அவை, காரண கன்மம், காரிய கன்மம். முன்பு இயற்கையாய் உள்ள வினையைத்தான் பின்பு ஒருவன் செயற்கையாகச் செய்கிறான். இயற்கையாய் உள்ள வினை 'காரண கன்மம்' என்றும்; செயற்கையாகச் செய்யும் வினை 'காரிய கன்மம்' என்றும் பெயர்பெறும். இவற்றுள் காரணகன்மத்தை 'மூல கன்மம்' எனச் சைவ சித்தாந்தம் கூறும்[19] தொல்காப்பியரும் இக்கருத்துடையவரே

''வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்றா
இன்னதற் கிதுபய னாக வென்று
அன்ன மரபி னிரண்டொடுந் தொகைஇ
யாயெட் டென்ப தொழின்முத னிலையே''

என வரும் நூற்பாவில், 'தொழில் முதல் நிலை' என்பதற்குத் 'தொழிலுக்குக் காரணம்' என்று பொருள். 'தொழிலுக்குக் காரணம்' என்று கூறுவதிலிருந்து, 'தொழிலே - காரியம்' என்பது வெளிப்படை. எனவே 'காரணவினை' (காரகவினை) 'காரிய வினை' என்ற இரண்டையும் இவண் சுட்டினாராதல் தேற்றம்.[21]

"முதல்வன்-சிவசத்து" எனச் சைவசித்தாந்தம் கூறு-வதைத்[22] தொல்காப்பியர்,

"வினையின் நீங்கி விளங்கிய அறிவன்
முனைவன்"[23]

எனும் நூற்பாவால் சுட்டுவர். எனவே, 'இறை, உயிர், தளை' எனச் சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள் உண்மைகளைத் தொல்காப்பியரும் கூறியுள்ளார் என்றறிய முடிகின்றது.

தொல்காப்பியர் "இருதிணைப் பிரிந்த ஐம்பாற்கிளவி"[24] என்று கூறி "அவன், அவள், அது"[25] என்ற விளக்கமும் தருவர். ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் எனும் ஐம்பாலும், மூன்றனுள் அடங்கும். ஆண்பால், பெண்பால் இவற்றின் விரியே 'பலர்பால்', ஒன்றன்பாலின் விரியே 'பலவின்பால்'. ஆதலின், பலர்பாலை-யும், பலவின்பாலையும் நீக்கினால் ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால் எனும் மூன்றே எஞ்சும் என்பது போதர, மெய்-கண்டார் தம் முதற் சூத்திரத்தில்,

"அவன் அவள் அது"[26]

என மொழிந்தார் போலும்.

தொல்காப்பியர், தம் புறத்திணையியலில்,

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்"[27]

என்பர் இதில் வரும் 'மறுவில் செய்தி' என்பதற்குச் சைவ சித்தாந்தத்திற் பேசப்படும் 'சார்புகெட ஒழுகல்' என்ற பொருள் உரைப்பர் அறிஞர்.[28]

இனித் தொல்காப்பியர்,

"மலர்தலை உலகத்து மரபுநன் கறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்து"[29]

எனக் காஞ்சித் திணைக்கண் கழறுவர். 'காஞ்சித்திணை' என்பது வெறும் நிலையாமையை மட்டும் உணர்த்துவதன்றி, வீட்டின்பம் ஏதுவாக அதனைச் சான்றோர் சாற்றும் நன்-

னெறியையும் உடையது என்பர் உரையாசிரியர்கள். ஈண்டுக் 'காடு' என்னும் இப்பெயர், இடத்தின் நிகழ்பொருளாகிய முதல்வன் சிவபெருமானையே குறிக்கும் என்றும், இக்கருத்தைச் சிவஞானபோதம் முதற் சூத்திரம், ''ஒடுங்கி மலத்துளதாம் அந்தம் ஆதி என்மனார் புலவர்'' என்பதனாற் பெறவைக்கிறது என்றும் காட்டுவர் அறிஞர்.[30]

இல்லறத்தின் மாண்பினைப் பல்வேறு நூற்பாக்களில் மொழிந்த தொல்காப்பியர், அதன் முடிந்த முடிபு 'வீடு பேறு' என்பதைப் பின்வரும் 'கற்பியல்' நூற்பாவால தெளிவுபடுத்துவர் :

''காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே''[31]

இங்குச் சுட்டப்படும் 'சிறந்தது' என்பதற்கு 'அறம் பொருள் இன்பத்திற் சிறந்த வீட்டின்பம்' என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். எனவே 'சிறந்தது பயிற்றல்' என்பதற்கு ''வீட்டு நெறிக்கான தவத்தில் இடையறாது தம்மைப் பழக்குதல்'' என்று பொருள் காண்டலும் பொருந்தும்.

எல்லாவற்றிற்கு மேலாகக் 'கடவுள் வழிபாடு' இன்றியமையாதது எனச் சைவ சித்தாந்தம் கூறும் கருத்தினைத் தொல்காப்பியரும், ''கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே'' என்ற நூற்பாவால் குறிப்பிடுவர்.[32]

சங்க இலக்கியத்தில் சைவ சித்தாந்தம்

சைவ சித்தாந்தத்திற் பேசப்படும் இருவினைகள், அவற்றின் பயனகள், ஊழ் ஆகியனபற்றிச் சங்க இலக்கியங்கள் விரிவாகப் பேசும். ''இருவினையின் போக்குவரவு புரிய, ஆணையின்'' எனும் சிவஞானபோதக் கருத்து[33] சங்கப் பாக்கள் பலவற்றிலும் காணப்படுவதாம்.

''ஒரு வீட்டில் சாக்காட்டுப் பறையும், மற்றொரு வீட்டில் மண முழவும் ஒலிக்க, ஒருத்தி தன் கணவனோடு இன்பம் நுகர, வேறொருத்தி தன் கணவனையிழந்து கண்ணீர் வடிக்க, இங்-

னம் இருவேறு நிலைகளுக்குக் காரணனாக இருப்பவன் யாவன்? அவனே 'படைத்தோன்' ஆவன். எனவே வீட்டின்பம் தரும் நல்ல செய்கைகளைச் செய்க'' என்ற பொருள்பட வருவது, பக்குடுக்கை நன்கணியார் பாடிய 'ஓரில் நெய்தல் கறங்க' எனும் புறப்பாட்டு.[34]

இதனால், நல்வினை தீவினைப் பயன்கள் உண்டு என்பதும், அவற்றிற்கேற்பப் பிறப்பு இறப்பைக் கொடுப்பது இறைவனின் அருட்சக்தி ஆணையே என்பதும் பெறப்படும்.

''மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்''

''அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவர்''

''செல்லும் உலகத்துச் செல்வம்''

''செய்குவம் கொல்லோ நல்வினை யெனவே''

''நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம்''

''இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்''[35]

எனும் சங்க இலக்கியப் பாக்களால், வினை உண்மையும் (பாசம்), உயிர் உண்மையும் (பசு) தெளியப்படும்.

''நல்லறம் செய்வோர் நல்லுலகு அடைவர் அல்லறம் செய்வோர் அருநரகு அடைவர். இவ்வுண்மை உணர்ந்தோரே மெய்யுணர்வு தலைப்பட்ட உரவோர் ஆவர். அருளும் அன்பும் நீங்கி வாழ்வாராயின், நீங்கா நிரயமே சேர்வர். இம்மைச் செய்த வினைகள், மறுமையில் பயனூட்டும்; வினைக்கேற்பப் பிறவிகள் அமையும். எனவே நல்லனவே செய்யவேண்டும்; இயலாதென்றால், அல்லனவேனும் செய்யா தொழில்தல் வேண்டும். நல்லன செய்தால் நன்மையே கிட்டும்; தீயன செய்தால் தீமையே கிட்டும். 'நல்வினை என்பதொன்றில்லை தீவினை என்பதொன்றில்லை' என்று கூறுவராயின் அத்தகையாளரை நண்பராகக் கொள்ளற்க; பிறத்தலும் இறத்தலும் மாறிமாறி நிகழ்வன. 'நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆருயிர் முறைவழிப் படூஉம்' என்பது உண்மை''.[36]

"நல்வினைப் பயன் உண்டு; தீவினைப் பயன் உண்டு" எனும் உண்மைகளைப் பின்வரும் புறநானூற்றுக் கருத்துக்கள் வலியுறுத்தும் :

"இவ்வுலகத்துச் செய்யப்பட்ட நல்ல அறத்தின் பயனைத் தெய்வ உலகத்துப் போய் நுகர்தல் உண்டு. நல்வினைப் பயனாகவே விண்ணுலகத்தவரும் இன்பத்தைப் பெறுவர்; யானை வேட்டைக்குப் போவோர் யானையையும் எளிதாகப் பெறுவர்; குறும்பூழ் வேட்டைக்குப் போவோர் அதுபெறாது வறிய கையராயும் திரும்புவர் எல்லாம் வினைப்பயனே; எவ்வாற்றானும் நல்வினை செய்தலே தக்கது. திங்கள் வளர்பிறையாக வளர்கின்றது. பின் அதுவே தேய்பிறையாகத் தேய்கின்றது. வளர்ந்ததொன்று பின் குறைதலும், குறைந்ததொன்று பின் வளர்தலும் உண்டன்றோ? அவ்வாறே பிறந்ததொன்று பின் இறத்தலும், இறந்ததொன்று பின் பிறத்தலும் உண்டு "[37]

இப் புறப்பாடற் கருத்துக்களைப் பிற சங்க இலக்கியங்களிலும் காணலாம்.

"தொல்வினைப் பயன் துய்ப்ப"

"அருந்தவம் ஆற்றியார் நுகர்ச்சிபோல்"

"பயிலியது கெழீஇய நட்பு"[38]

இங்ஙனம் உயிரைப்பற்றியும் (பசு), இருவினைகள் பற்றியும் (பாசம்) கூறும் சங்க இலக்கியங்கள், சைவ சித்தாந்தம் கூறும் முழுமுதற்கடவுளாம் சிவபெருமானைப் பற்றியும் பரக்கப் பேசுவன காணலாம்.

"சிவபெருமான், பால்போலும் பிறை நுதல் போலப் பொலிந்த திருமுடியினையும், நீலமணி போலும் கரிய கழுத்தினையும் உடையவன்; விடைக்கொடி கொண்டவன்; மழுப் படை தாங்கியவன்; மலையை வில்லாகவும், பாம்பை நாணாகவும் கொண்டு அம்பினால் முப்புரம்எய்தவன் அமரர்க்கு வெற்றியைக் கொடுத்தவன்; நெற்றிக்கண் கொண்டவன்; காளையை ஊர்தியாகக் கொண்டவன்; சூலாயுதம் பிடித்த காலக் கடவுள்; பிறங்கு நீர்ச் சடைக் கரந்தவன்."[39]

இவை தவிரப் புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை, பதிற்றுப்பத்துஆகியவற்றின் கடவுள் வாழ்த்தாக அமைந்த பாடல்களும் சிவபெருமானைப் பற்றியனவே.[40]

''முதல்வன், தானும் தன் சத்தியுமாய் எனத் தன்னுள் இருவேறு வகைப்பட நின்று உலகினை நடத்துபவன்'' என்பது சைவ சித்தாந்தம்.[41]

இக் கருத்துக்கியைய, 'உமையோடு கூடிய சிவபெருமானை'ப் பற்றிச் சங்க இலக்கியங்கள் விரிவாகப் பேசும்:

''பெண்ணுரு ஒருதிறன் ஆகின்றது, அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்''

''நீல மேனி வாலிழை பாகத் தொருவன்''

''கொடிபுரை நுசுப்பினாள்; வண்டரற்றுங் கூந்தலாள்;
முலையணிந்த முறுவலாள்''

''கானமர் செல்வி அருளலின்''

''ஈர்ஞ்சடை அந்தணன் உமை அமர்ந் துயர்மலை
இருந்தனன்''

''உமை அமர்ந்து விளங்கும் செல்வன்''

''துணங்கையம் செல்வி''[42]
கலித்தொகைக் கடவுள் வாழ்த்தில் வரும்,
''ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீமடுத்துக
கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி
மாறாப் போர் மணிமிடற் றெண்கையாய்''[43]

என்பதற்கு,

''இறைவன் தனது நினைவு மாத்திரையானே உலகத்தை அழித்தலின அவன் நினைத்ததனை நினைந்தாங்கே செய்து முடிக்கும் அவனது சத்தியின் கூறுகளைக் கூளிகளாக உருவகித்து''[44]

என்று உரைகூறுவர் அறிஞர்.

சைவ இலக்கியங்களில் பேசப்படும் சிவபெருமானின் செயல்கள், சங்க இலக்கியங்களிலும் இயம்பப்பட்டுள்ளன. அவற்றுள் சில :

சிவபெருமான், மேருமலையை வில்லாக வளைத்தது; இராவணன் கயிலையைப் பெயர்த்த போது அவனை அடர்த்து அருளியது; கல்லாலின் கீழிருந்து உரைத்தது; திரிபுரம் எரித்தது; நஞ்சுண்டது; கயிலையில் வீற்றிருப்பது என்பன சுட்டத்தகுவன.[45]

சைவ சித்தாந்தம், "சிவபெருமானே அனைத்திற்கும் முதல்வன்" என்றியம்பும். 'அந்தத்தைச் செய்கின்றவன் ஆதியாவன்' என்பது சிவஞானபோதம்.[46] இதே கருத்தைச் சங்க இலக்கியங்களிலும் காணலாம்.

"நன்றாய்ந்த நீணிமிர்சடை முதுமுதல்வன்"

"நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போ டைந்துடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக"[47]

இவண் சுட்டப்படும் 'மழுவாள் நெடியோன் தலைவன் ஆக' என்பதற்குத் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார்,

"பஞ்ச பூதங்களையும் படைத்த மழுவாள் நெடியோனான சிவபெருமான் தலைவனாக உள்ள தெய்வங்களுக்கு மாற்ற முடியாத மரபின்படி உயர்ந்த பலியைக் கொடுப்பதற்காகச் செல்வந்தர்கள் தங்கள் நாள்மகிழ் இருக்கையைவிட்டு வருகிறார்கள்"[48]

என்று உரைகூறுவது எண்ணத்தக்கது.

"முக்கண்ணனே - இறைவன். அவன் உலகுகளைப் படைக்கக் கருதியபோது அவனால் முதன்முதல் படைக்கப்பட்டவன் அயன்" என்று உரைக்கின்றது கலித்தொகை.[49]

"அருவாய் நிற்கும் சிவபெருமான் அடியார் பொருட்டு உருவாயும் காட்சி யளிப்பன்; அதற்கென்றே — சிவபெருமான் திருக்கோயில்கள்! ஆண்டுச் சென்று வழிபடவேண்டும்" என்பது

சைவ சித்தாந்தம். இதற்கு அரண் செய்வன, பின்வரும் கருத்துக்கள்:

''ஆறறி அந்தணர்க்கு'' எனும் கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாவிற்கு உரைகூறவந்த நச்சினார்க்கினியர்,

> ''இது திருமேனிகொண்டு நின்றாயாயினும், வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாய் என்றது''[51]

என்று உரைகூறுவது உன்னத்தக்கது.

சிவபெருமானுக்கென்று திருக்கோயில்கள் இருந்தன; ஆண்டு வழிபாடுகள் நிகழ்த்தப்பட்டன என்பதைச் சங்க இலக்கியங்கள் கூறும்.

கோயில்களில் திருவிழா நடக்குங்கால் 'கொடியேற்றல்' உண்டு.[52] சிவபெருமானுக்குரிய திருவிழாக்களில் சிறப்பானது 'திருவாதிரை விழா'. அவ் விழாவைப் பராசத்திக்கு உரியதாகச் சிலர் கருதினர்.[53] மார்கழித் திங்கள் மதி நிறைந்த ஆதிரை நாளில் கன்னியர் நோன்பு தொடங்கித் தைத்திங்கள் பூச நாளில் முடிப்பர். ஆதிரைக்குத் தெய்வமாம் சிவனுக்கு விழா எடுப்பர்.

> ''மாயிரும் திங்கள் மறுநிறை யாதிரை
> விரிநூல் அந்தணர் விழவு தொடங்க''[54]

என்பது பரிபாடல். இவ்வாறே மதுரை மாநகரில் மழுவாள் நெடியோனாம் சிவபெருமானுக்கு அந்திவிழா எடுத்துப் பூவின ராகப் புகையினராகத் தொழுது பரவினர் என்று மதுரைக் காஞ்சி கூறுகிறது.[55] இதனால் சிவனுக்கு 'ஆதிரையான்' என்ற பெயருமுண்டு.[56]

'நீலமேனி வாலிழை பாகத்து' எனும் ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்துப் பாடலுக்கு,

> ''நீலநிறமான திருமேனியினையும், தூய அணிகலன்களையும் உடைய உமையைத் தன் கூறாகவுடைய ஒப்பற்ற சிவபெருமானுடைய இரண்டாகிய திருவடிநீழற்கீழ் மூவகைஉலகமும் முறையே தோன்றி நிலவு-

> கின்றன. எனவே நாமும் அம் முதல்வனை வணங்கி உய்வோமாக''[57]

என்று இரா. தண்டாயுதம் உரைகூறுவது இங்குக் கருதத் தக்கது.

''எல்லாம் சிவன் செயலே'' என்று உணர்ந்து அருள்வழி நின்றால், மெய்யுணர்வு நிலை கிட்டும். அதன்பயன் - முத்தி நிலையே![58]

''தாளில் தாள்நிழல்''

''எல்லா உயிர்க்கும் ஏமம்''[59]

என்பனவற்றில் வரும் தாள்நிழல், ஏமம் என்பன முத்திநிலையைச் சுட்டுவன.

முருக வழிபாடு

சிவபெருமானின் மறுவடிவமே முருகப்பெருமான். இம் முருகப்பிரானைக் குறித்துச் சங்க இலக்கியங்கள் மிகமிக விரிவாகப் பேசும். தொல்காப்பியத்தில் குறிஞ்சி நிலக் கடவுளாகச் 'சேயோன்' சுட்டப்பட்டுள்ளமை முன்பே காட்டப்பட்டது. பத்துப்பாட்டில் முதலாவதாக அமைந்திருப்பது திருமுருகாற்றுப் படை. இதுவே, அந் நூற்குக் கடவுள் வாழ்த்துப் போல்வது.[60]

'ஆல்கெழு கடவுட் புதல்வன்', 'மலைமகள் மகன்', 'கொற்றவை சிறுவன்', 'பழையோள் குழவி', 'இமையா முக்கட் செல்வன்' என்றெல்லாம் முருகனை ஏத்தும் இத் திருமுருகாற்றுப்படை ''சமய இலக்கிய வரலாறுகளில் முதன்மைப் பாட்டாய் விளங்குகிறது'' எனலாம்.[61]

எட்டுத் தொகையுள் ஒன்றான பரிபாடலில் முருகனுக்குரிய பாடல்கள் எட்டு. (5, 8, 9, 14, 17, 18, 19, 21). குறுந்தொகையில் கடவுள் வாழ்த்தும் முருகனைப் பற்றியதே!

''நெடுவேள், சேஎய், முருகு, விறல்வேள், ஆலமலர் செல்வன் மகன், வேலன், இறை, அருந்திறற் கடவுள், மலையுறை கடவுள், குமரன், செவ்வேள், மாஅல் மருகன்'' எனும்

சொற்கள் முருகனைக் குறித்து எழுந்தவை. 'கந்து' என்பதே 'கந்தன்' ஆயிற்று என்று கூறுதற்கும் இடனுண்டு.

கடுவன் இளவெயினனார், முருகன்பால் வேண்டுவதுஇது:

''யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே''[63]

இப்புலவர் பெருமான், முருகனிடம் முதற்கண் வேண்டியது, வீடுபயத்தற்கேதுவாய அவனருளைத்தான்! இரண்டாவது வேண்டியது, அவ்வருளைப் பெறுதற்கு ஏதுவாய்த் தன்மாட்டு உளதாக வேண்டிய அன்பை; மூன்றாவது வேண்டியது, அவ்வன்பால் செய்யத் தூண்டும் அறத்தையே! அருளும் அன்பும் அறனும் வேண்டும் என்பது இம்மூன்றும் சங்கிலித் தொடர் போல் பிணைக்கப்பெற்று, வீடுபேறு எய்தத் துணை நிற்பன.

திருமுருகாற்றுப் படையில் வரும், 'இன்னே பெறுதிநீ முன்னிய வினையே' என்பதும் வீடுபேறு குறித்ததே. 'சேவடி படரும் செம்மல்', 'பெறலரும் பரிசில்', 'நின் அடி உள்ளி', 'நோன்தாள்' என்பன, சைவசித்தாந்தக் கருத்துக்களோடு எண்ணத்தக்கன[64] ''எல்லாம் சிவன் செயலேஎன்று உணர்ந்து அருள்வழி நின்றால் ஆணவ வாதனை நீங்கும்; மெய்யுணர்வு நிலை உண்டாகும்; அதன் பயன் வீடுபேறு'' எனும் சைவ சித்தாந்தக் கருத்து மேற்குறித்த கடுவன் இளவெயினனார் பாடலில் பிறங்கி நிற்றல் காணலாம்.

திருக்குறளில் 'சைவ சித்தாந்தம்'

சங்க இலக்கியங்களோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்கதாகிய திருக்குறளில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் மிகுதியாக உண்டு.

''இருவேறு வினைகள் உண்டு; வினைக்கேற்பச் சாவும் பிறப்பும் மாறிமாறி வரும்; உயிர், உடம்பின் வேறு; உயிர்க்கு இருவினைத் தொடக்கு, முன் செய்வினை, பின் பிறப்பில் முதல்வனே ஊட்டுவன்; ஆதலின் மூல மலத்தில் வயப்பட்டு

நிற்கும் உயிர், 'யான்' 'எனது' என்று செருக்குறும்; அச் செருக்கு அற்றால் இறைவனது திருவடி அடையலாம்.''[66]

வள்ளுவர் கூறும் கடவுள் வாழ்த்துச், சைவ சித்தாந்தத் தோடு பெரிதும் ஒப்புமை உடையது. முதற்குறளில் அவர் கூறும் 'ஆதி பகவன்' என்பதே 'உமைபாகனாம் சிவபெருமானை'யே குறிக்கும்.[67] 'எண்குணத்தான்' என்பதற்குப் பரிமேலழகர் கூறும் உரை ஒன்றே 'அது சைவ சித்தாந்தம்' எனும் கொள்கைக்கு அரணாகும்![68] 'நற்றாள் தொழாஅர்', 'மாணடி சேர்ந்தார்'; 'தாள் சேர்ந்தார்' எனும் தொடர்களால்[69] சிவபெருமானின் உருவத் திருமேனியையும், அவனை வழிபடுவதால் உண்டாகும் வீடுபேற்றையும் சுட்டியதாகவே கொள்ள முடிகின்றது.

திருக்குறளில் 'மெய்யுணர்தல்' அதிகாரத்திற்குப் பின் 'அவாவறுத்தல்' வைத்ததும் சைவ சித்தாந்தக் கொள்கையை வற்புறுத்தற்கேயாம். சிவஞான போதத்தில் எட்டாம் நூற்பாவையடுத்து ஒன்பதாம் நூற்பாவை ஊன்றி நோக்கினால் இவ்வுண்மை தெளியவரும்.[70]

சுருங்கக்கூறின், 'திருக்குறள் உட்கிடை சைவ சித்தாந்தமே' என்னும் அறிஞர் கூற்றுக்குச் சான்றுகளும் உண்டெனலாம்.[71]

திருவள்ளுவரும், 'பதி, பசு, பாச' உண்மைகளை உரைத்துள்ளார் என மேனாட்டறிஞர் ஜி யு. போப் ஐயர் கூறுவதும் இவண் எண்ணத்தக்கது.[72]

பிற நூல்களில் 'சைவ சித்தாந்தம்'

சங்க காலத்தை அடுத்துத் தோன்றிய சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களிலும் சைவசித்தாந்தக் கருத்துக்கள் காணப்படுகின்றன.

''பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்''[73]

எனச் சிவபெருமானுக்கும், முருகனுக்கும் கோயில்கள் இருந்தமையைச் சுட்டும் இளங்கோவடிகள், சிவபெருமானைப் 'பிறவா

யாக்கைப் பெரியோன்' என ஏத்துவதும் எண்ணத்தக்கது. செங்குட்டுவன், வடபுலப் பயணம் மேற்கொண்டபோது,

''நிலவுக் கதிர்முடித்த நீளிருஞ் சென்னி
உலகு பொதியுருவத் துயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலையொடு புனைந்து
இறைஞ்சாச் சென்னி இறைஞ்சி வலங்கொண்டு''[74]

சென்றதாகக் கூறுவர். ஈண்டும், ''உலகங்களையெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் உருவமுடைய, ஏனைக் கடவுளரினும் உயர்ந்த முழுமுதல்வன் சிவபெருமான்'' என்று குறிப்பிடுகின்றார் என்பதும் உன்னத்தக்கது

நூலின் தொடக்கத்தில் ''திங்களைப் போற்றுதும், திங்களைப் போற்றுதும்'' என்று ஏத்துவதுகூடத் திங்களைச் சடைக்கரந்த சிவபெருமானை வாழ்த்தியதாகக் கொள்ளவும் இடனுண்டு

பௌத்த சமயக் கருத்தை எடுத்துரைக்க வந்த மணி-மேகலையும், 'நுதல்வழி நாட்டத் திறையோன் முதலா' என முக்கணானையே முதற்கண் வைத்துப் பேசக் காணலாம்.[75] சைவ வாதி ஒருவனை நோக்கி, ''நின் தெய்வம் எத்தகையது?'' என்று வினவியதாகவும், அதற்கு அவன் விடையிறுத்ததாகவும் பின்வருமாறு பகர்கின்றார் சாத்தனார்:

''நின்ற சைவ வாதிநேர் படுதலும்
பரசுநின் தெய்வம் எப்படித் தென்ன
இருசுட ரோடிய மானனைம் பூதமென்
றெட்டு வகையு முயிரும், யாக் கையுமாய்க்
கட்டிநிற் போனும் கலையுருவி னோனும்
படைத்து விளையாடும் பண்பி னோனும்
தன்னில் வேறு தானொன் றிலோனும்
அன்னோ னிறைவ னாகுமென் றுரைத்தான்''[76]

எனவே, மணிமேகலை காலத்திலேயும், சைவ சமயக் கருத்து மக்களிடையே வேரூன்றியிருந்தது என்பது போதரும்.

முடிவுரை

இதுகாறும், சங்க இலக்கியங்களில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் எவ்வாறெல்லாம் இடம் பெற்றுள்ளன என்பது ஓரளவு விளக்கப்பட்டன. இத்தகைய சைவ சித்தாந்தத்தை மேலை நாட்டினரும் வியந்து போற்றியுள்ளனர் என்பதும் இவண் சுட்டத்தகும்.[77]

மெய்கண்டார், சைவ சித்தாந்தக் கருத்துக்களை ஒன்றாகத் தொகுத்துச் 'சிவஞான போதம்' எனும் நூல்வடிவில் அருளிச் செய்தவரேயென்றாலும் அவருக்கும் நெடும் பல்லாண்டுகட்கு முன்பே. நம் தமிழகத்தில் சைவ சித்தாந்தக் கருத்துக்களை மக்கள் அறிந்து, சிவநெறியைப் பின்பற்றி வந்துள்ளனர் என்று கூறுவது தவறாகாது. "இவ் வகையில். தூய்மையான தமிழ்நாட்டுச் சமயம் சைவ சித்தாந்தம் ஆகும்"[78] என அறிஞர் கூறுவதும் ஏற்புடைத்தே.

சான்றெண் விளக்கம்

1) "As to the Saivism of history, it is clearly a blend of two lines of development, namely the Dravidian (or pre-Aryan) and the Aryan, for the complex figure of the God, Siva is made up of both Vedic & Dravidian elements".

- Mariāsusai Dhavamony, "Love of God - According to Saiva Siddhanta" p. 103.

"Shaivism, like one of the other forms of Hinduism, spread in the past to other parts of South-east Asia, including Java £ Bali, Champa & Cambodia".
-Encyclopaedia Britannica, Vol. 20, p. 432.

2) அ "Among the many revelations that Mohenjo Dara and Harappa have had in store for us, none perhaps, is more remarkable than this discovery that Saivism has a history going back to the chalcolithic age or perhaps even further still and that it then takes its

place as the most ancient living faith in the world"
- Sir John Mārshall, 'Mohenjo Dara the Indus Civilization', Vol. I. p. VII.

ஆ) "தொன்மையான காலந்தொட்டே தொடர்ந்து இந்துக்களின் எண்ணத்தையும் வாழ்வையும் உருவாக்கிய சமயக் கொள்கைகளில் சைவமும், வைணவமும் சாத்தமும் குறிப்பிடத்தக்கவை".

- ர ராமானுஜாசாரி, சைவ சித்தாந்தம், ப. 1.

3) திருவாசகம்; போற்றித் திருவகவல்.

4) 'நான்கு வகைச் சமயஞானங்களில் சைவ சித்தாந்தம் ஒன்று. இது மற்ற எல்லாக் கொள்கையிலும் தொன்மை வாய்ந்தது. இது தமிழ்நாட்டில் சிறப்பாகத் தோன்றி வளர்ந்தது. வளர்ச்சி முழுவதும் தமிழ்நாட்டினுடையதேயாகும்.
சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், சமயங்கள், ப. 22.

5) "Saiva Siddhanta may be traced back to the Vedas and Saiva Agamas on one side and Tamil works ranging from the Tholkappiyam and Sangam classics".
- V.A Devasenapathi, 'Foreward', சைவ சமய விளக்கு, p.x.i.

6) அ) ந. வச்சிரவேல் முதலியார், 'சைவம்', சைவமும் வைணவமும், ப.1

ஆ) அருணாசலம், சைவ சமயம் ஓர் அறிமுகம், ப.1

இ) கா. சுப்பிரமணிய பிள்ளை, சைவ சித்தாந்த உண்மை வரலாறு, பக். 5,26.

ஈ) சைவ சித்தாந்த மகா சமாசம், சைவசமயச் சொற்பொழிவுகள், பக் 175, 176.

7) சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், சமயங்கள், ப. 23.

8) "The Sivananapotam is the basic and most important text of the philosophy of Tamil Saivisim, composed by Meykanta Tevar about A. D. 1221. It contains the first systematic exposition of the theology of Tamil Saivism".
— Mariasusai Dhavamony, Ibid, p.200.

9) அ) க. வச்சிரவேல் முதலியார், (மு கு ) பக்.25-34.
ஆ) கா. சுப்பிரமணியபிள்ளை, சிவஞானபோதப் பொழிப்புரை, (கழகம்)

இ) தி. நாராயணசாமி நாயுடு, (வெளியீடு) சிவஞான சித்தியார்.

(A) Sivagnana Botham of Meikanda Deva, Kazhagam, 1984, (By J.M.N. Pillai)

10) "The Tholkappiyam, the earliest Tamil literary source now available, contains some valuable information concerning South Indian religion... Expressions such as Iraivan (he who resides in all beings) Katavul (he who transcends all beings), Kantali (that which exists without support) & Katavul valthu (the Praise of god clearly express the belief is a supreme Being".

– Mariasusai Dhavamony, Ibid, pp.109-110.

11) தொல்காப்பியம்: அகத். 5,20; புறத், 4,27.

12) ௸ அகத்.5 (நச்சர் உரை)

13) மறைமலையடிகள், தமிழர் மதம், பக். 113, 115.

14) தொல்காப்பியம், சொல்லதிகாரம் உரைக்கோவை முதற்பாகம் (ப.ஆ.) ஆபிரகாம் அருளப்பன், வி. ஐ. சுப்பிரமணியம், ப.266.

16) தொல்காப்பியம், களவியல் 2.

17) சிவஞான போதம், சூத்.2.

18) தொல்காப்பியம், புறத்.13.

19) ந. சுப்புரெட்டியார், சைவ சமய விளக்கு, பக்.200 202.

20) தொல்காப்பியம்; சொல்: வேற்றுமை மயங்கியல் 29.

21) ந. சுப்பு ரெட்டியார் (மு.கு) ப. 203.

22) சிவஞான போதம், சூத். 6.

23) தொல்காப்பியம், மரபியல் 23.

24) தொல்காப்பியம், பெயரியல் 7.

25) ஷை 8, 13.

26) சிவஞானபோதம், சூத். 1.

27) தொல்காப்பியம், புறத். 16.

28) க. வச்சிரவேல் முதலியார், திருக்குறள் துலக்கும் ஒழுக்க நெறி, ப. 29

29) தொல்காப்பியம்: புறத். 24.

30) க. வச்சிரவேல் முதலியார், 'சைவம்' (மு.கு) ப. 8

31) தொல்காப்பியம்: கற்பியல்: 51, (நச்சர் உரை)

32) ஷை புறத் 27.

33) சிவஞான போதம், சூத். 2.

34) புறநானூறு 194 (உ.வே.சா. பதிப்பு)

35) ஷை 27, 5, 18, 214, 193, 134.

36) ஷை 29, 5, 134, நெய்தற்கலி, 1., புறம் 27, 195, 14, 29, 27, 19.

37) ஷை 174, 38, 214, 27.

38) நெய்தற்கலி 1; கலித்தொகை 30; குறுந்தொகை 2.

39) புறநானூறு 91; பாலைக்கலி 26; புறம் 56; கலித். 2; ம. காஞ்சி 453; புறம் 55; திருமுருகு 151-154; ப. பத்து க. வாழ்த்து; கலித். 150.

40) எஸ். வையாபுரிப் பிள்ளை (ப. ஆ) சங்க இலக்கியம் பக். 1, 2, 3, 4, 7.

41) சிவஞான போதம், சூத். 2.

42) புறநானூறு க. வாழ்த்து; ஐங்குறுநூறு க.வா., கலித். க.வா.

43) கலித்தொகை க. வாழ்த்து.

44) ஷை பெருமழைப்புலவர் உரை (கழகம்) ப. 3.

45) புறநா. 198, 91; கலித். 81; திருமுரு. 256; அகநா. 181; புறநா. 198, சிறுபா. 96-99; பாலைக்கலி 1; திருமுரு. 151; புறநா. 55; கலித். 2; பரிபாடல் 5; புறநா. 91; மலைபடு. 83; சிறுபா; 205.

46) சிவஞான போதம் சூ. 1.

47) புறநா. 166; ம. காஞ்சி. 453-555.

48) தெ. பொ. மீனாட்சிசுந்தரன், பத்துப்பாட்டு ஆய்வு, ப. 81.

49) கலித்தொகை 1; 1-24.

50) சிவஞான போதம் சூ. 12.

51) கலித். க. வாழ்த்து, நச்சர் உரை (கழகப்) ப. 2.

52) அ) ம. காஞ்சி. 366.

ஆ) ச சாம்பசிவன், மாநகர் மதுரை, பக் 37, 38.

53) இரா. சாரங்கபாணி, பரிபாடல் திறன், ப, 177,

54) பரிபாடல் 11.

55) ம. காஞ்சி 455-466.

56) கலித்தொகை 150.

57) இரா. தண்டாயுதம், சங்க இலக்கியம் (எட்டுத் தொகை) ப. 283.

58) சிவஞானபோதம் சூ. 10.

59) அகநா. க. வாழ்த்து; புறநா. க. வாழ்த்து.

60) இரா. தண்டாயுதம், சங்க இலக்கியம் (எட்டுத்தொகை) ப. 53.

61) திருமுரு. 256, 257, 258, 259, 151; பெரும்பா. 75; புறநா. 23.

62) பார்க்க. இரா. சாரங்கபாணி, பரிபாடல் திறன்.

63) பரிபாடல் 5

64) திருமுரு. 62, 279, 4, 295.

65) சிவஞானபோதம் சூத். 10, 11.

66) திருக்குறள் 5, 339, 338, 337, 346, 10.

67) ச. சாம்பசிவன், 'வள்ளுவர் கூறும் கடவுட் கொள்கை'; திருக்கோயில், நவம்பர், 1974.

68) திருக்குறள் 9 (பரிமேலழகர் உரை).

69) திருக்குறள் 2, 3, 7, 8, 9.

70) கு. சுந்தரமூர்த்தி (ப. ஆ) சிவஞான போதமும் சிவஞான முனிவர் சிற்றுரையும், ப. 11.

71) க. வச்சிரவேல் முதலியார், திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே.

72) "And the Rev. Dr. Pope in his short paper on Ethics of Kural holds that Thiruvalluvar bases his ethics on the grand truths of Tripadartha, Pati, Pasu & Pasa." — J. M. Nalluswami Pillai, 'Studies in Saiva Siddhanta', p.147.

73) சிலப்பதிகாரம் : 5 : 169—170.

74) ஷ 26:54—57.

75) மணிமேகலை 1:54.

76) ஷ 27 87 95.

77) "Saivism is the old pre-historic religion of South India, essentially existing from pre-Aryan times and holds sway over the hearts of Tamil people". —'Translation of Thiruvasagam' - by Dr. G. U. Pope. ஆதாரம் : சைவசமயச் சொற்பொழிவுகள், சைவசித்தாந்த மகாசமாசம், சென்னை, 1959, ப.98.

78) Ref. C. Gowdie, observes thus: "This system (Siddhanta) possesses the merits of great antiquity; in the religious world it is heir to all that is most ancient in Southern India. It is a religion of the Tamil people by the side of which every other form

is of comparatively foreign origin. As a system of religious thought, as an expression of faith and life, the Saiva Siddhanta is by far the best that South India possesses."

- 'Introductin and History of Saiva Siddhanta,' 'Collected Lectures on Saiva Siddhanta', Annamalai University, Annamalai Nagar, 1965. p. 3.

78) அ) சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், சமயங்கள் (மு. கு). ப. 22.

ஆ) "The Saiva Siddhanta System is the most elaborate, influential and undoubtedly the most intrinsically valuable of all the religions of India. It is peculiarly the South Indian, and Tamil religion."

- G. U. Pope, See: 'Introduction and History of Saiva Siddhanta,' Ibid, p. 1.

# 2

# புராண இலக்கியம்

## முன்னுரை

இலக்கியம் பலவகைப்படும். செய்யுள், உரைநடை எனப் பொதுவாக இரு வகைப்படும். எனினும் காப்பியம், சிற்றிலக்கியம், நாட்டுப்புறப்பாடல், புராணம், நாவல், சிறுகதை எனப் பல உட்பிரிவுகளாகவும் பகுக்கலாம். இவற்றுள் 'புராண இலக்கியம்' பற்றி ஒரு சிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

## 'புராணம் – ஒரு விளக்கம்

''புராணம் வடசொல். புரா - நவம் என்னும் இரு சொற்களின் இணைப்பே புராணம்'' என்பர் அறிஞர்.[1] பழமையாகவும், புதுமையாகவும் இருப்பதால் புராணம் எனப்பட்டது. ''புராணம் என்னும் சொல் பழமை மரபுடையது என்னும் பொருட்டு அதனை ஈண்டுப் பழமை சான்ற வரலாறுகளுடைய நூலுக்கேற்றி வழங்கலாயிற்று'' என்பர் திரு நாராயணையங்கார்.[2] ''எது தொன்றுதொட்டு இன்றுவரைக்கும் பரவி இருக்கின்றதோ அதுவே புராணம்'' என்பது வாயு புராணம்.[3] ''பழமை, பழங்கதை, 64 கலையுள் ஒன்று, வியாசரால் சொல்லப்பட்ட நூல்கள்'' என்று விளக்கும் தமிழ் அகராதி (லெக்சிகன்).[4] புராண நூல்களில் அடங்கியுள்ள கருத்துக்கள் பழயவைகள்; ஆயினும் கேட்கக் கேட்கப் புதியனவாகத் தோன்றும்; எனவே புரா நவம் எனப்பட்டது[5] புராணங்களுக்கு ஐவகை இலக்கணம் கூறுவர் பிற்காலத்தார் : (1) சர்க்கம (சிருட்டி) (2) பிரதி சர்க்கம் (அழித்து மறுபடி உண்டாக்குதல்) (3) வம்சம்(தெய்வபரம்பரை) (4) மன்வந்தரம் (மனுக்களின் காலம்) (5) வம்சியானு (அரசவமிச வரலாறு).[6]

சுருங்கச் சொன்னால், ''பழைய மரபினைப் பழைய வரலாற்றினைத் தெய்வங்களோடு தொடர்புபடுத்திக் கதைகள் வாயிலாகத் தெரிவிப்பது புராணம்''[7] எனலாம்.

தமிழில் 'தொன்மை'

கதை கூறும் பாங்கு, உலக மொழிகள் பலவற்றிலும் காணப்படுவதொன்று. தமிழ் மொழியிலும் இதனைக்காணலாம். சாலப் பழமைசான்ற தொல்காப்பியத்துள் செய்யுள் உறுப்பு முப்பத்து நான்கனுள் 'தொன்மை' என்பதொன்றையும் சுட்டுகின்றார் தொல்காப்பியர்.

''தொன்மை தானே சொல்லுங் காலை
உரையொடு பொருந்திப் பழமை மேற்றே''[8]

என்பது அதன் இலக்கணம். ''பழமைத்தாகிய பொருள்போல் வருவது தொன்மை'' ஆகும். இதற்கு உரையாசிரியர், 'இராம சரிதம்' 'பாண்டவ சரிதம்' என எடுத்துக்காட்டுத் தருவர். இராமாயணமும், பாரதமும் காப்பியங்களேயாயினும், இவை பழைய வரலாற்றினைத் தெய்வத்தோடு தொடர்புபடுத்திக் கூறம் புராணக் கூறுகளைத் தம்முள் அடக்கியுள்ளன எனலாம்.

மேலும், தொல்காப்பியர் கூறும் 'உரை' என்பதற்கு இருபொருள் கொள்ளல் பொருந்தும்: (1) பாட்டுக்குச் சொல்லப்படும் உரை (பதவுரை, பொழிப்புரை போல்வன); (2) தொன்றுதொட்டுப் புராணிகர்கள் சொல்லி வரும் வாயுரை.

தலைவனைப் பிரிந்து வாடும் தலைவிக்குச் செவிலித் தாயர், பழங்கதைகள் கூறிப் பொழுது போக்கினர் எனும் கருத்து 'நெடுநல்வாடை'யில் வருகின்றது.[9]

எனவே, 'புராணம்' என்பதைத் தமிழில் 'தொன்மை' எனல் சாலும்.

வடமொழியில் 'புராணம்'

'புராணம்' என்ற சொல், உபநிடதங்களிலும், சாத்திரங்களிலும் காணப்படுகின்றது. அதர்வன வேத காலத்தில், புராணங்கள் சிறந்த இலக்கியங்களாகக்கருதப்பட்டிருக்கின்றன. மகா பாரதத்தில் புராணங்களின் பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்திய நாட்டில் பண்டை இலக்கியங்களை (1) வேத நூல்கள் (2) இதிகாச-புராண நூல்கள் என இரண்டாகப் பிரித்தனர். மகா புராணம் 18; உப புராணம்-18 என்பர்

கி. மு. 4 ஆம் நூற்றாண்டில், கௌடலியர், தமது 'அர்த்த சாத்திரத்'தில், "இளவரசர்கள் கண்டிப்பாகக் கற்க வேண்டிய நூல்களில் புராணமும் ஒன்று" என்கின்றார்.[10]

"உலகின்கண் தோன்றிய மக்களுயிர்கள் நன்று தீ-துணர்ந்து உய்யும் பொருட்டு இறைவன் அருளிய கலைகளின் தொகுதியை 'அட்டா தசவித்தை' என ஆன்றோர் வழங்குவர். அவ் வித்தையாவன: வேதம் 4; வேதாங்கம் 6; உபாங்கம்-4; உப வேதம் - 4. அவற்றுள் புராணம் என்பது 'உபாங்கம்' எனும் பகுதியைச் சார்ந்ததாய் உரைக்கப்படும்.[11]

'புராணம்' என்று சைனர்கள் வழங்குவது, பிராகிருத மொழியில் உள்ள 'ஆதி புராணம்' ஆகும். அதில் தீர்த்தங்-கரர்கள் வரலாறு, அரசர்கள் கதை இயம்பப்பட்டுள்ளன.[12]

வடமொழி வாணர்கள், இலக்கியங்களை மூன்றாகப் பகுத்துள்ளனர்: (1) விதிமுறையால் 'நன்மைகளைச் செய், தீமைகளைச் செய்யாதே' என்று விதிப்பனவாகிய வேதாகமங்கள்; இவை 'பிரபு சம்கிதை' எனப்படும். (2) உயிர்த் தோழன் ஒருவன், நம்மைத் திருத்த வேண்டிய, நம்மிடம் உள்ள குற்றங் குறைகளை ஒரு கதையை அடிப்படையாக வைத்துத் திருத்துவது போலப் பழைய வரலாறுகளைக் கொண்டு நீதிகளை விளக்கு-வது. இவ்வகையைச் சார்ந்தன, புராண இதிகாசங்களாகிற 'சுகுருத்சம்கிதைகளா'கும். (3) மனைவிபோல் அன்பையும் இன்பையும் அடியாகக் கொண்டு நீதிகளை வற்புறுத்துவது இப்பகுப்பைச் சார்ந்தன காவியங்களும் நாடகங்களுமாகிய 'சாந்தா சம்கிதைகளா'கும். புராணங்கள் உயிர்த்தோழன்போல் உற்ற இடத்து உதவுவனவாம்.[13]

தமிழில் 'புராணம்' என்ற சொல்லாட்சியும் இலக்கணமும்

தொல்காப்பியர் கூறிய 'தொன்மை' எனும் சொல், வழக்கின்கண் மிகுதியாகப் பயிலப் பெறவில்லை. புராணம், புராணன் எனும் சொற்கள் ஆட்சி பெற்றன. பழைய இலக்கண மரபைக் கூறும் ஒரு நூல் 'மாபுராணம்' என்பதாக நச்சினார்க்கினியரின் தொல்காப்பிய உரையால் தெரியவருகின்றது. எல்லாம்வல்ல இறைவனைப் 'புராணன்' என்றனர்.[14] வயது

முதிர்ந்தோனையும் 'புராணன்' என்றனர்.[15] அப்பர் பதிகங்களுள், ஒரு குறுந்தொகைப் பதிகம் 'இலிங்க புராணம' என்றும்; மற்றொன்று பழம் பஞ்சுரப் பண்ணில் 'தச புராணம்' என்றும் பெயர் பெற்றமை இவண் குறிக்கத்தகும். திருவாசகத்தின் முதற்பகுதி 'சிவ புராணம்' என்பதை அனைவரும் அறிவர். கி.பி. 10ஆம் நூற்றாண்டில் தோன்றியவை புராண சாகரம், சாந்தி புராணம்.[16] இதன் பின்னர்த் தோன்றிய புராண நூல்கள் பலவாம்.

'புராணம்' என்பதற்குரிய சரியான இலக்கணத்தை தமிழ் இலக்கண நூல்கள் கூறியனவாகத் தெரியவில்லை. எனினும், யாருப்பருங்கல விருத்தி ஒழிபியலில், ''விளம்பனத்தியற்கை' எனும் தொடர் காணப்படுகின்றது. இதற்கு மு. அருணாசலம், ''விளம்பனம் என்பது, இன்று நாம் கருதுகின்ற புராணம் போன்ற ஒரு நூலின் பொருளைக் கொண்டு செய்யப்பட்டது என்று தோன்றுகிறது'' என்கின்றார். வச்சணந்தி மாலையில், ''குலவரவு காரிகையாப்பில் புராணமேயாம்'' என்று கூறப்படுவதுகொண்டு காரிகை யாப்பில் 'குலவரவு' அதாவது முனி மரபு, அரச மரபு ஆகியவற்றைப் பாடினால் அது புராணம் எனப்படும் என்று அறிய முடிகின்றது. சிதம்பரப் பாட்டியலில், ''அறம் பொருள் இன்பம் வீட்டிற் குறைபாடாகப் பெறுவது காப்பியமாகும் - புராணமாகும்'' என்று கூறப்பட்டுள்ளது.[17] எனவே காப்பியமும் புராணமும் ஒன்றெனல் தகும்.

தன்னேரில்லாத் தலைவனைப் பற்றி உரைப்பதே காப்பியத்தின் இலக்கணம்.[18] 'தன்னேரில்லாத் தலைவன்' இறைவன் ஒருவனேயாதல் வேண்டும். அவனைப் பற்றி உரைப்பன புராணங்கள் - காப்பியங்கள். பாரதமும் இராமாயணமும் முறையே, கண்ணபிரானையும், இராம பிரானையும் பற்றி எழுந்தன. காலப்போக்கில், தெய்வ அருள் பெற்ற அருளாளர்களின் மாண்பு உரைப்பதும், மக்களிலே மிக உயர்ந்தாரைப் பற்றி உரைப்பதும் காப்பியங்களின் இயல்பாயின. இவ்வகையில் எழுந்தவை பெரிய புராணம், சீவகசிந்தாமணி போல்வன. இறைவனைப் பற்றியல்லாத பிற காப்பியங்களிலும் புராணக் கதைகள் பல இடம் பெற்றுள்ளன. 'சீவக சிந்தாமணி'

யைச் 'சீவக புராணம்' என்று கூறுவதும் இவண் உன்னத்தக்கது.[19]

சமய உணர்வால் எழுந்த 'பெரியபுராணம்'

மக்களை விலங்கினின்று பிரித்துத் தெய்வ நிலைக்கு உயர்த்த இன்றியமையாது வேண்டப்படுவது 'சமய உணர்வே' என்பர் அறிஞர்.[20] இத்தகைய உணர்வு, சிந்துவெளி நாகரிகத்திற்கும் முற்பட்டே இருந்து வந்துள்ளது.[21] பண்டைத் தொல்காப்பியத்திலும் சமய உணர்வைத் தமிழ்மக்கள் கொண்டிருந்தனர் எனுங் கருத்தினைக் காண்டல் கூடும்.[22] சங்கப் புலவர் பலர், தாம் பாடவந்த அக-புறப்பாடல்களில் சமய உண்மைகளைப் புகுத்தியுள்ளனர்.[23] சங்க இலக்கியங்களில் மட்டுமன்றி, அடுத்துத் தோன்றிய சிலப்பதிகாரம் போன்றவற்றிலும் சிவன், திருமால் பற்றிய செய்திகள் பேசப்படுகின்றன.[24] இவையெல்லாம் புராண, இதிகாசக் கால்வழியே வருவனவாம். பொது மறை எனப் பேசப்படும் திருக்குறளிலும் 'எண்குணத்தானின் இயல்புகள்'.[25] சொல்லப்பட்டமை அனைவரும் அறிந்ததே.

வாழையடி வாழையாக வந்த சமய உணர்வால் எழுந்த ஒப்பற்ற நூலே, 'பெரிய புராணம்'. இக்காலத்தே, சிறுகதை, நாவல் முதலானவற்றை மக்கள் விரும்பிப் படித்தல் போல், அக்காலத்தே புராணங்களை விரும்பிப் படித்தனர். அதனால்தான், தெய்வச் சேக்கிழார், 'அடியவர் அயநம்' என்பது போல் பெயர் சூட்டாமல், 'திருத்தொண்டர் புராணம்' என்று பெயரிட்டார்.[26] கம்பரும், 'காசில் கொற்றத்து இராமன் கதை' கூறுவதாகவே உரைக்கின்றார்[27]. நூலின் பெயர், 'பெரிய புராணம்' எனினும், அது, சேக்கிழாரின் 'செஞ்சொற்காப்பியம்'.[28] தமிழ்நாட்டிற்கும் தமிழ்மொழிக்கும் தமிழினத்திற்கும் பேரரண். "நாள்தோறும் பெரியபுராணத்தை ஓதும் பழக்கம் மேற்கொண்டால், மலம் அடங்கும். மனம்கரையும்; அருள் முகிழ்க்கும்: சங்கரன் தாள் சார்பு கிடைக்கும்" என்பது தவத்திரு குன்றக்குடி அடிகளார் கருத்து[29] பெரிய புராணத்தைத் தமிழ்த் தேசியக்காப்பியம் என்பாரும் உளர்; உலகப் பொதுநூல் என்றுரைப்பாரும் உளர்.[30] பெரிய புராணம் ஓர் இலக்கியக் கருவூலம் எனில் மிகையன்று.

பத்திமையும் புராணமும்

பத்திமைக்கும் புராணத்திற்கும்நெருங்கிய தொடர்புண்டு. ஒன்றினின்று ஒன்று பிரிக்க இயலாதது. பத்தியால் பாடுவது புராணம்; புராணத்தால் விளைவது பத்தி. பெரியபுராணம் போன்ற நூல்களைப் படிக்கும் ஒருவர்க்குப் பத்தி உணர்வு தோன்றல் கண்கூடு. திருவாசகத்தைப் படித்துக் கண்ணீர் சிந்தி, உள்ளம் உருகி, இறைவனின் பேரருட்டிறத்தை நினைந்து தம் வாழ்வை ஒளிமயமாக்கியோரும் உண்டு.[31] பத்தியால் இறப்பைப்பற்றிய அச்சமும் இல்லாதுபோகும் என்பர் அடியார்.[32]

சங்க இலக்கியங்களில் திருமுருகாற்றுப்படையும், பரிபாடலும் சிறந்த பத்திமைப் பாசுரங்களாக விளங்குகின்றன. அடுத்து நாயன்மார்களும், ஆழ்வார்களும் பத்தியை வளர்த்தனர். அண்மைக்காலத்தே தாயுமானவர், இராமலிங்க அடிகளார், பாரதியார் போன்றோர் பத்திப் பயிர் வாடிவிடாதபடி காத்தனர்.

மேனாட்டு இலக்கியங்களிலும் பத்திமைப் பாக்களைக் காண்டல்கூடும். ஹோமர் ஹிசியடு காலத்தும், அதனையடுத்தும் பாடப்பட்ட கடவுட் பாடல்களே கிரேக்க மொழியின் தொன்மை மிக்க பத்திமைப் பாடல்களாகும்....இவை 'ஹோமர் காலப் பாசுரங்கள்' (Homeric Hymns)) என்றழைக்கப்பட்டன'' என்பர் அறிஞர்.[33]

தமிழில் 'தலபுராண' இலக்கியம்

''புராண மரபுக் கதை என்பது, மனிதன், மனிதனுக்கு அப்பாற்பட்டவர் ஆகியோரின் அடிப்படைக் கூறுகளை உள்ளுறை, குறியீடாகக் கொண்டு விளக்கும் கதை அல்லது கதைக் கூறுகளின் தொகுதியாகும்.[34] இத்தகைய புராண மரபுக் கதைகளை உள்ளடக்கியதே 'தலபுராணம்'. தமிழகத்தைப் பொறுத்த மட்டில் 'புராணம்' என்றதுமே 'தல புராணங்களே' நினைவில் எழும். அத்துணையளவுக்குத் தலபுராணங்கள் (ஏறத்தாழ 600க்கும் குறையாமல்) பல்கியுள்ளன.[35] இவை, தமிழிலக்கியத்தில் சிறப்பானதோர் இடத்தைப் பெற்றுள்ளன

தமிழ் இலக்கிய வரலாற்றை நோக்கினால், காலந்தோறும் வெவ்வேறு வகை இலக்கிய வடிவம் உருவானது தெரியவரும்.

சங்க காலத்தே 'பாட்டும் தொகை'யும்: அடுத்துக் 'காப்பிய' காலம்; அதனையடுத்துப் 'பத்திமைக்' காலம்; பின்னர்ப் 'புராண இலக்கிய' காலம்; அடுத்துச் சிற்றிலக்கியம் · தனிப்பாடல்கள் - உரைநடை - சிறுகதை - நாவல் - புதுக்கவிதை எனப் பல்வேறு இலக்கிய வடிவங்களைக் காணலாம்.

''வரலாறு அறியாத காலத்திலிருந்தே, மக்கட் குலத்தை ஆட்டி அலைத்து வருகின்ற உணர்ச்சிக்குப் பொருளாகின்ற - காண்டற்கும் கருதற்கும் ஒண்ணாத அந்தக் கடவுளையே மக்கள் முன்னிலையில் கொணர்ந்து காட்டுகின்ற ஒப்பற்ற தெய்வக்கருவிகளே நம் புராணங்கள்'' என்கிறார் பொ.வே. சோமசுந்தரனார்.[36]

தலபுராணம் பாடுதல் என்பது மிகப் பிற்காலத்தது என்றாலும், திருத்தலங்கட்குப் புராணப் பெருமை கூறும் வழக்கு, நெடும் பல்லாண்டுகட்கு முன்பே வந்துவிட்டது. தேவாரம் பாடிய மூவரும், பல திருத்தலங்கட்குப் புராண-காப்பியப்பெருமையினைக் குறிப்பிட்டுப் பாடுதல் காணலாம். அப்பர் தேவாரத்தில் மட்டும் 55 புராண மரபுக்கதைகள் இடம் பெற்றுள்ளன என்கிறார் ம. சா. அறிவுடைநம்பி.[37]

புராணம், ''உள்ளதைக் கூறும்; உள்ளதைப் புனைந்து கூறும்; இல்லாததை இருப்பது போலவும் கூறும்''. புராணம் புனைந்துரையா? வரலாறா? இரண்டும் கலந்த ஒன்றா எனில் 'இரண்டும் கலந்த ஒன்று' என்றே கூறுகின்றார் நம்பி ஆரூரன்.[38]

'பழங்கதை' அல்லது' தொன்மம்' பற்றி ஆராயும் ஒப்பீட்டறிஞர்கள் ''தொன்மங்கள் (Myth) நம்ப இயலாதனவாக இருக்கலாம்; கற்பனையிலிருந்து வெளிப்போந்த விளை பொருளாக இருக்கலாம்: ஆயினும் அவை பகுத்தறியும் உலகத்தையும், உள்ளார்ந்த உணர்வு உலகத்தையும் இணைக்கும் தனிமனிதனின் உளவியல் தத்துவத்தின் அடிப்படையில் எழுந்தவை''.[39] இக்கூற்றுத் தலபுராணங்கட்கும் பொருந்தும்.

தமிழில் புராண நூல்கள் பெருகுதற்குக் காரணமாயிருந்தது சமண சமயமே என்பர் தமிழண்ணல்.[40] சமணர், மக்களை

ஈர்த்நற்கு 'மேரு மந்தர புராணம்' போன்றவற்றைத் தமிழில் யாத்தனர். அவர்களைப் பின்பற்றிச் சைவ, வைணவர்கள் தமிழில் புராணம் பாடினர். இம்மரபைப் பின்பற்றிக் கிறித்துவ, இசுலாமியப் புலவர்களும் 'புராண நூல்களை' இயற்றினர் என்பதும் குறிப்பிடத்தக்கும்.[41]

தமிழ்ப் புராண இலக்கியம் (1) வடமொழிப்புராணத்-தழுவல் (2) தமிழுக்கே உரியன என இருவகையில் அமை-கின்றது.[42] வடமொழியில் உள்ள புராணங்களைத் தமிழில் பாடும் முயற்சியால் உருவான பலவற்றுள், கச்சியப்ப சிவா-சாரியார், ஏறத்தாழ 10,000-க்கு மேற்பட்ட செய்யுளாற் பாடிய 'கந்தபுராணம்'; செவ்வைச் சூடுவார் ஏறத்தாழ 5,000 பாக்-களாற் பாடிய 'பாகவதம்' இவற்றைக் குறிப்பிடலாம்.[43] தமிழ்த் தலபுராணங்களுள் காலத்தால் முற்பட்டவை இரண்டு. முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் வீரைத் தலைவன் பரசமய கோளரி என்பவன் இருந்து செய்த 'திருப்பாதிரிப்-புராணம்'-2; (1) அட்டாதச புராணம் (2) கன்னி வன புராணம். ஆனால் இவ்விரண்டும் கிடைக்கவில்லை.[44] தலபுராணம் சீரும் சிறப்புமாக எழுந்தது கி. பி. 14ஆம் நூற்றாண்டில் தான். அக்காலத்தில் தோன்றிய உமாபதி சிவம், 'கோயிற் புராணம்' என்ற அரிய நூலைச் செய்தார்.

தென்னகத்தில் சைவத் திருமடங்களின் தோற்றத்திற்குப் பின் புராண நூல்கள் பல எழுந்தன 17ஆம் நூற்றாண்டில், தல புராணம் பல பாடிப் பெருமை பெற்றவர் சைவ எல்லப்ப நாவலர்.[45] அண்மைக்காலத்தே வாழ்ந்த மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை 22 தலபுராணங்கள் பாடிப் பெருமை கொண்டார்.

தமிழ்ப்புராண இலக்கியத்தை 4 விதமாக வகைப்படுத்-துவர்: (1) பெரியோர் வரலாறு உரைப்பது. (2) இறைவனின் அருஞ்செயல்களைக் கூறுவது. (3) இறைச்செயலை ஒரு திருத்தலத்துடன் இணைத்து விளக்குவது. (4) விரதங்கள், ஆறுகள், மரங்கள் ஆகியவற்றைச் சிறப்பித்துப் பாடுவது[46]

தமிழ்ப் பெருமக்கள், திருக்கோயில் வழிபாட்டைக் கடமையாகக் கொண்டிருந்தனர். 'கோயில் இல்லா ஊரில்

குடியிருக்க வேண்டாம்' என்று சொல்லுமளவுக்கு வாழ்ந்து காட்டினார். இறைவன் அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் என்றாலும், ஆவின் மடியிலே பால் சுரப்பது போல், திருக்கோயிலில் எழுந்தருளியிருந்து அருள் சுரக்கின்றான்.[47] 'ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே' என்பது சிவஞானபோதம்.[48]

'புராண நூல்கள் இலக்கியம் எனலாமா?' எனும் கேள்வி. சிலருள்ளத்தில் எழக்கூடும் 'இலக்கியம்' என்பதற்கு மேனாட்டறிஞர் கூறும் விளக்கத்தை நோக்கினால் இவ்வினாவிற்கு விடைகூற இயலும். ''இலக்கியம் என்பது சிறந்த கருத்துகள் அடங்கிய நூல்'' என்பர் எமர்சன். ''படிப்போர்க்கு இன்பம் தரும் வகையில் நுண்ணறிவு வாய்ந்த அறிஞர்கள் தம் உணர்ச்சிகளையும் கருத்துக்களையும் முறைப்படுத்தி எழுதுவது இலக்கியம்'' என்பர் ஸ்டாபோர்டு ப்ரூக்.[49] ''பொதுவாக மக்களைக் கவரும் வகையில் அமைந்து வடிவம் இன்றியமையாததாகி அதன் வாயிலாக இன்பம் நல்குவது இலக்கியம்'' என்பர் டபிள்யூ. எச். அட்சன்.[50] சிறந்த கருத்துக்களும் உயர்ந்த நீதிகளும் கொண்டு படிப்போர்க்கு ஆரா இன்பம் நல்கிப் பாமரமக்களும் தம் உள்ளத்தைப் பறிகொடுக்குமளவில் கற்றுவல்ல பெரும் புலவர்களால் உருவாயினவே புராண நூல்கள்

''வார்கொண்ட கொங்கையெனும் கோடு தன்னால்
வடிவேலர் பன்னிருதோள் வரையைப் பாய்ந்து
தார்கொண்ட கடம்பதனை யுழக்கி யோகத்
தண்பரவை படிந்திறைவர் தடங்கண் வண்டின்
போர்கொண்ட விழிக்கருணை மதத்தை யூற்றிப்
பொருபடையா யெம்வினையைப் பொடித்து நாளும்
பார்கொண்ட பரங்கிரிவாழ் தெய்வ யானை
பதமலரை யிதயமலர் பதித்து வைப்பாம்''[51]

எனும் திருப்பரங்கிரிப் புராணப்பாடலில் கற்பனை நயம் அமைந்துள்ளமை அறிந்தின்புறலாம்.

"மடுக்குங் காலையிற் குறைய வாங்கியும்
விடுக்குங் காலை மிதப்ப நல்கியும்
அடுக்கும் செல்வம்விண் ணரசு மேசற
எடுக்கும் பண்பினர் யாரு மென்பவே"[52]

எனவரும் தணிகைப் புராணத்தில், மக்கள் கடைப்பிடிக்க வேண்டிய நீதி - உரைக்கப் பட்டமை அறியலாம்.

"ஊடினார் போல வெம்பி யிலையுதிர்ந் துயிரன் னாரைக்
கூடினார் போல வெங்குங் குழைவரத் தழைத்து நீங்கி
வாடினார் போலக் கண்ணீர் வாரமெய் பசந்து மையல்
நீடினா ரவர்போற் பூத்து நெருங்கின மரங்களெல்-
லாம்"[53]

என்னும் திருவிளையாடற் புராணத்துப் பாடலின் இலக்கியச் சுவையில் எவரும் திளைக்கக் காணலாம்.

"பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால்
எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார் ஊனமேல்
ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார் இவரைநீ
அடைவாய் என்று!"[54]

எனும் பெரிய புராணப் பாடல் நயத்தில் தம்மை மெய்ம்மறந்து நிற்பவரையும் காணலாம் இத்தகைய பல்வேறு சிறப்புக்கள் பொருந்தும் புராண நூல்களை 'இலக்கியம்' எனல் முற்றிலும் பொருந்தும்.

'தலபுராண இலக்கிய' நன்மைகள்

தல புராண இலக்கியங்களால் உண்டாகும் நன்மைகள் பலப்பல இவண் சில மட்டும் சுட்டலாம் :

1. மனிதன் தன்னம்பிக்கை ஒன்றினாலேயே வாழவேண்டியவனாகின்றான். அவனது வாழ்வின் வளர்ச்சிக்கு ஊன்றுகோல் 'கடவுள் நம்பிக்கை' ஒன்றேயாம். இதனை அளிப்பது தலபுராணம்.

2. "நாடு, போரில் புழுங்கிப் பட்டினியால் வாடி, உரிமை இழந்து, அறியாமை இருளில் மூழ்கிக் கிடந்த போழ்து, இப்புராணங்கள், மக்கள் கருத்தழிந்து சாகாதபடி ஊக்கம் கொடுத்துத் தட்டி எழுப்பிப் புத்துயிரோடு மகிழ்ந்து உலவிவரச் செய்தன".[55]

3. சிறுசிறு ஊர்களுங்கூடப் புலவர் பெருமக்களால் புனைந்துரைக்கப்பட்டுக் கடவுளொடு தொடர்புடையனவாகப் பாடப்பட்டமையின், தாம் வாழும் ஊர் இந்திர உலகப் போல் பெருமையுடையது என்று எண்ணித் தம் ஊரை விட்டுப் போகாமல் தன்னம்பிக்கையுடன் வாழ்வு நடத்தினர்.

4. "நன்மை செய்தால் இறைவனின் நல்லறம் கிட்டும்; பாவம் செய்தால் நரகம் கிட்டும்" என்று அஞ்சி, நல்லொழுக்கம் பேணத் துணை புரிந்தது.

5. தனி மனிதனின் நல்லமைதிக்கு வழிகோலியது.

6. தம் ஊர் பற்றி மட்டுமன்று, தம் நாட்டு வரலாறும் அறியத் துணைபோனது.

7. இலக்கியச் சுவையில் திளைத்து இன்புறத் துணை நின்றது.

8. தமிழ் இலக்கணம் கூறும் அக வாழ்வு பற்றியும், போர் முதலாய புறத்திணை நெறி பற்றியும் எளிய மக்களும் அறிய வாய்ப்பளித்தது.[56]

9. சின்னஞ்சிறு பருவத்தில் இத்தகைய நீதிகளைக் கேட்டு வாழ்வில் உயர்ந்தோரும் உண்டு.[57]

10. சமயக் கோட்பாடு, இயம, நியம, நிட்டை, நோன்பு முதலாயின பற்றி அறிய முடிந்தது.

11. பல நூல்களைப் படித்து அறிய வேண்டியவற்றை உள்ளூரிலேயே இருந்த இடத்திலேயே அறியும்வாய்ப்பினை நல்கிற்று.

12. கற்றுத்துறை போயவர்க்கே புரியக் கூடிய அரும்பெரும் தத்துவங்களை மக்களின் பொதுவுடைமையாக்கிற்று.[58]

13. சைவ சித்தாந்தம் கூறும் நுண்பொருள்களை எளிதில் அறியத் துணை நின்றது.

14. உலகியல் பற்றி அறியவும் உறுதுணை புரிந்தது.

15. இந்தியநாட்டில் ஒருமைப் பாட்டிற்கும் வழிகோலியது.[60]

16 தமிழ் இலக்கியத்தில் வரும் பல்வகைக் கருத்துக்களுக்கு அரணாகவும் நின்றது.

காணலாகும் சில குறைகள்

நன்மைகள் பல இருப்பினும், ஒரு சில குறைகளும் கொண்டனவாகத் தலபுராணங்கள் அமைந்துள்ளன அவற்றுட் சில வருமாறு :

1. தலபுராணம் ஒன்றுக்கொன்று வேறுபாடின்றிப் பாடப்பட்டது இதனால், முன்னர் ஒன்றைக் கேட்டவர், அதே கருத்தமைந்த மற்றொன்றைக் கேட்க விரும்பவில்லை.

2. பா அமைப்பு · வருணனை - உட்பிரிவு ஆகியனவும் ஒரே அமைப்பில் இருந்தன.

3. பாடிய புலவர் பலர், தம் சுற்றுப்புறத்தாரின் வாழ்வை யொட்டி நடப்பியலாக (Realism) பாடுவதை மறந்து, வெறுங்கற்பனை, சொல் விளையாட்டைப் புகுத்தினர்.[61]

4. காலப் போக்கில், தலபுராணத்தில் சொல்லப்பட்ட அரிய பெரிய தத்துவங்களைப் பாமரரும் புரியுமாறு சொல்லத் தவறிவிட்டனர்.[62]

5. கடவுள் நம்பிக்கையற்ற இயக்கங்களால், தமிழ் மக்களிடையே சமய உணர்வு குறையலாயிற்று; அதன் விளைவாகப் புராண நூல்களைப், (பெரிய புராணத்தையுங்கூட) பழித்தும் இழித்தும் பேசலாயினர் தமிழ்ச் சமுதாய இளைஞர்கள். இத்தகையோரால் ஈர்க்கப்பட்டனர். இதனால் புராணப் பயிற்சி வரவரக் குறையத் தலைப்பட்டது.

6. எதனையெடுத்தாலும் 'இது வடமொழியினின்று வந்தது' என்று கூறுவது வழக்கமாகி விட்டமையால், செந்தமிழ்ப் பற்றுடையோர், இதனை வெறுக்கத் தொடங்கினர்.

7. புராணத்தை முதன்முதல் தமிழில் பாடியபோதும், ஒரு சிலர் அதனை வடமொழியிலும் எழுதி வைத்துவிட்டனர். அங்ஙனம் செய்யுங்கால் ஒரு சில தவறுகளும் நேர்ந்துள்ளன. ஊரின் பெயர் முதலியவற்றிற்குப், பின்னர் வந்தோர் உண்மைக்காரணம் தெரியாமல் தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம் பொருள் உரைக்கலாயினர். 'ஓய்மான் புலியர்' என்பது, 'ஓய்மான்' என்ற வள்ளல் பெயரால் வழங்கிய - ஓய்மான் நாட்டில் உள்ள ஒரு புலியூர், அஃது 'ஓமாம்புலியூர்' எனமருவியது. ஆனால், புராணிகர்கள், 'ஓமம் வளர்த்த ஊர்' எனக் கற்பனைக்கதை கட்டிவிட்டனர். இவ்வாறே எறும்பியூர் என்பதற்கும் ஒரு கதை. எறுப்பி என்றால் 'மலை'; மலையுள்ள ஊர் 'எறும்பியூர்'. இது அரிய தமிழ் வழக்கு. இது விளங்காதபோது 'எறும்பு ஊர்' என்றாக்கி, வடமொழியில் 'பிபீலிகாபுரி' என்று மொழிபெயர்த்தனர்.[63] வடமொழிப் பற்றாளர்கள் செய்த இத்தகு செயல்களால், 'புராண இலக்கியம்' தன் பெருஞ்சிறப்பை இழக்கத் தொடங்கியது.

8. புராண இலக்கியங்கள் பல மறைந்து போயின;[64] பல மறுபதிப்பின்றி அழியத் தொடங்கும் நிலையில் உள்ளன.

முடிவுரை

"உலக நீதிகள், ஆட்சிமுறை, நாட்டு வருணனை, அகத்துறை முதலியவற்றைப் புராணங்களுள் பார்க்கும்போது, இவை பிற எந்த இலக்கியத்திற்கும் பின் தங்கியவையல்ல" என்பர் அறிஞர்.[65] புராணத்தில் ஒரு சில குறைகள் காணப்படினும் அதன்கண் அமைந்த பல்வேறு நன்மைகளைக் கருத்திற் கொண்டு, இனியேனும் புராண இலக்கியத்தை வளர்த்தல் அறிஞர் கடமையாகும். புராணங்கள் பெரும்பாலும் வரலாற்றுப் பயன் இல்லாதவை என்ற கருத்து, அண்மைக் காலம் வரை நிலவி வந்தது. ஆனால் இப்போது நம்நாட்டின் பண்டைப் பண்பாட்டினை உணர, அவை ஆதாரம் மிகுந்த நூல்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன; வரலாற்றாசிரியர்கள் திறனாய்வுக் கண்கொண்டு புராணங்களை ஆராய்ந்து வருகின்றனர். "புராண இலக்கியத்துறை அளவாலும், பொருளாலும் மிகவும்

பரந்துபட்டது; சிறந்த பலன் தருவது. மேலும் புராணஇலக்கியப் பகுதி இடைக்காலத் தமிழில் அளவான ஒரு பெரும் பகுதி. இதைப் புறக்கணிக்கிற அல்லது தூற்றுகிற எந்த வரலாறும் முழுமையுடையதாகாது''[66] என்கின்றார் மு. அருணாசலம். ஆதலின், பல்கலைக் கழகங்கள், பாடநூல் வரிசையில் 'புராண இலக்கியத்'தையும் மிகுதியாகச் சேர்த்து, அதன்வாயிலாக மாணவர் பலரையும் ஈடுபாடு கொள்ளச் செய்தல் வேண்டும்; அதன்கண் அமைந்த தத்துவ உண்மைகளை வெளிக் கொணர்தல் வேண்டும்; ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலும் தத்துவத்துறையோடு ''புராண இலக்கியத் துறை''க்கும் தனித்ததோர் இடமளித்தல் வேண்டும். இலக்கியச் சுவையில் திளைத்து இன்புறவும், இறைப்பற்றுக் கொண்டு அதனால் மன அமைதி பெறவும், புராண இலக்கியப் பயிற்சி, மிகமிக இன்றியமையாதது.

சான்றெண் விளக்கம்

1. ச. தண்டபாணி தேசிகர், 'முகவுரை', திரு. அம்பர்ப் புராணம், ப. XX.
2. திரு. நாராயண ஐயங்கார், 'முன்னுரை', திருப்பரங்கிரிப் புராணம், ப. 5.
3. ஆதாரம் : கலைக் களஞ்சியம், தொகுதி, 7, ப. 436,
4. தமிழ் லெக்சிகன், தொகுதி 5, ப. 2772.
5. சுவாமி சித்பவானந்தர், திருவாசக விளக்கம், ப. 78
6. நாவலியூர் நடராஜன், வடமொழி இலக்கிய வரலாறு, ப. 144.
7. ஆதாரம் : க. த. திருநாவுக்கரசு, 'கந்தபுராணம்', தமிழ் இலக்கியக் கொள்கை.
8. தொல்காப்பியம் : செய்யுளியல் : 229
9. நெடுநல்வாடை : ''செம்முகச் செவிலியர் .. உரைபல பயிற்றி'', 153-1 4.
10. கலைக்களஞ்சியம், மூ. கு.
11. திரு. நாராயணையங்கார், மு.கு.
12. கலைக் களஞ்சியம், மு கு.
13. ச. தண்டபாணி தேசிகர், மு.கு.
14. சிலப்பதிகாரம் : 10 : 179 : மணி 5 : 98: திருமந்திரம் 1557.

15 மணிமேகலை : 27 : 108

16. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு(13ஆம் நூற்.) ப.234.

17. ஷை. (16ஆம் நூற்.) பக். 3,4.

18. தண்டியலங்காரம் : 8.

19. மு. அருணாசலம், (மு.கு.) (13ஆம் நூற்.) ப.234.

20. ச சச்சிதானந்தம் பிள்ளை, சைவ சமயத்தின் தற்கால நிலை, ப.17.

21. மா. இராசமாணிக்கம் பிள்ளை, மொஹெஞ்சொ தரோ அல்லது சிந்துவெளி நாகரிகம், ப. 205.

22. தொல்காப்பியம் :. அகத். ; புறத்.4,5,23; களவியல். 1.

23 ப. அருணாசலம், பக்தி இலக்கியம், ப.11.

24 நற்றிணை, குறுந்தொகை. கலித்தொகை, அகநா. புறநா கடவுள் வாழ்த்து; பரிபாடலில் செவ்வேள், திருமால், பாக்கள், திருமுருகாற்றுப்படை, ம. காஞ்சி 40 42, 453 55; 590-91; முல்லைப்பாட்டு 1:3, கலித். 38, 104, 105, 108, 124; அகநா.70, 181; புறநா 37, 39, 43. 56, 378.

25. திருக்குறள் : கடவுள் வாழ்த்து, 9.

26. பெரிய புராணம் : பாயிரம் 10.

27. கம்பராமாயணம் : சிறப் பாயிரம்,1

28. மா. இராசமாணிக்கனார். பெரியபுராண ஆராய்ச்சி, ப. 250.

29. குன்றக்குடி அடிகளார், 'தலைமையுரை', பெரியபுராணச் சொற்பொழிவுகள், ப. 20.

30. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், 'பெரியபுராணம் - உலகப் பொது நூல்', பெரிய புராணச் சொற்பொழிவுகள், பக். 160, 184.

31. Dr. (Mrs.) Radha Thiagarajan, A study of mysticism in Thiruvasakam - Preface, p. iii.

32. ''காவலில்...நின்நாமம் கற்ற ஆவலிப்பு உடைமை கண்டாய்''-தொண்டரடிப்பொடி ஆழ்வார். (2) 'நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்'' - அப்பர்.

33 தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப. 122.

34. "Myth may be defined as a story or a complex of story elements taken as expressing and therefcre implicity symbolzing - certain deeplying aspects of human and transhuman existence'' - Princeton Encyclopedia of Poetry and Politics, p. 538.

35. கு. முத்துராசன், இலக்கிய வடிவங்கள், பக்.157, 158.

36. பொ. வே. சோமசுந்தரனார், 'ஆராய்ச்சி முன்னுரை', தணிகைப்புராணம், ப.32.

37. ம. சா. அறிவுடைநம்பி, திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணப்படும் இலக்கியக் கொள்கைகள், ப 237.

38. கு. நம்பி ஆரூரன், 'பெரிய புராணம்-வரலாற்று நூல், பெரிய புராணச் சொற்பொழிவுகள், ப 96.

39. கதிர் மகாதேவன், தொன்மம், ப.5

40. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.257.

41. கந்த புராணம், திருவிளை புராணம், கோயிற் புராணம், அருணாசல புராணம், திருக்குற்றாலத் தல புராணம், காஞ்சிப் புராணம், தணிகைப் புராணம் முதலாய பலவும் சைவ சமயப் புராண நூல்கள்; கூடற்புராணம், திருவேங்கடத் தல புராணம், திருநின்றவூர்த் தலபுராணம் போல்வன வைணவப் புராண நூல்கள். சீறாப் புராணம், முகியித்தீன் புராணம், திருக்காரணப் புராணம், நாகூர்ப் புராணம் போல்வன இசுலாமிய நூல்கள். திருவாக்குப் புராணம், சுவிசேடப் புராணம் போல்வன கிறித்துவ நூல்கள்.

42. ச. வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவும், ப.285.

43. மு வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப 198.

44. மு அருணாசலம், (மு.கு.) 13ஆம் நூற். பக்.236,237.

45. மு. வரதராசன், (மு. கு) ப.198.

46. ஏ. என். பெருமாள். 'திருவிளையாடற் புராணம்', தமிழ் இலக்கியக் கொள்கை, பக். 124, 125.

47. கிருபானந்தவாரியார், வாரியார் வழங்கும் சிந்தனை, ப 104

48 சிவஞானபோதம் : சூத்.12.

49. ஆதாரம் : தா. ஏ. ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப 57

50 W. H. Hudson, An Introduction to the study of literature, p.10.

51. திருப்பரங்கிரிப்புராணம்; 1.6 (மு ரா.அருணாசலக் கவிராயர் பதிப்பு)

52. தணிகைப் புராணம், (கழகப் பதிப்பு), ப 32.

53 திருவிளையாடற் புராணம்; தருமிக்குப் பொற்கிழி:14.

54 பெரிய புராணம்; தடுத்தாட்கொண்ட புராணம்:196.

55. கலைக் களஞ்சியம், (மு கு.) ப.438.

56 கந்தபுராணம்-வள்ளியம்மை திருமணப்படலமும் பிறவும் சான்று.

57. அரிச்சந்திரன், சிரவணன் கதைகளைக் கேட்டு அண்ணல் காந்தியடிகள் சத்திய சீலர் ஆனார்.

''அரிச்சந்திரன் சரித்திர புருஷனாக இருந்திருக்க முடியாது, என்று என் பகுத்தறிவு இன்று எனக்குக் கூறுகிறது. என்றாலும், என்னைப் பொறுத்தவரையில் அரிச்சந்திரனும் சிரவணனும் வாழ்வின் உண்மைகள்'' என்பது அவர் கூற்று :- மகாத்மா காந்தி நூல்கள் - சுய சரிதை (காந்தி நூல் வெளியீடு) ப. 18.

58. சுவாமி சித்பவானந்தர், (மு-கு).பக் 78 79.

59. தென்னாட்டார், வடநாட்டுக் கங்கையில் மூழ்குதலும் கயிலைக் காட்சி காண்டலும்; அவ்வாறே வடநாட்டார், குமரித்துறையிலும் இராமேசுவரத்திலும் மூழ்கிநீராடுதலும் கண்கூடு. இவை இந்திய ஒருமைப்பாட்டுக்கு வழிகோலும்.

60. ''கொங்குதேர் வாழ்க்கை'' என்பது குறுந்தொகைப்பாடல். இதற்கு விளக்கமாக அமைவது, திருவிளை புராணத்தில் வரும் 'தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்'.

61. மு. வரதராசன், (மு. கு.) பக். 199, 200.

62. ''எல்லைக்கு உட்பட்ட பொருள் ஒன்று, எல்லை கடந்ததை அளக்கமாட்டாது'' எனும் தத்துவம், 'அடிமுடி தேடிய கதை'யால் உணரத்தக்கது. இவ்வாறே பல தத்துவங்களையும் எடுத்து விளக்குவர் அரிதாயினர்.

63. கலைக் களஞ்சியம், (தெ. பொ. மீ, கட்டுரை, (மு.கு.) பக். 439 441.

64. புராண சாகரம், இறைவானறையூர்ப் புராணம், கன்னிவன புராணம், அஷ்டதச புராணம், திருமேற்றளிப் புராணம், பட்டீச்சுரப் புராணம், திருவலஞ்சுழிப் புராணம்போல்வன, மறைந்து போன நூல்களிற் சில. மயிலை சீனி-வேங்கடசாமி, மறைந்து போன தமிழ் நூல்கள், பக் 135.

65
66. } மு. அருணாசலம், (16 ஆம் நூற்.) (மு. கு.) ப XII-168.

## 3

# நயத்தகு மரபின் வியத்தகு குமரன்

முன்னுரை

தமிழகத்தில் நெடும் பல்லாண்டுகளாக இருந்து வருவது 'முருக வழிபாடு', ஈராயிரம் ஆண்டுக்கும் முற்பட்டதாகிய தொல்காப்பியத்திலும், அதனையடுத்த சங்க இலக்கியங்களிலும் முருகனைப்பற்றிய குறிப்புக்கள் பரந்து காணப்படுகின்றன. பரிபாடலில் முருக வழிபாடு குறித்து ஒரு சிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

பரிபாடல்

சங்க இலக்கியம் 'எட்டுத் தொகை' என்றும், 'பத்துப் பாட்டு' என்றும் இரு பிரிவாக இயம்பப்படும். இவற்றுள், 'எட்டுத் தொகை' நூல்களுள் ஒன்று 'பரிபாடல்'.

தொல்காப்பியர் கூறும் பாவகைகளுள் 'பரிபாடல்' என்பதும் ஒன்று. இதுகுறித்த இலக்கணங்கள், தொல்காப்பியச் செய்யுளியலில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன 'பரிபாடல் என்பது பரிந்து வருவது. அஃதாவது கலியுறுப்புப் போலாது பலவடியும் ஏற்று வருவது' என விளக்கம் தருவர் பேராசிரியர். (செய்யு : 118) பரிபாடல், வெண்பா உறுப்பாக வரும்; வெண்டளையும் ஆசிரியத் தளையும் விராய் வந்து, துள்ளல் ஓசைப்படச் சொல்லவும் படும். அன்றியும், கொச்சகம், அராகம், சுரிதகம், எருத்து எனும் நான்கு உறுப்பாக வரும். இவற்றுள் கொச்சக உறுப்பே பெரும்பான்மையும் பயின்று வரும். அறம், பொருள், இன்பம் எனும் இம் முப்பொருளுமன்றிக் கடவுள் வாழ்த்து, மலைவிளையாட்டு, புனல் விளையாட்டு இவற்றிலும் பிறவற்றிலும் காமம் கண்ணியே வரும், மேலும், பரிபாடலின் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நான்கு பாவும் இடைவந்து விரவவும் பெறும். இதனாலே இது 'பரிபாடல்' எனப்படுவதாயிற்று. (செய்யு: 120, 121)

இத்தகு இலக்கணங்களுக்கேற்ப உருவானதே 'பரிபாடல்' எனும் சங்க இலக்கியம். இதில் திருமாலைப் பற்றியும்,

முருகனைப் பற்றியும் கடவுள் வாழ்த்தாகப் பாடல்கள் வந்துள்ளன. ஆனால், இவற்றில் 'காமப் பொருளு'ம் விரவி வந்துள்ளது என்பது நோக்கத்தக்கும்.

'செவ்வேள்'

பரிபாடலில் 'செவ்வேள்' எனச் சிறப்பாகப் பேசப்படும் முருகனைப் பற்றிய பாடல்கள் உண்டு அவற்றில் ஒன்று குறித்து இவண் காண்போம்.

மதுரைக்கு அணித்தே உள்ளது தண்பரங்குன்று இங்கு எழுந்தருளியிருப்பவன் முருகன். ஆறுபடைவீடுகளுள் முதன்மையாக வைத்துப் போற்றத்தகுவது. நக்கீரர் தம திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்றையே முதற்கண் பாடுகின்றார். 'இருநிலம் துளங்காமை வடவயின் நிவந்தோங்கி' என்று தொடங்குகின்றது ஒரு பரிபாடல். இதனைப் பாடியவர் குன்றம் பூதனார். இப் பரிபாடலுக்கு இசை வகுத்தவர் மருத்துவன் நல்லச்சுதனார். 85 அடிகள் கொண்ட இந் நெடும் பாட்டை, 7 உட்பிரிவுகளில் பொருள் காண்டல் சிறப்பு.

தண்பரங் குன்று

முதற்பகுதி, தண்பரங்குன்றின் மாண்பை மொழிகின்றது. ''வடக்கின்கண் உள்ளது, இமயமலை; அது மிகமிக உயர்ந்தது; ஓங்கியது; ஏறுதற்கரியது. அஃது இருப்பதால்தான் இப்பெரிய உலகமும் அசையாமல் நிலைத்துள்ளது. தேவேந்திரன், இம் மலையைக் காத்து நிற்கின்றான். மலையுச்சியில் மேகங்கள் எப்போதும் சூழ்ந்து திரியும் செந்தாமரையில் வீற்றிருப்பவன் பிரமன்; அவன், பெரிய கங்கை நீரைக் கீழே ஊற்றினான். அதன் விரைவால் உலக மக்கட்குத் துன்பம் நேருமே என்று எண்ணிய கருணையங்கடவுளாம் சிவபெருமான், அக் கங்கையைத் தன் சடையில் தாங்கிக் கொண்டான். அக் காட்சி, விரிந்த நறுமலர் ஒன்றைத் தலையில் சூட்டிக் கொண்டது போன்றிருந்தது. இத்தகு ஒப்பிலாத் தலைவன் சிவபெருமான்''.

இங்ஙனம் முழுமுதற்பரம்பொருளாம் சிவபெருமானைக் குறித்துப் பாடும் புலவர், முருகப்பெருமானைப் பின்வருமாறு

ஏத்துகின்றார்; ''மணிமிடற்று அண்ணலாம் சிவபெருமானுக்கு, மதிக்கத்தக்க கார்த்திகைப் பெண்கள்பால் தோன்றிய முருகப் பிரானே! நீ மையுண்ட கண்ணாளும் மானின் மகளுமாகிய வள்ளியை மணந்தவன். அப்படி அவளை மணம் முடித்தமையால், தேவேந்திரனின் மகளாகிய தெய்வயானை வருந்தினாள்; கண்ணீர் சொரிந்தாள்; அக் கண்ணீர், மழை பொழிவது போன்றிருந்தது. அவளின் கண்கள் மழைபொழிந்தமை போன்று, வேனிற்பருவம், கார்காலத்தின் தன்மை எய்தித், தண்ணிய இப் பரங்குன்றில் மிகுந்த மழையைப் பொழிந்தது!'

''மணிமழை தலைஇயென மாவேனில் காரேற்றுத்
தனிமழை தலையின்று தண்பரங் குன்று'' (10—11)

''தள்ளாப் பொருளியல்பின் தண்டமிழ்''

அடுத்துவரும் பகுதி, தண்டமிழின்-பொருளிலக்கணத்தின் மாண்பை மொழிகின்றது. தமிழில் உள்ள 'பொருளிலக்கணம்' வேறு எம்மொழியிலும் காண்டற்கரிது. வடமொழியிலும் இத்துணையளவுக்கு இயம்பப்படவில்லை என்பர் அறிஞர். இதனை விளக்குகின்றார் பரிபாடற்புலவர் :

''நான்மறைப் பொருளையும் விரித்துரைக்கும் வடமொழி வாணரீர்! நீங்கள் அறியாததும் சிறந்ததுமாகிய பொருள் ஒன்றைக் கூறுகின்றேன்; கேளுங்கள். காமத்தினுள், காதலையுடைய காமம் சிறந்தது. உள்ளத்தின்கண் அன்பால் ஒருதன்மையராய் ஒத்து, உடம்பினாலும் கூடும் 'மெய்யுறு புணர்ச்சியே களவுப் புணர்ச்சி எனப்படும் ஏனைக் கற்பிற் புணர்ச்சியோ, ஊடலுக்குச் சிறந்தது. அவ்வூடலும், தலைவனது பரத்தைமை காரணமாகத் தோன்றுவது ஊடலின் காரணமாக உண்டாவதும் புணர்ச்சி இன்பமே. ஆனால், களவொழுக்கத்தில் இத்தகு ஊடல் கிடையாது. காரணம், தன் தலைவனைத் தலைவி பிரிந்தறிய மாட்டாள் என்பதாம். இத்தகைய நீக்க முடியாத பொருள் இலக்கணம் கொண்டது தண்டமிழ். இதனை ஆராயாதவர்கள், இக்குறிஞ்சித் திணையில் நிகழும் களவொழுக்கப் பயனைப் பெறமாட்டார்கள்!''

''நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர்! கேண்மின் சிறந்தது!
காதற் காமம் காமத்துச் சிறந்தது...
தள்ளாப் பொருளியல்பின் தண்டமிழாய் வந்திலார்
கொள்ளார் ''இக்குன்று பயன்'' (12-14; 25 26)

'அடி வாங்கிய அண்ணல்'

ஏத்துணைப் பெரியனாகத் தலைவன் விளங்கினாலும், ஊடற்காலத்தில் அவனது பெருமை மண்டியிடும். தான் தவறு செய்தவன் ஆதலின், தன் தலைவியின் காலில் வீழ்ந்து பணிதலும் உண்டு என்கின்றார் தொல்காப்பியர். இதற்கு, முருகப் பெருமானும் விதி விலக்கன்று என விளக்குவது அடுத்த பகுதி.

முருகப் பெருமானின் மார்பு, நன்னிறம் பொருந்திய முத்துமாலையால் அழகு பெற்றது; சந்தனத்தின் நறுப்புகை மணமும், மலர்மணமும், ஒருங்கே கொண்டது. அத்தகையான் தெய்வயானையை நெருங்கினான். அவளும் 'வாழிய மாயா' என வாழ்த்தினாள். 'நின் பிரிவுத் துன்பத்தால் பெண்டிர், மழைமுகம் நோக்கி நிற்கும் சோலையின் நிலைபோல எதிர் நோக்கி வருந்தி நிற்பர். ஐய! நின்னைச் சேர்ந்த அப் பெண்களின் தோள்மீது தங்கி அவர்கட்கு நீ அருள்செய்வது இல்லைதான் ஆதலின் தவறுடையோர் அவர்களின்றி நீயன்று! எனினும் நின் இன்பத்தை யான் நுகர்வேனோ?'' என்று வெகுண்டுகூறி, மாற்றாளாகிய வள்ளிமீது கொண்ட செற்றத்தால், நீங்கிச் சென்றாள். ஆனால், முருகப்பெருமானோ, தன் தலைமாலை படும்படியாக அவளின் கால்களில் வீழ்ந்து வணங்கினான் சினந்தணிந்த தெய்வயானை, 'வருந்தல்' என வாய்மொழிந்து. தன் இனிய மார்பினை அவனுக்கு அளித்தாள் இதனைக் கண்ணுற்ற வள்ளி, வாளா இருப்பாளோ? உடனே முருகனை நெருங்கி, ''அவளை ஏன் குறுகினாய்?'' என்று கூறி, அவனின் திருக்கரங்கள் இரண்டையும் நன்றாகப் பிணித்துத், தன்பாலிருந்த மாலையையே கோலாகக்கொண்டு, அவனை அடித்தாள்!

இஃது இவ்வாறிருக்க, இக் காட்சியைக் கண்ணுற்ற வள்ளி- தெய்வயானை இவ்விருவரின் மயில்களும் ஒன்றோடு

ஒன்று பகை கொண்டு எதிர்த்தன; அவ்வாறே அவ்விருவரின் கிளிகளும் மழலைமொழிகளால் திட்டிக் கொண்டன; வள்ளி கூந்தலில் சுழலும் வண்டானது தெய்வயானையின் கூந்தலில் உள்ள வண்டின் மீது சென்று பாய்ந்தது.

இவ்வினிய காட்சியைக் குன்றம்பூதனார் மிக்கசுவையுடன் சித்திரிக்கும் முறை இது:

''வாழியமாயா! நின் தவறிலை; .. மற்று ஐய!
இகலின் இகந்தாளை அவ்வேள் தலைக்கண்ணி
திருந்தடி தோயத் திறைகொடுப் பானை
வருந்தல்என அவற்கு மார்பளிப் பாளைக்
குறுகல்என்று ஒள்ளிழை கோதை. கோல்ஆக
இறுகிறுக யாத்துப் புடைப்ப ...'' (30-34; 36-40

தோழியர் போர்

அஃறிணைப் பொருள்களே சண்டையிட்டால், உயர்திணை எனப்படும் தோழிமார் வாளா இருப்பரோ? வண்டின் செயலைக் கண்ட தெய்வயானையின் தோழியர், சினமுற்றனர். வாயினால் ஊதினாலும் அக்காற்றின் விரைவைக்கூடத் தாங்காது ஒடிந்து போகுமளவுக்கு நுண்ணிய இடையினை உடையவர்கள் அவர்கள். அவர்களது பார்வை வேறாகியது. உடனே தம் கையிலிருந்த மாலைகளை, வள்ளியின் தோழியர் கையிலுள்ள மாலைகள் மீது வீசி மாட்டுவர்; தலைமாலைகளை வீசித் தடுமாறுவர்; தம் மார்பை அழகு செய்வன 'கச்சு' ஆடை; அவற்றைச் சாட்டையாகக் கொண்டு அடிப்பர்; அழகிய பந்து-களை வீசுவர்; இவற்றையெல்லாம் பொறுத்துக் கொண்டிருப்-பரோ வள்ளியின் தோழியர்? மயிலின் சாயல் கொண்ட அவர்-களோ, ஆண்யானைகள் போலாகிப் போர்புரியத் தொடங்கினர்; வெற்றி நடைபோடும் போர்க் குதிரைகள் போல் நடந்து வருவர்; தேர்க் குதிரைகளின் கடிவாளக் கயிற்றைச் செலுத்து-பவர் போல் வரிசையாக வருவர்; வில்லினை வளைப்பர்; தம் தோள் அணிகளையே சக்கரப் படையாகக் கொண்டு சுழற்றுவர்.

''தா தார் பிணக்குவார்; கண்ணியோச்சித் தடுமாறுவார்;
தோள்வளை ஆழி சுழற்றுவார்;
மென்சீர் மயிலிய லவர்'' (45; 55 56)

வென்வேலான் பரங்குன்று

வள்ளியின் தோழியரும் தெய்வயானையின் தோழியரும் இவ்வாறு போரிட்டனரே, வெற்றிதான் யாருக்கு? என்று கேட்கத் தோன்றும். ஆம்! வள்ளியின் தோழியர் செய்த போருக்குத் தெய்வயானையின் தோழியர் தோற்றுவிட்டனர். தோற்ற அவர்கள், மான் எழில்நலம் பெற்றவர்கள்; மையுண்ட கண்ணினர்; மட மொழியினர். இவர்கள், மிகவும் அஞ்சினர்; எனவே, போர்த்தழும்பு உற்ற வெற்றி வலிமை உடைய-மலைபோலும் மார்பினைக் கொண்ட முருகப்பெருமானின் அருகே சென்று சூழ்ந்துகொண்டனர். அவர்களில் சிலரோ, நறுமணப்பூக்கள் நிறைந்த சுனையில் மூழ்கி மறைந்து நீராடினர்; மற்றுஞ் சிலர், பாறைகளில் உள்ள சுனைகளில் உள்ள பூக்களின், தேன் உண்ணும் வண்டுகளாக மாறி, யாழ்போல் இசைத்து நின்றனர்; வேறு சிலர், உச்சிக் கொண்டையுடைய மயில் உருக்கொண்டு, தோகை விரித்து ஆடினர்; சிலர், குயிலுருக் கொண்டு கூவினர்; இன்னுஞ் சிலர். எதுவும் செய்யத்தெரியாது 'ஐயகோ' என்று அலமந்தனர்.

இவ்வாறு தெய்வயானையின் தோழியர் பலரும் தோற்று ஓடுமாறு செய்த சிறப்புக்குரிய வள்ளியின் தோழியரோ, குறிஞ்சித் திணைக்குரியர்; வீரம் பொருந்தியவர்; குன்றுகளில் வாழ்பவர்; வேடர் குலத்தினர். குறிஞ்சி நிலத்துக்குரிய இவர்களோடு, குறிஞ்சி நிலத்திற்கு உரியவனாகிய வென்றிவேல் முருகனின் தண்பரங்குன்றம் ஒத்துக் காணப்படுவதாயிற்று

''கடிசுனையுள் குளித்தாடுநரும் ....
சிகைமயிலாய்த் தொகைவிரித்து ஆடுநரும்........
வித்தகத் துப்பை விளைத்தலான் வென்வேலாற்கு
ஒத்தன்று தண்பரங் குன்று'' (61:64;68-69)

தடாகம் அருகே படாகை

முருகனைப் பற்றியும், வள்ளி தெய்வயானை பற்றியும் இவ்வாறெல்லாம் ஏத்தும் புலவர், பின்வருமாறு இசைக்கின்றார்: ''கடிய சூரபதுமனாகிய மாமரத்தின் அடியினை வெட்டி அறுத்த வேற்படையையும், கொல்லும் போரினைச்

செய்யும் பேராண்மையினையும் உடைய முருகப் பெருமானே! நின் திருப்பரங்குன்றில் பலவிதப் போர் நடக்கும்; ஒரு புறம் கூத்துப்போர்;மற்றொருபுறம்'பாடல்' போர்; இன்னொரு பக்கம் 'சூதாட்டப்போர்'; இனியொருபுறம் 'கல்விவல்லார் 'போர்; இப்படிப் பலபோர்கள். கூத்தில் வெல்வோர் சிலர்; பாட்டில் வெல்லும் பாணர் சிலர்; சூதில் வெல்வோர் சிலர்; கல்வியில் வெல்வோர் சிலர்; இத்தகு வெற்றிக்கெல்லாம் மணிமுடியாக ஒரு கொடி ஒன்று உண்டு. அது, நீர்நிறை தடாகத்தைப் போன்ற குளிர்சுனையின் அருகில் இருந்தது. அதுவே நின் சேவற்கொடி!

''கடுஞ்சூர் மாமுதல் தடிந்தறுத்தவேல்
அடும் போராள!......
தடாகம் ஏற்ற தண்சுனைப்பாங்கர்
படாகை நின்றன்று'' (70-71; 77-78)

நயத்தகு மரபின் வியத்தகு குமர!

பாட்டின் இறுதியில்புலவர் வேண்டுவது இது: ''விரும்பும் வேலினை உடைய முருக! பகைவரை வென்றுஉயர்த்திய சேவற் கொடியால் வெற்றிப் புகழ் கொண்டனை! கற்புசால் நின் தேவியர், அன்புடன் செய்யும் ஊடலை விரும்பி ஏற்கும் பண்புடைய - மதிக்கத்தகும் குமரக் கடவுளே! நின்னை, யாம் தலைதாழ்த்திப் பணிந்துவேண்டுவது ஒன்றுண்டு! நின்னிடத்தில் அன்புசெய்வதில் மிகுந்துள்ள யாம், நின் திருவடிக்கண் வாழும் வாழ்வு, எமக்கு நாள்தோறும் சிறந்து பயனோடுபொலிவதாக!'

''நயத்தகு மரபின் வியத்தகு குமர!
வாழ்த்தினேம் பரவுதும் தாழ்த்துத்தலை நினை, யாம்
நயத்தலிற் சிறந்த எம் அடியுறை
பயத்தலிற் சிறக்க நாள்தோறும் பொலிந்தே!''(82-86)

முடிவுரை

'நயத்தகு மரபின் வியத்தகு குமரனை' வாழ்த்தும் இப்-பாடல், பரிபாடலின் 9ஆம் பாடல். பரிபாடலில் இத்தகு பாக்கள் 70 இருந்துள்ளன. ஆனால் நமக்குக் கிடைத்தனவோ 22 மட்டுமே. முருகனைப் பற்றிய 31 பாடல்களில் கிடைத்-தவை 9 மட்டுமே! தமிழர் இழந்த பலவற்றுள் இவையும் அடங்கும். குன்றம்பூதனார் வேண்டியவாறே, யாமும் முருகப் பெருமானிடம் ''அடியுறை பயத்தலிற் சிறக்க நாள்தொறும் பொலிந்தே'' என வேண்டி இன்புறுவோமாக!

# 4
# கண்ணன் பிள்ளைத்தமிழ்

முன்னுரை

''ஈரிரண்டு ஆயிரம் இவ்வுலகில் தந்திட்ட
ஈராறு ஆழ்வார்கள் இன்னருளாம் - பேராள!
மாயோன் புகழ்பாடும் மாத்தமிழ்ப் பாக்களை
ஓயாமற் சொல்லிடுக ஓர்ந்து!''

சமய உலகில் சைவமும், வைணவமும் இரு கண்கள். சைவ அடியார்கள் அருளியவை, 'திருமுறைகள்' எனப்பட்டன. வைணவ ஆழ்வார்கள் அருளியவை 'பிரபந்தங்கள்' எனப்பட்டன. திருமுறைகள் பன்னிரண்டு; ஆழ்வார்கள்- பன்னிருவர். இப் பன்னிருவர் பாடிய அமுதப் பாக்கள் நாலாயிரம் ஆதலின் 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' எனப் பட்டது. இவ்ஆழ்வார் களில் ஒருவர் 'பெரியாழ்வார்'. இவர் அருளிய 'கண்ணன் பிள்ளைத்தமிழ்' பற்றி ஒரு சிறிது இவண் காண்போம்.

பன்னிரு ஆழ்வார்கள்

வைணவப் பேருலகில், தெய்வத் திருவருள் பெற்ற இப் பன்னிரு ஆழ்வார்களின் திருப்பெயர்கள் வருமாறு: பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை யாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடி யாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள், மதுரகவியாழ்வார்.

''பொய்கைபூ தன்பேயார் யொன்மழிசைக் கோன்மாறன்
செய்ய மதுரகவி சேரர்பிரான்-வையகமெண்
பட்டர்பி ரான்கோதை தொண்டர்பா தப்பொடிபாண்
கட்டவிழ்தார் வாட்கலியன் காப்பு''

இவர்கள், திருமாலினுடைய மங்கல குணங்களாம் அமிழ்த வெள்ளத்திலே மூழ்கி ஆழ்ந்தவராதலின், இவர்கட்கு 'ஆழ்வார்' எனும் சிறப்புப் பெயருண்டாயிற்று. பால் நினைந்-தூட்டும் தாயினும் சாலப்பரிவு காட்டும் எம்பெருமான், இவர்-கள்பொருட்டுத் தாமே எழுந்தருளி வந்து, திருக்காட்சி

கொடுத்தனன்; அதனால் இவர்கள் ஞானம் பெற்றுத், தாம் பெற்ற இவ்வின்பத்தை இவ்வுலகும் பெற்றுய்ய வேண்டுமெனும் பேரருளால், பக்திச்சுவை சொட்டும் பாக்களைப் பாடினர். அப்பாக்களே 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' எனப்படும். பெரியாழ்வார் பாடிய திருப்பல்லாண்டு, திருமொழி என்பன, நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தின் முதலாயிரப்பகுதியிற் சேர்க்கப்பட்டுள்ளன.

பெரியாழ்வார்

இவர், ஆழ்வார் பன்னிருவரில் ஒருவர். பாண்டி நாட்டிலுள்ள திருவில்லிபுத்தூரில், அந்தணர் குலத்தில் வேயர் குடியில், முகுந்தன் என்பவருக்கும் பதுமை என்பவளுக்கும் அருமந்த மகவாய்ப் பிறந்தவர் இவர், கருடாழ்வார் அமிசமாய், ஆனித் திங்களில், சுவாதி விண்மீனில் தோன்றியவர் என்பர். தம் உள்ளத்தை எப்பொழுதும் விட்டுணுவினிடத்துச் செலுத்தியவராதலின் 'விட்டுணு சித்தர்' என்று அழைக்கப் பெற்றார்.

திருமாலுக்கு நாள்தோறும் ஏதேனுமொரு திருத்தொண்டு செய்யக் கருதிய இவர், எத்தகைய தொண்டு அவனுக்குகந்தது என எண்ணலானார். இறைவனின் 'கண்ணன் அவதாரம்' இவருள்ளத்தை ஈர்த்தது. அதில் வரும் ஒரு நிகழ்ச்சியில் தமதுள்ளத்தைப் பறிகொடுத்தார். அந்நிகழ்ச்சி வருமாறு: கம்சனைக் கொல்லக் கருதிய கண்ணன், பலராமனுடன், திருவாய்ப் பாடியை விட்டுப் புறப்பட்டு மதுரைக்குச் சென்றான். அப்போது கம்சனுக்குப் பணிசெய்து வரும் ஒரு பூமாலைக்காரனது (மாலாகாரன்) இல்லத்திற்குச் சென்று, அவன்பால் மலர்மாலைகளை இரந்து பெற்றான் கண்ணன். அம்மாலாகாரன், கண்ணன் அருளால், இம்மையின்பங்கள் பலவும் பெற்றதனோடமையாது, வீட்டின்பப் பேற்றையும் பெற்றான். இச்செய்தியில் பெரியாழ்வார் பெருங்கருத்தூன்றி, அப்பெருமானுக்கு மலர்மாலை சாத்துதலே சிறந்த பணி என்று கொண்டு திரு நந்தவனம் ஒன்றை உண்டாக்கி அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் வடபெருங் கோயிலுடையானுக்குச் சாத்தி மகிழ்ந்து

வரலானார். ''உடுத்துக் களைந்த அவன் பீதக வாடை யுடுத்துக் கலத்ததுண்டு. தொடுத்த துழாய்மலர் சூடிக் களைந்தன சூடும் தொண்டராய், உண்ணாநாள் பசியாவதொன்றில்லை. ஓவாதே நமோ நாராயணா என்று எண்ணாநாளும் இருக்கு, எசுர், சாமவேத நாண்மலர் கொண்டு அவன் பாதம் நண்ணாநாள் அவை தத்துறுமாகில் அன்று எனக்குப் பட்டினிநாள்'' என்ற கொள்கையினராய் வாழ்ந்து வந்தார்.

பாண்டியர் குலத்தில் தோன்றிய வல்லபதேவன் என்னும் அரசன், பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்து வந்தான். அவன், இறைவனது திருவடியை அடைவதற்குரிய வழி வகைகளைத் தெளிய அறிந்து கொள்ள விரும்பினன். அதற்காகப் 'பொற்கிழி' (பண முடிப்பு) ஒன்றினை மதுரை நகரத்தில் தம் பேரவையில் தூக்கி வைத்தனன். புலவருள் சொற்போர் புரிந்து வென்றவர் எவரோ அவரே அக்கிழியினைப் பெறுதற்கு உரியர்.

திருவில்லிபுத்தூர் எம்பெருமான், விட்டுணு சித்தர் கனவில் தோன்றி, 'நீ விரைவில் மதுரைக்குச் சென்று பாண்டியன் அவையை அடைந்து 'திருமாலே பரம்பொருள்' என்று நிலைநிறுத்திப் பொற்கிழியைப் பெறுவாயாக'' என்றனன். அதற்குச் சித்தர் ''சாத்திர ஞானமில்லாத அடியேன் எங்ஙனம் இதனைச் செய்வன்?'' என்று வேண்ட, இறைவன், ''அதுபற்றிக் கவலற்க, அஃது எம் பொறுப்பு'' என்றனன். அவ்வாறே விட்டுணு சித்தர் மதுரை சென்று, பிற புலவரெல்லாம் பொறாமை கொள்ளுமாறு அரசனின் நன்மதிப்பைப் பெற்றார். பின்பு இறைவனருளால் ஞானம் பெற்று, மறைகள், புராணங்கள் முதலான பல நூல்களிலிருந்து எடுத்துக்காட்டி, வைணவ மதமே சிறந்த மதமென்றும், திருமாலே முழுமுதற்பரம்பொருள் என்றும், அவன் திருவடி தொழுவதே சிறந்த வழியாகும் என்றும் ஐயம் திரிபற விளக்கினார். கூடியிருந்த புலவரனைவரும் நாணத்தால் தலைகவிழப் பாண்டியன் விட்டுணு சித்தர் காலில் விழுந்து வணங்கினான். அப்போது கம்பத்திற் கட்டியிருந்த பொற்கிழி தானாகவே கீழிறங்கி வர, இதுவும் 'இறைவனருள்' என்று எண்ணி விட்டுணு சித்தர் அதைப் பெற்றுக் கொண்டார்.

அதைக்கண்ட அரசனும், புலவர்களும், பிறரும் அவரடி பணிந்து புகழ்ந்தனர். அவரைப் பட்டத்து யானையின் மேலேற்றி, வீதி வலஞ் செய்வித்தனர். அப்போது அவர் பண்டிதர் அனைவர்க்கும் தலைவராய் விளங்கினாராதலின், அரசன் அவர்க்குப் 'பட்டர்பிரான்' என்ற திருப்பெயர் சூட்டிப் பல விருதுகள் வழங்கினான். அவர் அப்பாண்டியனுக்கு ஆசிரியரும் ஆனார். விட்டுணு சித்தரின் பெருவிழாவைக்-காண விரும்பிப் பரமபதநாதன் திருமகளுடன் பெரிய திரு-வடியின் மேல் (கருடன்) எழுந்தருளி வந்து காட்சி நல்கினான். அக்காட்சியினைக் கண்ட ஆழ்வார் தம்மையே மறந்தனர். அதனால் எம்பெருமான் நிலையையும் மறந்தவராய் "வை-குண்டத்திலேயிருக்கிற இப்பெருமான் இவ்வுலகத்தில் வந்து கட்புலனுக்குக் காட்சியளித்ததால் இப்பெருமானுக்கு என்ன தீங்கு வருமோ' என்று அஞ்சி "இத்திருமேனிக்கு எவ்விதத்-திலும் எத்தீங்கும் வாராதிருக்க வேண்டும்'' என்று வாழ்த்து-பவராய், யானை மணிகளையே தாளமாகக் கொண்டு 'திருப்-பல்லாண்டு' என்ற திவ்வியப் பிரபந்தத்தைப் பாடினார்.

விட்டுணுசித்தர் தம்மைப் புகலடைந்த பாண்டிய மன்னனைப் 'பாகவதக் கோட்டி'யில் ஒருவனாக்கினார். பின்பு திருவில்லிபுத்தூருக்குச் சென்று தாம் பெற்ற பொற்கிழிப் பொருளால் கோபுரம் கட்டினார். முன்போல் மாலை சாத்தும் திருத்தொண்டை மேற்கொண்டார். சோராத காதற் பெருஞ் சுழிப்பால் தொல்லை மாலை ஒன்றும் பாராது, பெருமானைப் பல்லாண்டு காப்பிடும் பான்மையராதலின், மங்களாசா-சனத்தின் மற்றுள்ள ஆழ்வார்கள் தங்கள் ஆர்வத்தளவு தாமன்றிப் பொங்கும் பரிபாலே 'பெரியாழ்வார்' என்னும் பெயரைப் பெற்றார். மல்லரோடு பொருது வெற்றி கொண்ட தோள்களுக்குத் திருப்பல்லாண்டு பாடினார். அங்ஙனம் பாடு-கையிலே கிருட்டிண விருத்தாந்தத்தில் காதல் மிக்கவராய், அவன் தோன்றியது முதலாகவுள்ளவற்றை அவன் குணங்-களிலே அனுபவித்து அதன் பயனாய்ப் 'பெரியாழ்வார் திரு-மொழி' என்ற பிரபந்தத்தை அருளிச் செய்தார்.

இவர் பாடிய ஊர்கள்: திருவரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருக்குறுங்குடி, திருவில்லிபுத்தூர்.

திருப்பேரை, திருக்கண்ணபுரம், திருவெள்ளறை, திருக்குடந்தை, திருக்கோட்டியூர், சாளக் கிராமம், வடமதுரை, பாற்கடல் என்னும் பதின்மூன்றுமாம். இவர் காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டு என்பர்.

இப் பிள்ளைத் தமிழ்ப் பாக்களில் சிலவற்றைமட்டும் இங்குக் காண்போம்.

திருத்தாலாட்டு

திருமால், எந்த இடத்தில், எந்தத் திருமேனியோடு தோன்றினாலும், அவனுடைய நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல் முதலான செயல்களைக் கண்டால், பிரம, உருத்திரர்களாயிருந்தாலும் மிகவிருப்பித் தங்களால் எத்துணை இயலுமோ அத்துணையளவுக்குத் தொண்டு செய்வார்கள் ஆதலின், யசோதைப் பிராட்டியும், அவ்வாறே குழந்தையாகிய கண்ணனைத் தொட்டிலிற்கிடத்தித் தூங்கச் செய்வதற்காகச் சீராட்டிப் பாராட்டித் தாலாட்டினாள்.

பெரியாழ்வார் தம்மை யசோதைப் பிராட்டியாகக் கருதிக்கொண்டு, கண்ணனின் மேன்மையை வியந்து தாலாட்டுகின்றார். பிள்ளைத் தமிழில் தாலாட்டுப் பருவம் என்பது ஒன்று. இது பிள்ளை பிறந்த எட்டாவது திங்களில் கூறுவது மரபு.

கலித்தாழிசை

''மாணிக்கங் கட்டி வயிர மிடைகட்டி
ஆணிப்பொன் னாற்செய்த வண்ணச் சிறுத்தொட்டில்
பேணி யுனக்குப் பிரமன் விடுதந்தான்
மாணிக் குறளனே? தாலேலோ!
வையமளந்தானே! தாலேலோ!''

(பொழிப்புரை) பிரமசாரியான குறுகிய வடிவினனே! பிரமதேவன், இருபுறங்களிலும் மாணிக்கத்தை வைத்து, நடுவில் வயிரத்தை அமைத்து, மாற்றுயர்ந்த பொன்னினாற்செய்த! அழகிய சிறுதொட்டிலை, மிக்க விருப்பத்துடன் உனக்காக அனுப்பி வைத்தான்! உலகங்களை அளந்த நெடுமாலே! உனக்குத் தாலாட்டு! தாலாட்டு!

[ஆணிப்பொன் - மாற்று அறிதற்குக் கொள்ளும் உயர்ந்த பொன்; கட்டி - ஓரங்களில் அழுத்தி; வண்ணம் - அழகு; விடுதந்தான்-அனுப்பிவைத்தான்; மாணி-பிரமசாரி; மாணவன் -

குறளன் - குறுகிய வடிவினன்; தாலாட்டு - நாவசைத்தல், வையமளந்த வரலாறு - மாவலி என்பவன் பிரகலாதனின் பேரன். சிறந்த கொடை வள்ளல். இவன் மீது பொறாமை கொண்ட இந்திரன் இவனைத் தொலைப்பதற்கு எண்ணித் திருமாலிடம் சென்று, தன் கருத்தைத் தெரிவித்தான். திருமாலும் அவன் கருத்துக்கேற்பக் குறுகிய மறையோன் வடிவங்கொண்டு மாவலியிடம் வந்து, 'எனக்கு மூன்றடி மண் தானம் கொடு' என்றார். திருமாலின் தவத்தை உணர்ந்த சுக்கிரன், தன் மாணவனாகிய மாவலியிடம் 'கொடுக்காதே! கொடுத்தால் உனக்கே துன்பம் வரும்' என்றான். ஆனால், மாவலியோ, 'கேடு வரினும் வரட்டும்' என்று சொல்லி மண்கொடுக்க இசைந்தான். குறளனாய் வந்த திருமால், 'நெடுமால்' ஆனார். இம் மண்ணுலகத்தையும், விண்ணுலகத்தையும் ஈரடியால் அளந்தார். 'மூன்றாவது அடிக்கு இடம் எங்கே?' என்று கேட்டபோது, மாவலி தன் தலையைக் காட்டினான். திருமால். அவனது தலையின் மேல் தன் திருவடிவைத்து, அழுத்தி அவனை ஆட்கொண்டார் என்பது வரலாறு.]

அம்புலிப் பருவம்

பெரியாழ்வார், தம்மை யசோதைப் பிராட்டியாக எண்ணிக்கொண்டு, தவழும் பருவத்தினனாகிய கண்ணனுடன் விளையாட வருமாறு அம்புலியை அழைக்கின்ற பருவம் - அம்புலிப்பருவம். 'சாம, பேத, தான, தண்டம்' என்ற நால் வகை உபாயங்களில் அம்புலியை அழைத்தல் மரபு. அம்புலிப்-பருவத்தில் வரும் பாடல் ஒன்று :

கலிநிலைத்துறை

''தன்முகத் துச்சுட்டி தூங்கத் தவழ்ந்துபோய்
பொன்முகக் கிண்கிணி யார்ப்பப் புழுதி யளைகின்றான்
என்மகன் கோவிந்தன் கூத்தி னையிள மாமதீ!
நின்முகங் கண்ணுள வாகில் நீயிங்கே நோக்கிப்போ!''

(பொ-ரை) மிகுந்த இளமைத் தன்மை கொண்டுள்ள அம்புலியே! (குழந்தையாகிய கண்ணன்) தன் முகத்தில் உள்ள சுட்டி என்ற அணியானது, இங்குமங்கும் அசையும்படி-யாகவும், அழகிய முகப் பணியையுடைய அரைச் சதங்கை, ஒலிக்குமாறும், இவ்வாறு தவழ்ந்து கொண்டு வந்து, புழுதி

மண்ணில் விளையாடிக் கொண்டிருக்கின்றான்! உன் முகத்தில் கண்கள் இருக்குமானால், நீ, என் மகன் கோவிந்தனுடைய திருவிளையாட்டை, இவ்விடத்தே வந்து பார்த்துவிட்டுப் போவாயாக!

[சுட்டி - நெற்றிச் சுட்டி என்ற அணி; தூங்க - அசைய; பொன்முகம் - அழகிய முன்பக்கம்; அளைகின்றான் - விளையாடுகின்றான்; இளமாமதீ - மாஇளமதீ - மிகுந்த இளமையான திங்களே; கோவிந்தன் - பசுக்களைக் காப்பவன் - கண்ணன்; 'கண்ணனும் தவழ்கிறான் - அம்புலியும் வானத்தில் தவழ்கின்றான்' என்ற கருத்து வந்துள்ளதால், இச்செய்யுள் 'சாம-உபாயம்' எனலாம்.]

செங்கீரைப் பருவம்

பெரியாழ்வார், தம்மை யசோதைப் பிராட்டியாக எண்ணிக்கொண்டு, குழந்தையாகிய கண்ணனை ஆட்டுவிப்பதொரு கூத்து. பிள்ளை தன்னுடைய இரண்டு கைகளையும் முழந்தாளையும் ஊன்றித், தலையை நிமிர்த்திக்கொண்டு ஆடுதல் 'செங்கீரை' யாகும் செம்மையான கீரைத்தண்டு காற்றில் இங்குமங்கும் அசைந்தாடுவது போலக், குழந்தையும் தன் தலையை அசைத்தாடுவதால் 'செங்கீரைப் பருவம்' என்ற பெயர் பெற்றது.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

''உய்ய வுலகுபடைத் துண்ட மணிவயிறா!
ஊழிதோ றூழிபல வாலி னிலையதன்மேல்,
பைய வுயோகுதுயில் கொண்ட பரம்பரனே!
பங்கய நீணயனத் தஞ்சன மேனியனே!
செய்யவள் நின்னகலஞ் சேமமெ னக்கருதிச்
செலவு பொலிமகரக் காது திகழ்ந்திலக,
ஐயவெ னக்கொருகா லாடுக செங்கீரை!
ஆயர்கள் போரேறே! ஆடுக ஆடுகவே''

(பொ-ரை) உயிர்களெல்லாம் உய்யும்படி உலகங்களைப் படைத்து, ஊழிக்காலத்தில் அழியாமல் இருப்பதற்கு அவ்வுலகங்களை எல்லாம் உட்கொண்ட, அழகிய வயிற்றை உடைய-

வனே! பலவாக வருகின்ற ஊழிக்காலங்களில் ஒவ்வொரு ஊழிக்காலத்திலும் ஆலின் இலையிலே (வயிற்றிலுள்ள உலகங்கள் அசையாதபடி) மெல்ல யோகத்துயிலைக் கொண்ட மேலானவனே! தாமரை மலர் போன்ற, நீண்ட, அழகிய கண்களையும் மைபோன்ற கருநிறமான அழகிய உடம்பும் உடையவனே! எம் தலைவனே! திருமகளினுடைய நினது மார்பு (நீ ஆடும் போது அசையாதபடி) பாதுகாவலுடன் இருக்க வேண்டும் என்று கருதி, யான், மங்களா சாசனம் செய்ய, செல்வத்திற்கு அறிகுறியாக விளங்குகின்ற மகரக்குழையோடு விளங்குகின்ற காதுகள் அசைந்து ஒளிவிட, இவ்வாறு என்பொருட்டாக ஒரு தரம் செங்கீரை ஆடி அருள்வாயாக! இடையர்களுடைய, போர் செய்வதில் வல்ல காளை போன்றவனே! செங்கீரை ஆடுக!

[மணி-அழகிய; ஊழி-கற்பம்; ஆலின்+இலை = ஆலினிலை; உயோகு துயில் - உலகங்களை எல்லாம் காப்பாற்றுவதற்கான வழியைச் சிந்தித்துக் கொண்டு செய்யும் துயில், அறிதுயில். யோகம் என்பது உயோகு எனத் திரிந்தது; நீள்+நயனம்=நீணயனம— நீண்ட கண்கள்; செய்யவள்-திருமகள்; அகலம்-மார்பு; சேமம் காவல்; செல்வு - செல்வம்; மகரம்-மகரக்குழை; ஏறு-காளை.]

சப்பாணிப் பருவம்

பெரியாழ்வார் தம்மை யசோதைப் பிராட்டியாக எண்ணிக்கொண்டு கண்ணனாகிய குழந்தையினிடத்துச் சப்பாணி கொட்டி அருள வேண்டுமென்று இத்திருமொழியில் வேண்டுகிறார். ஒரு கையுடன்கூட மற்றொரு கையைச் சேர்த்துக் கொட்டுவதாகிய விளையாட்டுச் 'சப்பாணி' எனப்படும்.

கலித்தாழிசை

''மாணிக்கக் கிண்கிணி யார்ப்ப மருங்கின்மேல்,
ஆணிப்பொன் னாற்செய்த ஆய்பொன் னுடைமணி,
பேணிப் பவளவாய் முத்திலங் கப்பண்டு
காணிகொண்ட கைகளால் சப்பாணி
கருங்குழல் குட்டனே! சப்பாணி!''

(பொ-ரை) மாற்றுயர்ந்த பொன்னினாற் செய்த, நன்காராய்ந்த பொன்மணிக் கோவையை உடைய இடுப்பின் மேல் (உள்ளே) மாணிக்கத்தைக் கொண்ட அரைச் சதங்கை ஒலி செய்யவும், பவளம் போன்ற வாயில் முத்துப் போன்ற பற்கள் ஒளிவிடவும், முன்னொரு காலத்தில் பூமியை மாவலி அரசனிடமிருந்து பெற்றுக் கொண்ட கைகளினால் விரும்பிச் சப்பாணி கொட்டி அருள்வாயாக! கருநிறக் கூந்தலை உடைய பிள்ளையே! சப்பாணி கொட்டி அருள்வாயாக!

[மருங்கு - இடுப்பு; ஆணிப்பொன் - மாற்றுக்குறையாத பசும்பொன்; ஆய்-ஆராய்ந்து; முத்து-முத்துப்போன்ற பல்; பண்டு-முன்பு; காணி - பூமி; கொண்ட - பெற்றுக்கொண்ட; சப்பாணி - ஒருகையோடு மற்றொரு கையையும் சேர்த்துக் கொட்டுதல்; குட்டன்-பிள்ளை]

தளர்நடைப் பருவம்

பெரியாழ்வார், தம்மை யசோதைப் பிராட்டியாக எண்ணிக்கொண்டு, கண்ணனாகிய குழந்தையிடம் தளர்நடை நடந்து அருள் செய்ய வேண்டுமென்று, இத்திருமொழியில் வேண்டுகின்றார். தட்டுத் தடுமாறி நடக்கும் நடைக்குத் 'தளர் நடை' என்று பெயர்.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

''தொடர்சங் கிலிகை சலார்பிலா ரென்னத்
தூங்குபொன் மணியொலிப்ப,
படுமும் மதப்புனல் சோர வாரணம்
பையநின் றூர்வது போல்,
உடன்கூடிக் கிண்கிணி யாரவா ரிப்ப
உடைமணி பறை கறங்கத்
தடந்தா ளிணைகொண்டு சார்ங்க பாணி
தளர்நடை நடவானோ!''

(பொ-ரை) இரும்புச் சங்கிலியின் தொடர் சலார் பிலார்' என்று ஒலி செய்யவும், தொங்குகின்ற பொன்னாற் செய்யப்பட்ட கயிற்றோடு பொருந்திய மணிகள் ஒலிக்க, உண்டான மூன்று வகையான மதநீர் வடிய, இருந்து கொண்டு யானை மெல்ல நடந்து போவது போலக், காலில் கட்டப்பட்ட

சதங்கை ஒன்றோடு ஒன்று மோதி ஒலி செய்ய இடுப்பில் மணி-கள் பறைபோல் முழங்க, இங்ஙனம் 'சார்ங்கம்' என்ற வில்-லைக் கையிலேந்திய குழந்தையாகிய இவன், தன்னுடைய பெரிய கால்கள் இரண்டினால் இளநடை நடக்கமாட்டானோ? (நடக்க வேண்டும்)!

[சங்கிலிகை-இருப்புச் சங்கிலி; சலார்பிலார்-ஒலிக்குறிப்பு: என்ன-என்று ஒலி செய்ய; தூங்கு-தொங்குகின்ற; மும்மதம்-இரண்டு கன்னங்கள், குறி இவற்றிலிருந்து உண்டாகும் மத நீர்; வாரணம்-யானை; உடை-இடுப்பு; தடம் தாள் இணை-பெரிய கால்கள் இரண்டு]

அச்சோப் பருவம்

பெரியாழ்வார் தம்மை யசோதைப் பிராட்டியாக எண்-ணிக்கொண்டு, கண்ணனாகிய குழந்தையை அணைத்துக் கொள்ள வேண்டுமென்று இத்திருமொழியில் வேண்டுகின்றார். 'அச்சோ' என்பது, 'குழந்தையை அணைத்துக்கொள்' என்று சொல்லுதற்குரிய குறிப்புச் சொல்லாம். அல்லது 'அச்சோ' என்-பதை வியப்பினைக் குறிக்கும் இடைச்சொல் என்று கொண்டால், கண்ணனை அணைத்துக் கொள்வதால் உண்டாகும் பேரின்பத்-தை எடுத்துரைக்க முடியாமல் வியப்பு மேலிட்டுக் கூறும் சொல்லாகவும் கொள்ளலாம். இப்பருவப்பாடல் ஒன்று;

கலித்தாழிசை

''நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்ன,
தேறி யவளும் திருவுடம் பிற்பூச,
ஊறிய கூனினை உள்ளே யொடுங்கவன்
றேற வுருவினா யச்சோ அச்சோ!
எம்பெரு மான்!வாரா அச்சோ அச்சோ!''

(பொ-ரை) 'நல்ல மணம் வீசுகின்ற சந்தனத்தை எமக்குக் கொஞ்சம் கொடு' என்று நீ கூனியைக் கேட்க, அவளும் மனம் தெளிந்து உனது அழகிய உடம்பில் பூச, நீண்ட நாளாய் இருந்த அவளுடைய கூனை, அவளுடம்பிற் குள்ளே அடங்குமாறு அன்றொருகாலத்தில் நிமிர்த்து உரு-வினவனே! என்னை அணைத்துக் கொள்ளவேண்டும்! அணைத்துக் கொள்ளவேண்டும்! எம் தலைவனே! வந்து அணைத்துக்கொள்ளவேண்டும்; அணைத்துக்கொள்ளவேண்டும்!

[நாறிய - மணம் கமழ்கிற; சாந்தம் - சந்தனம்; இறை - கொஞ்சம்; அவளும் அந்தக் கூனியும்; தேறி-தெளிந்து; ஊறிய - நீண்ட நாளாயிருக்கிற; ஏற-நிமிர்த்து. கூனினை உள்ளே ஒடுக்கிய வரலாறு : கம்சனுடைய கட்டளையினால் அக்குரூரன் என்பவன், கண்ணனை மதுரைக்கு அழைத்து வந்தான். கண்ணனும் கம்சனைக் கொல்ல எண்ணிப் பலராமனுடன் புறப்பட்டு மதுரைக்கு வந்தான். மதுரையில் அரசவீதியில் வரும்போது சந்தனக் கிண்ணத்தைக் கையிலேந்தி வருகிற மங்கைப் பருவமுடைய ஒரு கூனியைக் கண்டு 'இச்சந்தனத்தை யாருக்குக் கொண்டுபோகிறாய்' என்று விருப்புடன் கேட்க, அவள் கண்ணனின் கண் அழகில் மயங்கியவளாய் 'நான் கம்சனால் சந்தனப் பூச்சுக்கள் உண்டாக்கும் வேலையில் அமர்த்தப்பட்டவள்' என்றாள். கண்ணன், 'எம் திருமேனிக்கு ஏற்ற இச்சந்தனத்தை எமக்குத் தருக' என்றான். அவளோ 'இவர்கட்குக் கொடுத்தால் கம்சனது தண்டனை கிடைக்கும்' என்று எண்ணி அஞ்சாமல் அச்சந்தனத்தை மிக்க அன்புடன் கண்ணனுக்கு அளித்தாள். கண்ணனும் அதனைத் தன் திரு-மேனியிலணிந்து அவள் மீது அருள்கொண்டு, நடுவிரலும் அதன் முன்விரலும் கொண்ட நுனிக்கையினால் அவளை மோவாய்க் கட்டையைப் பிடித்துத் தன் திருவடிகளினால் அவள் கால்களை அமுக்கி இழுத்துத் தூக்கிக், கூன், உடம்-பிற்குள் அடங்கி விடுமாறு கோணலை நிமிர்த்து, அவளை மகளிரில் சிறந்த உருவினள் ஆக்கினன்.]

முடிவுரை

பத்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய, பெரி-யாழ்வாரின் இப் பிள்ளைத் தமிழ்ப்பாக்களை நாளும் ஓதுவோம்; நம் பெருமான் அருள் பெறுவோம்!

# 5

# அப்பர் குறுந்தொகை

நூற் சிறப்பு

'அப்பர் குறுந்தொகை' என்பது, அப்பர் பாடிய திருக் குறுந்தொகை எனப் பொருள்படும் 'அப்பர்' என்பது திரு-நாவுக்கரசரின் வேறு பெயர். அவர் அருளிய தேவாரப் பாக்-களில் 'திருக் குறுந்தொகை' என்பதுமொன்று; குறுகிய அடி-களால் ஆன பாக்களின் தொகுதிக்குக் 'குறுந்தொகை' என்று பெயர். சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகையுள் ஒன்றாக விளங்கும் 'குறுந்தொகை' நூலும், குறுகிய அடிகளால் ஆன பாக்களின் தொகுதியேயாம்! அதே தொகை நூலுள் இடம் பெறும் அகநானூற்றிற்கு 'நெடுந்தொகை' என்ற பெயரு-முண்டு! அப்பர் பாடிய பாக்கள், தெய்வத் தமிழ்ப் பாக்கள் ஆதலின், 'திரு' என்னும் அடையடுத்துத் 'திருக் குறுந்தொகை' என்ற பெயர் பெறுவதாயிற்று!

உலகம் உய்யும்பொருட்டுச் சைவத் திருமுறைகள் தோன்-றின 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதனை உட்கொண்ட அருளாளர் மொழிந்த அருள்மொழிகளே, இன்று திருமுறைகளாகக் காட்சி வழங்குகின்றன. இவை, மனிதனது அக வாழ்வைச் செம்மைப்படுத்தி, இறைவனின் திருவடியின்-பத்தைப் பெறத் துணைநிற்பன! 'திரு' என்னுஞ்சொல், ஈண்டுச் சிவத்தையும், சிவனருளையும், அவ்வருளாற் பெறும் பேரின்பத்தையும் உணர்த்தும். 'முறை' என்பது நூலைக் குறிக்-கும். எனவே 'திருமுறை' என்பதற்குச் 'சிவநூல் அருள்நூல், பேரின்ப நூல்' எனப் பொருள் உரைக்கலாம். சைவ சமயத்தில் இத்தகு திருமுறைகள் பன்னிரண்டு உள்ளன. முதல் மூன்றும், திருஞானசம்பந்தர் அருளியன; அடுத்த மூன்றும், திருநாவுக்-கரசர் அருளியன; ஏழாவது சுந்தரமூர்த்தி நாயனார் அருளி-யது; எட்டாவது மணிவாசகப் பெருமான் பாடியது; ஒன்பதாவது திருமாளிகைத்தேவர் முதலானோர் பாடிய, திருவிசைப்பா, திருப்பல்லாண்டு; பத்தாவது திருமூலர் அருளிய திருமந்திரம்; பதினோராவது பட்டினத்தார் போன்றோர் பாடிய பாக்களின்

தொகுதி; பன்னிரண்டாவதுசேக்கிழார்அருளிய திருத்தொண்டர் புராணம். திருமுறைகளைத் 'தோத்திரம்' எனத் தொழுது போற்றுவர் சைவர்.

இப் பன்னிரு திருமுறைகளில் 'ஏழு திருமுறைகள்-தேவாரம்' என்றறியும் போது, தேவாரத்தின் பெருமை புலனாகும். தே + ஆரம் = தேவாரம்; தே - தெய்வம்; ஆரம்-மாலை - 'தெய்வத்திற்குச் சூட்டப்படும் மாலை' போன்றது! தே + வாரம் - தேவாரம்; தே-தெய்வம்; வாரம்-இசைப்பாட்டு; தெய்வத்தைப் பற்றிப் பாடப்படும் இசைப்பாட்டு; தேவாரப் பாக்களனைத்தும் பண்ணோடு பாடத்தக்கவை; தாள இசைக்குப் பொருந்தியவை. சம்பந்தர், அப்பர், சுந்தரர் என்ற இம்மூவரும், தாம் பெற்ற இறையின்பத்தைத் தேவார இன்றமிழ்ப் பாக்களால் வடித்துத், தமிழ்நாட்டின் மூலை முடுக்கெல்லாம் இசையுடன் வாரி வழங்கினர்! இம் மூவர் முதலிகள்' (முதன்மையானவர்கள்) நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய வித்தகச் செல்வர்கள். இவர்களால் நற்றமிழ் நாடும், நந்தமிழ் மொழியும் பெற்ற பேறுகள் பலப்பல! தேவாரப் பதிகம் அல்லது 'பதியம்' என்பது, பத்துப் பத்துப் பாடல்களைக் கொண்டது. (சிலவற்றில் ஒன்றிரண்டு மிகுதியாகவும் இருக்கும்) 'திருப்பதியம்' என்பது தேவாரத்தை மட்டுமே குறிக்கும் எனின் இதன் சிறப்பை என்னென்பது! முதலாம் இராசராசசோழன், தஞ்சைப்பெருவுடையார் கோயிலில், தேவாரத்தைப்பண்ணோடு பாடுதற்காக 48 பிடாரர்களையும் (இக்காலத்து ஓதுவார்கள்); அவர்கட்குக் கொட்டி மத்தளம் வாசிப்பதற்காக இரண்டு பேரையும் அமர்த்தி, அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு நாளும் முக்குறுணி நெல் கொடுக்கவும், இன்னின்னார்க்குப் பிறகு இன்னின்னார் இப்பணி செய்திடல் வேண்டுமென்றும் ஏற்பாடு செய்ததைத் தஞ்சைக் கோயிலில் உள்ள 'திருப்பதியம் விண்ணப்பக் கல்வெட்டு' விளக்கமாகக் கூறுகிறது. இவன் கால முதற்கொண்டுதான், சிவன் கோயில்களில் வழிவழியாகத் தேவாரம் பாடும் வழக்கம் வந்திருக்க வேண்டும்.

இம்மூவரும் அருளிச் செய்த தேவாரப் பாக்கள், இலட்சத்திற்கும் மேம்பட்டவை என்பர் ஆன்றோர். திருஞான சம்பந்தர் அருளியன பதினாறாயிரம் திருப்பதிகங்கள்.

திருநாவுக்கரசர் அருளியன நாலாயிரத்துத் தொள்ளாயிரம் திருப்பதிகங்கள்; சுந்தரர் அருளியன முப்பத்தெண்ணாயிரம் பாக்கள் என்று கணக்கிடுவர் அவர். ஆனால், இத்துணைத் திருப்பதிகங்களுள் இன்று நமக்குக் கிடைத்துள்ளவை எழு-நூற்றுத் தொண்ணூற்றைந்து பதிகங்களேயாம். இவற்றுள்ளும் சில பகுதிகள் குறைந்து காணப்படுகின்றன.

நாவரசர் வரலாறு

பிறவி பெற்றதன் பெரும்பயன், இறைவனின் பேரின்பப் பேற்றினை அடைவதேயாம். அதனை அடைவதற்கு அடியார்-கள் முயலும் நெறிகள் நான்கு. அவற்றுள் ஒன்று 'தாச நெறி' அல்லது 'தாசமார்க்கம்'. இதன் வாயிலாகக் கண்ணுதற் பெருங் கடவுளாம் சிவபெருமானைத் தம் பட்டறிவால் நேரிற்கண்டு, பேரின்பப் பெருவாழ்வு எய்திய பெரியார் திருநாவுக்கரசர்! இவர் சைவ சமய குரவர் நால்வரில் 'திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட' செல்வராவர்!

தமிழ்நாட்டில், பெண்ணையா நதி பாயும் வளப்பமான நாடு - திருமுனைப்பாடி நாடு! அறந்தரு நாவுக்கரசரும், ஆலாலசுந்தரரும் பிறந்த நாடு இது வெனில், இதன் சீர்மையைச் செப்புவார் யாரே? இத் திருநாட்டில் உள்ள திருவாமூரில், ஒழுக்கத்தின் மேதக்க நிலை வேளாண் குலத்தில், குறுக்கையர் குடியில் தோன்றினார் நாவரசர். இவர்தம் தந்தை-யார் - புகழனார்; தாயார் - மாதினியார்; தமக்கையார் - திலக-வதியார். நாவரசரின் இயற்பெயர் 'மருள்நீக்கியார்' என்பது.

திலகவதியாரை மணக்க இசைந்தவர், கலிப்பகையார். ஆனால் திருமணம் நிகழ்தற்கு முன்னர், படைத்தலைவராகிய அவர், வடபுலத்தோர் மாறேற்கச் சென்ற போது, போர்க்களத்தில் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டார். இதற்கிடையே, புகழனாரும்மாதினியாரும் இவ்வுலகை விட்டகன்றுஇறைவனடி எய்-தினர். ஆதலின், கலிப்பகையாரையே தம் மணவாளனாகக் கரு-திய திலகவதியார், தாமும் இறக்கத் துணிந்தார். அந்நிலையில் மருள்நீக்கியார் மனம் கவன்று, தமக்கையார் காலிற் பணிந்து 'என்னை விட்டேகுவீரெனில் யானும் உயிர் நீப்பன்' என்றார். அது கேட்ட தமக்கையாரும், 'தம்பியார் உளராக வேண்டும்' என்ற அருளினால், உயிர் தாங்கிச் சிவபிரான் திருத்தொண்டு பூண்டவராய்த் திகழலானார்.

தமக்கையாரது ஆதரவில் வளர்ந்த மருள்நீக்கியார், துறவு நெறி மேற்கொண்டார் பிற சமய உண்மைகளையும் அறிதற்பொருட்டுப் பாடலிபுரம் (திருப்பாதிரிப்புலியூர்) சென்றார். சமண சமயஞ் சார்ந்தார்; 'தருமசேனர்' எனும் பட்டமும் பெற்றார். புறச்சமயம் சேர்ந்த தம்பியின் செயல் கண்டு, கவலையுள் மூழ்கிய திலகவதியார், திருவதிகை வீரட்டானம் சென்று வீரட்டானேசுவரர்க்குத் திருப்பணி செய்யலானார்; "அடியேன் பின் வந்தவனைப் பரசமயக் குழி நின்றும் எடுத்தாளவேண்டும்" என ஆண்டவனிடம் முறையிட்டார். ஆண்டவனும் உளமிரங்கி "அன்னவனை இனிச் சூலை மடுத்தாள்வம்" எனக்கனவில் உரைத்தனன். அவ்வாறே தருமசேனர்க்கு, வயிற்றினிடைச் சூலை நோய் புக்கது. அமணர் பலரும் ஈண்டி முயன்றும் குணம் பெறவில்லை; அனைவரும் கைவிட்டனர்; சூலை நோய் ஒழியத் திலகவதியாரை நாடித் திருவதிகை வந்தார் தருமசேனர் வந்த தம்பியிடம், திருவாளன் திருநீற்றைத் திலகவதியார் அளிப்பப், 'பெருவாழ்வு வந்தது' எனக் கருதி, அதனை வாங்கி உரு ஆர அணிந்தார்; தமக்கையுடன் திருக்கோயில் சென்றார்; ஈசனைத் தொழுது, வலம் கொண்டு இறைஞ்சினார்; தம்பிரான் திருவருளால், உரைத் தமிழ் மாலைகள் சாத்தும் உணர்வு பெற்றார். 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடினார்; சூலை நோய் அகன்றது. அங்கங்கள் அடங்க, உரோமமெலாம் அடையப் புளகங்கண் முகிழ்த்தலரப் பொங்கும் புலன் கண்கள் பொழிந்திழியப் புவிமீது விழுந்து புரண்டயர்ந்தார்; கருணைப் பெருவெள்ளம் காட்டிய செயலுக்கு எங்ஙனம் நன்றிசெய இயலும் எனத் தவித்தார். அப்போது, "பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடை பாடிய பான்மையினால் நாவுக்கரசென்றுல கேழினும் நின் நன்னாமம் நயப்புற மன்னுக ' எனும் வாய்மை ஒலி, வானிடை எழுந்தது. அன்று முதல், 'நாவுக்கரசர்' எனும் நற்பெயர் தாங்கி, மனத்தொடு வாய்மையுடன் மெய்யுற்ற திருப்பணி செய்பவராய்ச், சிவ சின்னம்பூண்டு, தியானம், ஞானம், திருப்பெயர், உழவாரம் (கருவி) ஆகியன கொண்டு இறைவனைத் தேவாரப் பதிகங்களால் பாடிப் பரவலாயினர்.

இவர்தம் மாற்றங் கண்டு மலைத்தனர் சமணர்; ஆதலின் துன்புறுத்த விரும்பினர். அரசனாம் மகேந்திர வர்ம பல்லவனை நாடி, ''நம் சமயம் ஒழித்தார் தருமசேனர்'' என நாவில் வந்தன உரைத்தனர்; அரசன் ஆணைப்படி நாவரசர்க்கு நவில முடியா இன்னல்களைத் தந்தனர் நாவுக்கரசரை நீற்றறையில் இட்டனர்; நஞ்சு கலந்த பாலடிசில் உண்ணச் செய்தன ; யானைக்காலில் இடறச் செய்தனர்; இறுதியாகக் கல்லுடன் கட்டிக் கடலில் இட்டனர்; சொற்றுணை வேதியனின் நற்றுணை அடிகளை மறவா நாவரசர் திருப்பதிகங்கள் பாடி, ஒன்றாலும் துன்புறாதிருந்த உயர்நிலையினைக் கண்டு உள்ளம் திகைத்தனர் சமணர். மகேந்திர பல்லவனோ, நல்லவனாகி, நாவரசை வணங்கிச் 'சைவ சமயமே மெய்ச்சமயம்' என உணர்ந்து சைவனானன்; சமணப் பள்ளிகளைச் சிவன் கோயிலாக்கினான் திருவதிகையில் 'குணதர வீச்சரம்' என்னும் திருக்கோயிலையும் கட்டுவித்தான்.

பின்பு, நாவரசர், திருத்தலங்கள் சென்று வழிபடலானார். திருப்பெண்ணாகடத்தில் உள்ள திருத்தூங்கானை மாடத்து இறைவனருளால் இடபக் குறியும், சூலக்குறியும் திருத்தோளில் பொறிக்கப் பெற்றார். சீகாழியில், திருஞானசம்பந்தரைக் கண்டு களித்து, அவரால் 'அப்பர்' என அழைக்கப் பெற்றார்; திருநல்லூரில் சிவபிரானின் சேவடி, தம்முடிமேல் சூட்டப் பெற்றார்; திங்களூரை அடைந்து அப்பூதியடிகளாரின் மகனான மூத்த திருநாவுக்கரசு, அரவு தீண்டி ஆவி நீக்கத் திருவருட்டுணையால் உயிர்ப்பித்தார்; திருவீழிமிழலையில் படிக்காசு (பொற்காசு) பெற்று அடியார்களின் அரும்பசி களைந்தார்; திருவாய்மூரில் இறைக் காட்சி கண்டின்புற்றார்; பழையாறை வடதளியில், சமணர் சூழ்ச்சியால் மறைப்புண்டிருந்த சிவலிங்கத்தை வெளிப்படுத்தினார்: திருப்பைஞ்ஞீலி செல்லும் போது, பசியால் வருந்த, ஆண்டவனால் பொதி சோறு அளிக்கப்பெற்றார். இறுதியில் கயிலைக் காட்சி காணவிரும்பி வடபுலம் சென்றார்; கால்களும் கைகளும் தேய்ந்தன; மார்பமும் தசையும் நைந்தன; என்பும் முரிந்தது; ஆயினும், 'ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்-

லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்'' என இருந்தார். இவர்தம் மனவுறுதி கண்ட மங்கைமணாளனார், 'ஓங்கு நாவினுக் கரசனே எழுந்திரு' என்ன, நாவரசரும் தீங்கிலா யாக்கை பெற்றவராய், ஆங்குள்ள பொய்கையில் மூழ்கித், திருவையாற்றில் எழுந்தார்; கயிலைக் காட்சியைக் கண்குளிரக் கண்டார்; திருப்பூந்துருத்தியில் திருமடம் அமைத்து உழவாரம் பணிபுரிந்தார். திருப்புகலூரில், உழவாரப் படையால் செதுக்கும்போது, பொற்குவையும் நவமணிக் குவியலும் கண்டு, அவற்றை ஓடும், கல்லுமாகக் கருதி வீசியெறிந்தார்; வானர மகளிர் தோன்றி வலைவீச முயன்றனர்; முற்றுந்துறந்த முனிவராம் வாகீசர், அவ்வலையில் வீழ்வரோ? திருப்புகலூரில் திருப்பணி செய்து வந்தபோது, மாதொரு பாகன் மலரடிக் கீழ்த் தங்க எண்ணங்கொண்டு, சித்திரைத் திங்கள் - சதய நாளில், ''எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ .... ... புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே!'' என்னும் இறுதித் திருத்தாண்டகத்தைப் பாடிச், சிவானந்த ஞானவடிவேயாகி, அண்ணலார் சேவடிக்கீழ் இனிதமர்ந்தார்!

நாவரசர் வாழ்ந்த காலம், மகேந்திரவர்மபல்லவனின் காலமாதலின், அது, கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியாகும் என்பர் வரலாற்றாசிரியர்!

திருக்குறுந்தொகை

நாவுக்கரசர் பாடிய பாக்கள் அனைத்தும் இலக்கணத்தோடு பொருந்தியவையே! திருநேரிசை, திருவிருத்தம் என்னும் பாக்கள் 4ஆம் திருமுறையிலும், திருக்குறுந்தொகைப்பாக்கள் 5ஆம் திருமுறையிலும், திருத்தாண்டகப் பாக்கள் 6ஆம் திருமுறையிலும் தொகுக்கப் பெற்றுள்ளன. இவற்றுள் திருகுறுந்தொகை என்பது, ''நாற்சீர் நாலடியாய் அடிதோறும் தேமா புளிமா என்பவற்றுள் ஒன்று முதற்சீராகவும், கருவிளம் கூவிளம் என்பவற்றுள் ஒன்று நான்காம் சீராகவும், இடையிரு சீர்கள் பெரும்பாலும் விளச் சீர்களாகவும், சிறுபான்மை மாச்சீர்களாகவும் அமைய வரும் செய்யுள்வகை'' என்பர் திரு சொ. சிங்காரவேலனார். இத் திருக்குறுந்தொகையாப்பிலக்கணப்படிக் 'கலி விருத்தம்' ஆகும் என்பர் பேராசிரியர் திரு. க, வெள்ளை-

வாரணனார். இத் திருக்குறுந்தொகையுள் வரும் திருப்பதிகங்கள் 100; இவற்றுள் திருத்தலங்கட்குச் சென்று பாடிய பதிகங்கள் 88; பொதுவாகப் பாடிய பதிகங்கள் 12. பாடப்பெற்ற பாடல்களின் எண்ணிக்கை 1015 ஆகும்.

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார், செய்யுள் இலக்கணம் செப்ப வந்தபோது, எண்வகை வனப்புக்களைப் பற்றி எடுத்தோதுகின்றார். அவ்வனப்புக்களாவன: அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு. 'அம்மை' என்னும் வனப்புக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்வது அப்பர் திருக்குறுந்தொகை எனலாம்.

"சின்மென் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அம்மை தானே அடிநிமிர் வின்றே"
(தொல் - பொருள் - செய்யுளியல் 227)

என்பது அதன் இலக்கணம். "சிலவாய், மெல்லியவாகிய மொழியினானே தொடுக்கப்பட்ட அடி நிமிர்வில்லாத செய்யுள் அம்மையாம்" என்பர் இளம்பூரணர். அப்பர் குறுந்தொகையனைத்துமே, இவ்வம்மை வனப்பின் இலக்கணம் பெற்று இலங்குவதென்பதை ஊன்றி உணர்வார் அறிவர்!

இத் 'திருக்குறுந்தொகை'யில் சில பாடல்கள் இங்குக் காண்போம்:

கோயில்

'கோயில்' என்பது சிதம்பரத்தைக் குறிக்கும். சோழ நாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள தலங்களில் ஒன்று. இப்பதிக்குச் 'சிற்றம்பலம், புலியூர், பெரும்பற்றப்புலியூர், தில்லை, தில்லையூர்' முதலான வேறு பெயர்களுமுண்டு. இங்கு எழுந்தருளியுள்ள இறைவன், தில்லை நடராசப்பெருமான்! இவனுக்குப் 'பொன்னம்பலக் கூத்தன், பொன்னம்பல நாதன், ஆனந்தத் தாண்டவப் பெருமாள் நாயனார், அழகிய திருச்சிற்றம்பலமுடையார், ஆளுடைய நாயனார், சிதம்பரேசுவரர், தில்லைநாயகத் தம்பிரானார், மாணிக்கக் கூத்தன், முதலான திருப்பெயர்கள் உண்டு. இங்குள்ள அம்மைக்குச் சிவகாமசுந்தரி என்று பெயர். நடராசப் பெருமான் திருநடனம் புரியும் சபை,

'திருச்சிற்றம்பலம்' என்று புகழப்பெறுவது! திருநாவுக்கரசர் திருமுதுகுன்றம் முதலான திருப்பதிகட்குச் சென்று இறைவனை வழுத்திய பிறகு, 'கோயில்' எனச் சிறப்பிக்கப்படும் சிதம்பரத்திற்கு வந்து திருச்சிற்றம்பல முடையானைக் கண்டு தொழுத போது, அருட்பெருமகிழ்ச்சி பொங்கப் பாடிய பதிகம் இது!

''அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே!''

(பொ-ரை) தில்லை என்னும் சிதம்பரத்தில் உள்ள திருச்சிற்றம்பலத்தே திருநடனம் புரியும் நடராசப் பெருமான், பொன்னுலக வாழ்வினைத் தருவன்; (எல்லாவற்றிற்கும் மேலான) பேரின்ப வீட்டினையுந் தருவன்; அன்றியும், இவ்வுலகிலே என் அன்பு விரிந்து பெருகுமாறு, அவனது திருநடனத்தைக் கண்குளிரக் கண்டு இன்புறும் வகையில், இம்மனிதப் பிறவியினை இன்னும் எனக்கு நல்குவனோ? (அறியேன்!)

[தில்லைச் சிற்றம்பலம், பொன்னம்பாலிக்கும், அன்னம் பாலிக்கும் எனக்கொண்டு கூட்டுக. அன்னம்-சோறு, அமிழ்தம், அமிழ்தமாயிருக்கும் வீடுபேறு (மோட்சம்); பாலிக்கும் - தரும்; தில்லை - சிதம்பரம்; சிறுமை + அம்பலம் - சிற்றம்பலம்; அம்பலம் - சபை. அவன் நடனமாடும்சபை, சிறிதாயிருத்தலின் சிற்றம்பலம் எனப்பட்டதாகவோ, அன்றி அவன் நடனமாடும் திருக்கயிலாயத்தை நோக்க இது சிற்றம்பலம் என அழைக்கப்பட்டதாகவோ கருதலாம். பொன்னம் - பொன்னுலக வாழ்வு, தேவ உலக வாழ்வு; பாலிக்கும் + மேலும் + இப் பூமிசை = பாலுக்கு மேலுமிப் பூமிசை; பூமிசை - பூமியில்; என் + அம்பு + ஆலிக்குமாறு - என்னம் பாலிக்குமாறு; அன்பு - அம்பு என மருவியது. ஆலிக்குமாறு - பெருகுமாறு; இன்னம் - இன்னும்; அன்னம் பாலிக்கும் தில்லை என்பதற்கு, உண்ணும் உணவு தருகின்ற தில்லை, இறைவனுக்குப் பெருமளவில் உணவு நிவேதனம் படைத்தற்குரிய தில்லை, அன்னங்கள் நடமாடும் வளப்பமான தில்லை எனப் பல பொருள் கொள்ளலாம். அவ்வாறே பொன்னம் பாலிக்கும் என்பதற்குப் பொன்னையே

வாரிவழங்குவன் என்றும் பொருள் கொள்ளலாம். என்னம் பாலிக்குமாறு கண்டின்புற என்பதற்கு என் அன்பு பெருகும் வகையில், (ஆறு = நெறி) சிவநெறிகளை அறிந்து இன்புற என்னும் பொருள் கொள்ளலாம். இன்னம் பாலிக்குமோ என்பதை இன்+அம்பு+ஆலிக்குமோ எனப் பிரித்து, அவனது இனிய அன்பு என்மீது வளருமோ என்றும் பொருள் கொள்ளலாம். தில்லைத் திருநடனக்காட்சி, இப் பூதவுடம்பு உள்ளபோதே வீடுபேற்றின் இன்பத்தைத் தர வல்லது என்பதும், மனிதப்பிறவி ஒன்றே இறைவனது திருவடிப்பேற்றைப் பெறுதற்குக் கருவியாயிருப்பது என்பதும் இப்பாடல் உணர்த்துகின்றது. "குனித்த புருவமும் ... மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" என்று இவரே பாடிய மற்றொரு பாடலும், "அரிதரிது மானிடராத லரிது" என்ற ஔவை பாடலும் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கன ]

திருவேட்களம், திருக்கழிப்பாலை முதலான திருப்பதிகட்குச் சென்று மீளவும் 'கோயில்' எனப்படும் தில்லைமாநகருக்கு வரும்போது, தில்லைநடராசனை நினைந்து பாடிய பதிகம் இது;

"பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ?"

(பொ-ரை) பனைமரம் போன்ற பெரிய தும்பிக்கையினையும், மூன்றுவித மதநீர் பொழியும் தன்மையினையும் கொண்ட யானையின் தோலை உரித்துப் போர்த்திக் கொண்டவன்; தன்னை நினைப்பவர்தம் மனத்தையே தான் திருக்கோயிலாகக் கொண்டு உறைபவன்; வேடங்கள் அனைத்துங் கொண்டவன்; அத்தகைய நடராசப் பெருமானை, தினைத்துணைப் பொழுதாயினும் மறந்து இவ்வுலகில் வாழ்வனோ?

[பனை-பனைமரம்; கை துதிக்கை; மும்மதம்-மூன்று மதநீர்; வேழம்-யானை; அனைத்து வேடமாம்-காணும் வடிவமனைத்தும் அவன் உருவே என்பதாம்; தினைத்தனை - தினையளவு; உய்வனோ - ஈடேறுவனோ? அவனை மறக்கேன்; மறந்தால் வாழேன் என்பதாம். 'அறக்கண் எனத்தகும் அடிகள் ஆரூரரை

மறக்ககில்லாமையும்' என்பது சுந்தரர்வாக்கு. நினையாதார் மனத்தும் ஆண்டவன் உளன்; ஆயினும் நினைப்பவர் மனத்தே வெளிப்பட்டுத் தோன்றுவன்; 'கூத்தனை மறந்தால்உய்வில்லை; எனினும் மறவாதவன் போல் நான் நடிப்பது அனைத்தும் வேடமாம் என்று' கொள்ளுதலும் பொருந்தும்; 'நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து' எனும் மணிவாசகர் வாக்கினை நினைக்க. பனைக்கை மும்மத வேழம் உரித்த வரலாறு: கயாசுரன் என்பான் யானை வடிவங் கொண்டவன். மேருமலையில் நான்முகனை நோக்கித் தவஞ்செய்து நீண்ட வாழ்நாளும் வலிமையும் வேண்டினான். நான்முகனும் அவ்வரங்களை அளித்த போது 'சிவபிரானுக்கு எதிரே சென்றால் வரம் பயனளிக்காது' என்றனன். கயாசுரன் எல்லா இடங்களிலும் சென்று, வெற்றி பெற்று வந்தான். இறுதியில், காசியில் உள்ள முனிவர்களைத் துரத்தியபோது, அவர்கள் மணிகர்ணிகை என்னும் திருக் கோயிலை அடைந்து, சிவபெருமானை வணங்கினர். கயாசுரன் அங்குச் சென்ற போது, சிவபெருமான் உக்கிர உருவெடுத்து, அவனைத்தன் திருவடியால் மிதித்துத், திருக்கரங்களால் அவன் தோலை உரித்துப் போர்வையாகக் கொண்டார்.]

திருநெல்வாயில் அரத்துறை

நடுநாட்டில் உள்ள திருத்தலங்களுள், திருநெல்வாயில் அரத்துறையும் ஒன்று. இதற்குத் 'திருவரத்துறை' என்ற வேறுபெயரும் உண்டு. இங்குள்ள இறைவனுக்கு 'அரத்துறை நாதர்' என்றும், அம்பிகைக்கு 'ஆனந்தநாயகி' என்றும் பெயர். திருநாவுக்கரசர், பெண்ணாகடத்தில் உள்ள திருத்தூங்கானை மாடம் என்ற திருக்கோயில் இறைவனாம் சுடர்க்கொழுந்து நாதரைப் பரவியபின், திருவரத்துறை நாதரைப் பணிந்து பாடிய பதிகம் இது:

''கரும்பொப் பானைக் கருப்பினிற் கட்டியை
விரும்பொப் பானைவிண் ணோரு மறிகிலா
அரும்பொப் பானை யரத்துறை மேவிய
சுரும்பொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே!''

(பொ-ரை) நாம் தொழுது வணங்குவது, கரும்பு போல் இனியவனை, அக் கரும்பினின்று எடுக்கும் கட்டி போன்றவனை, விரும்பும் பொருளைப் போன்றவனை, அமரர்களும் அறியமுடியா அரும்பு போன்றவனை, திருவரத்துறையில்

பொருந்திய வண்டு போன்றவனையே யாம்! (அவனை நீவிரும் அறிவீராக!)

[கரும்பு ஒப்பானை - கரும்பு போல் இனியவனை; கரும்பில் சாறு மறைந்து கிடக்கிறது. அதனை ஆலையில் இட்டுப் பிழிந்தால் வெளிவரும். அதுபோல, மறைந்து நிற்கும் இறைவனையும் அன்பெனும் ஆலைவழி அறியலாம் என்பதாம். கட்டி-கறுப்புக்கட்டி; மெய்யன்பராயிருப் போர்க்கு அவனது அருள், கட்டிபோல் வெளிப்பட்டுத் தோன்றும் என்பதாம்; அடியவர் எவ்வெப்பொருளின் வழியாக அவனைக் காண விரும்புகிறார்களோ, அவ்வப் பொருளின் வழியாக அப் பொருளேயாகக் காட்சியளிப்பன் என்பதைக் குறிக்க 'விருப்பு ஒப்பானை' என்றார். அன்பிலார் எனின் தேவரும் அறியார். அன்புடையார் உள்ளத்தே அரும்புபோல் தோன்றி வெளிப் படுவன்; மலர் விரிவதற்குச் சுரும்பு துணை நிற்பது போலச் சிவமணம் கமழ்தற்குச் சிவபெருமான் சுரும்புபோல் உள்ளான் என்ற தத்துவங்கள் இப்பாடலில் அமைந்துள்ளன. ''கனியினுங் கட்டிபட்ட கரும்பினும் ... இனியன்'' என்னும் இவர் அருளிய தேவாரப் பாட்டின் கருத்து ஒப்புநோக்கத் தக்கது.]

திருவண்ணாமலை

திருவண்ணாமலை என்னும் இவ்வூர், வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ளது. நடுநாட்டில் உள்ள தலங்களுள் ஒன்று. 'நினைக்க முத்தி கிடைக்கும் தலம் இது' என்பர். இங்கு எழுந்தருளிள்ள இறைவனுக்கு 'அண்ணாமலைநாதர், அருணாசலேசுவரர்' என்றும், இறைவிக்கு 'உண்ணாமுலை மை' என்றும் பெயர். மணிவாசகப் பெருந்தகையார், 'ஆதியு மந்தமுமில்லா வரும் பெருஞ் சோதியை' என்று தொடங்கும் திருவெம்பாவையினைப் பாடி யருளியதும் இத்தலமேயாம். நாவரசர், நாதர் மருவுந் திருமலைகள் நாடும் பதிகள் பல மிகவும் காதல் கூரச்சென்றிறைஞ்சிக் கலந்த இசைவண்டமிழ் மாதொர் பாகர் அருளாலே வடபால் நோக்கி, ஆதி தேவர் அமர்ந்த திருவண்ணாமலையை நண்ணிக் கண்ணாரமுதை, உண்ணா நஞ்சம் உண்டானைக் கும்பிட்டு உருகும் சிந்தை

யுடன், பண்ணார் பதிகத் தமிழ் பாடிப் பணிந்து பரவிப் பணி செய்தார். அப்போது பாடிய பதிகங்களுள் ஒன்று இது!

''கண்டந் தான் கறுத் தான்கால னாருயிர்
பண்டு கால்கொடு பாய்ந்த பரமனார்
அண்டத் தோங்குமண் ணாமலை கைதொழ
விண்டு போகுநம் மேலை வினைகளே!''

(பொ-ரை) கழுத்தில் கறுப்பு நிறமுடையவர். முன்பு, கூற்றுவனின் அரிய உயிர்மீது தன் திருவடியைச் செலுத்திய மேலானவர். அண்டங்களளவு ஓங்கி உயர்ந்து நின்ற இத் தகைய திருவண்ணாமலைநாதரைக் கைகளால் தொழ, நம் முடைய பழைய தீராத வல்வினைகள் நம்மைவிட்டு நீங்கும்!

[கண்டந்தான் - கழுத்து மட்டுமே; கறுத்தான் - கறுப்பு நிறமுடையவன்; கண்டந்தான் கறுத்தான் காலன் ஆருயிர் கறுத்தான் என்றுங்கொண்டு, ஆருயிர் மீது சினங்கொண்டு என்றும் கூறலாம். அண்டம் - உலகங்கள்; அண்ணாமலையான் அண்டமுட்டுமளவும் ஓங்கி நின்றான் என்பதாம். விண்டுபோகும்- நீங்கிச் செல்லும்; ''காலனைக் காலாற் செற்றன் றருள்புரி கருணை யோனே'' என்பதும் இவர் வாக்கே! காலனாருயிர் கால் கொடு பாய்ந்த வரலாறு : கடகம் என்ற நகரில் வாழ்ந்த மிருகண்டு என்னும் அந்தணர், மருத்துவதியை மணந்து இல்லறம் நடத்தினார். நெடுங்காலம் மகப்பேறு இல்லாமை-யால் வருந்திய அவர், காசிப் பதியினை அடைந்து சிவபெரு மானை வழிபட்டுத் தவமியற்றினார். இறைவன் அருளால் 16 ஆண்டுகள் மட்டுமே இவ்வுலகில் வாழக்கூடிய அறிவும், பண்பும் நிறைந்த ஒரு மகன் பிறந்தான். 'மார்க்கண்டேயன்' என்னும் பெயர் தாங்கிய அவன், நாளும் சிவபெருமானை நினைந்து வழிபட்டு வரலாயினன். ஆண்டுகள் 16 முடியப் போவதறிந்த பெற்றோர் பெரிதுங்கவன்றனர். மார்க்கண்டேயனோ திண்ணிய சிவப்பற்றுடையவனாய் இருந்தனன். காலன் (யமன்), உரிய காலத்தே வந்தபோது, மார்க்கண்டேயன், தான் வழிபட்டு வந்த சிவலிங்கத்தை இறுகத் தழுவினான். அப்போதும் காலன், தன் பாசக் கயிற்றை வீசி எறிந்தனன் அந்த இலிங்-

கத்தினின்றும் சிவபெருமான் வெளிப்பட்டுக் காலனைத் தன் காலால் உதைத்து, மார்க்கண்டேயனுக்கு 'என்றும் பதினாறு' என்னும் வாழ்வினைத் தந்தருளினார்.

முடிவுரை

எளிய, இனிய சொற்களால் அமைந்த பொருள் ஆழம் மிக்க 'அப்பர்' குறுந்தொகை' படிப்பதற்கு எளிமையானது ; சிந்திக்கச் சிந்திக்கத் தேன் ஊறுவது; படிப்போம்; பரமன் அருள் பெறுவோம் !

# 6

# பொய்கை இடத்தழுத புகலியர்கோன் (திருஞானசம்பந்தர்)

நால்வர் நான்மணிமாலை

''தனித்தனி முக்கனிபிழிந்து வடித்தொன்றாய்க்கூட்டி ... இனித்திடுந்தெள்ளமுதாக'' இலங்கும் சிவபெருமானைப் பகலும் இரவும் பொழுதறு காலத்தென்றும் பூசனை விடாது செய்து, தொழுதகை தலைமேல் ஏறத் துளும்பு கண்ணீருள் மூழ்கி அழுது அடியடைந்த அன்பர் பலராவர்! அவருள், சைவத்தின் தனித்தலைவர்களாய்ச் - சைவ சமய குரவர்களாய்ப் போற்றப்படுஞ் சிறப்புக்குரியோர் நால்வராவர்! சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் எனும் இந்நால்வரும், தமிழ்ச் சமுதாயம் என்னும் நன்னிலத்தில், சைவம் எனும் உரமிட்டுப், பத்தி எனும் கொடி வளர்த்துத், தேவார திருவாசகமெனும் தீஞ்சுவைக் கனிகளை உண்ணச் செய்தனர்!

''சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுஞ் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும் - முற்கோல
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரா னைந்தெழுத்தெங் கே''

என்ற பாடல், நால்வரின் திருப்பதிகச்சிறப்பைக் காட்ட எழுந்தது! அளவிலாத பெருமை பெற்ற இவ் அடியார் நால்வரையும் போற்றிப் புகழ்ந்துரைக்கும் நூல்கள் பலப்பல! அவற்றுள் ஒன்றே 'நால்வர் நான்மணிமாலை'! இதனை அருளியவர், 'கற்பனைக் களஞ்சியம்' எனக் கற்றுவல்லோரால் போற்றப் படும் சிவப்பிரகாச அடிகளாராவர்! செல்வச் சிறப்புடைய தாய் ஒருத்தி, தன் அருமைப் பிள்ளைகட்கு, மாணிக்கங்களால் ஆகிய மாலையினைச் சூட்டி மனமகிழ்வதுபோலச் 'சிவப்பிர காசம்' என்னும் செந்தமிழ்ப் புலவராகிய அன்னையாரும் தம்மால் பெரிதும் விரும்பப்படுகிற ஞானசம்பந்தப் பிள்ளையார் முதலான நான்கு பேருக்கு மாணிக்கமாலையினைச் சூட்டி

மனமகிழ்கின்றார்! முத்து, பவளம், மரகதம், மாணிக்கம் என்ற நால்வகை மாலைகளை முறையே கோக்கப்பெற்ற மாலை போன்று 'வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா' என்ற நான்கு வகைப் பாக்களை நிரலே நிறுத்தி, அந்தாதித் தொடை அமையுமாறு பாடப்பட்ட செந்தமிழ்ப் பனுவலே 'நால்வர் நான்மணிமாலை'!

இது, நாற்பது பாக்கள் எனும் தருக்களைக் கொண்ட சின்னஞ் சிறு இலக்கியச் சோலைதான் எனினும், இதனுள் நுழைந்தாலோ, இறைவனின் பசுமைக் காட்சியினைக் காண லாம்; தெய்வத் தமிழ் மணம் நுகரலாம்; தெய்வப் பாவலர் எனும் அஞ்சிறைத் தும்பியின் இன்னோசை கேட்கலாம்; திருப்-பாடல்களால் செவிநுகர் கனிகளைச் சுவைக்கலாம்; இத் தெய்வத் திருச்சோலையை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் மெய்சிலிர்க்கும். இங்ஙனம் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிதல் ஐம்புல இன்பமும் ஆரத்தருவது இந் 'நால்வர் நான்மணிமாலை' ஆகும்!

முத்து - வெண்பா

இம் மணிமாலையில் முந்தி நிற்பது 'முத்து' என்னும் நன்மணியாம்! முத்துச் சிவிகையும் முத்துப்பந்தரும் பெற்ற முத்தமிழ் விரகராகிய ஞானசம்பந்தப் பெருமானுக்கு 'முத்து' மாலையைச் சூட்டி மகிழ்கிறார் சிவப்பிரகாசர்! சம்பந்தரை 'வெண்பா' எனும் ஒண்பாப் பத்தினாற் பத்தியுடன் பாடிப் பரவு கின்றார் அடிகளார். வேற்றோசையும் வேற்றுத்தளையும் விரவாமல், தனக்கே உரிய செப்பலோசையும், இயற்சீர் வெண்சீர் வெண்டளைகளும் கொண்டு ஏறுபோற் பீடுநடைபோடும் இயல் பினது வெண்பா! கள்ளமில்லாப் பிள்ளை உள்ளம் கொண்ட-வர். மறந்தும் பிற சிந்தனை கொள்ளாதவர். நாளும் தமக்கே உரிய இன்னிசைப் பாடலால் தமிழ் பரப்பும்பாண்மையர் ஆகிய திருஞான சம்பந்தரை 'வெண்பா' எனும் ஒண்பா யாப்பால் பாடிப் பரவும் சிவப்பிரகாசரை எப்பாவால் ஏத்த இயலும்?

சம்பந்தன் திருப்பாட்டு

மாதவத்தோர் வாழவும், வையகத்தோர் உய்யவும், மேதக்க வானோர் வியப்பவும், ஆதியாம்வென்றிக் கலி கெடவும்,

வேதத்தொலி மிகவும் ஒன்றிச் சிவனடியார் ஓங்கவும், துன்றிய பன்னுதமிழ்ப் பதினாறாயிர நற்பனுவல் மன்னு புவியவர்க்கு வாய்ப்பவும்-முன்னிய சிந்தனையாற் சீரார் கவுணியர்க்கோர் சேய் என்ன வந்தங்கவதரித்த வள்ளலே, ஞானசம்பந்தர்! அவரோ, அந்தமில் சீர் ஞானச்சுடர் விளக்கு! நற்றவத்தோர் கற்பகம்; மான மறையவற்றின் வான் பொருள்; ஆனசீர்த் தத்துவன்; நித்தன்; சைவத்தவர் அரசு; வித்தகத்தரல் ஓங்கு விடலை; முத்தமிழின் செஞ்செசற்பொருள் பயந்த சிங்கப்; தெவ்வருயிர் அஞ்சத் திகழ்ந்த அடலுரு; சீலத் திருஞானசம்பந்தன் என்று உலகஞ் சேர்ந்த ஒரு நாமத்தாலுயர்ந்த கோ! இத்தகைய வள்ளல்பால் தம் உள்ளத்தைப் பறிகொடுத்த சிவப்பிரகாசர் 10 பாடல்களால், அவர் செய்த சிந்தைக்கினிய விந்தை நிகழ்ச்சிகளையும், சிவனருளால் பெற்ற பேறுகளையும் இனிதே எடுத்து இயம்புகின்றார்!

ஞானசம்பந்தப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய தேவாரம், வெறும் பாக்கள் அல்ல! தெய்வத் திருப்பாக்கள்! அப்பாக்கள் மந்திரங்கள் எனப்படும் மறைமொழிகள்! ஆதலின் அவற்றிற்கு, இறந்தாரையும் எழுப்புதல் முதலான தெய்வீக ஆற்றல்கள் உண்டு. பெருமான் செய்த செயற்கரிய செயல்கள் பலப்பல! அவற்றுள் குறிப்பிடத்தக்க சிலவற்றைச் சிவப்பிரகாசர், தம் பாவாற் போற்றுகின்றார்.

''பயனாகும் நல்லாண் பனைக்கு விடத்திற்கு
மயலாகும் நோய்க்கு மருந்தாகும் - உயிராகும்
சிந்தும்எலும் பிற்குச் சிரபுரத்து நாவலன்சம்
பந்தன் இயம்புதிருப் பாட்டு'' (17)

''சம்பந்தன் இயம்பும் திருப்பாட்டானது, மாண்புதிகழ் எம்பெருமான் மன்னுதிருவோத்தூரில் ஆண்பனைகளைப் பெண் பனைகளாக மாற்றியது; திருமருகல் நகரின்கண், மின்னார் வெள் எயிற்றரவு கவ்வியதால் தன்னாவி நீங்கிய வணிகமணாளனை உயிர்ப்பித்து வாழ்வளித்தது; கோதைவேல் தென்னன்றன் கூடற்குலநகரில் வேந்தன்கூன் பாண்டியனின் வெதுப்புறு வெப்பு நோயினைப் போக்கியது; பன்னு தொல் புகழ்த்த திருமயிலாப்புரிப் பதியில், அரவு தீண்டி இறந்துபோன பூம்பாவை என்னும் பெண்ணின் நல்லாளின் எலும்புதனை

மீண்டும் அப்புண்ணியப் பாவையாகவே ஆக்கியது! என்னே விந்தை!'' என உருகி உரைக்கின்றார் சிவப்பிரகாசர்.

''ஞானசம்பந்தப் பெருமானே! உனது அருள், இம் மட்டோ! தமது திருமணக் காட்சியைக் காணவந்த, வருமுறைப் பிறவி வெள்ளம் வரம்பு காணாது அழுந்தி, உருவெனும் துயரக் கூட்டில் உணர்வின்றி மயங்கிய அத்துணைப் பேரும் மருவிய பிறவி நீங்க முத்தியின்பம் கிடைக்கச்செய்தபேரருளாளனன்றோ? உன் திருவருளின் அருமை தெரியாமல், அனல் வாதமும் புனல் வாதமும் இட்டுத் தம் வாணாளை வீழ்நாளாகக் கழித்துக் கழுவேறினரே அமணர்! அவர்களின் அறியாமையை என்னென்பது?''

''கொள்ளைகொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத்
தள்ளும் திருஞான சம்பந்தா? — வெள்ளமிழும்
ஏடேறப் பால்குறைந்த தென்றமுவ ரேகழுவில்
காடேறப் புக்கவரு சர்'' (21)

என ஏத்துகின்றார் சிவப்பிரகாசர்! ஞானசம்பந்தர் திருமணத்தின்போது அதனைக் காணும் பேறு பெறாமற் போயினமே! கண்டிருந்தால், அணிமுகத்தின் சிவிகை முதல் அணிதாங்கிச் சென்றோர் முதலான அனைவர்க்கும் கிடைத்த அம்முத்தி இன்பம் தமக்கும் கிடைத்திருக்குமன்றோ எனச் சிவப்பிரகாசர் ஏங்கும் ஏக்கம் இப்பாடலில் எதிரொலிக்கிறது!

திருநெல்வேலி அரத்துறையில் உறையும் அரத்துறை ஈசன், 'ஞானசம்பந்தன் நம்பால் அணைகின்றான்' எனக்கருதி, மான முத்தின் சிவிகை மணக்குடை முதலாயின தந்தருளினன் என்பது வரலாறு. இதனைச் சிவப்பிரகாசர், வஞ்சப்புகழ்ச்சி யணியாக வாழ்த்துகிறார்!

சிவபெருமானோ, வீடுதோறும் இரந்து திரியும் பிச்சாண்டி! அவன் ஏறிவரும் ஊர்தியோ, காளை! அவன் எப்படி ஞானசம்பந்தனுக்கு முத்துச் சிவிகையும் முத்துக்குடையும் தந்திருக்க இயலும்! ஒருகால் வேறு யாரிடமிருந்தேனும் பெற்று, இப் பிள்ளைக்குத் தந்திருப்பானோ? சரி, சரி ஞானசம்பந்தர்

வரட்டும், அவரிடமே இந்தக் கேள்வியைக் கேட்டு உண்மை தெரிந்து கொள்வோம்! என்கிறார்!

''தேனே றலர்சூடிச் சில்பலிக்கென் றூர்திரியும்
ஆனேறி யாண்டுப் பெற்றான்கொல்நீ-தானேறும்
வெள்ளைமணி யொன்று விழைவோம் வாங்கிஅப்
பிள்ளையைநாம் காணப் பெறின்'' (29)

இப்பாடலை நகைச்சுவை பயப்பதாகப் பாடியிருப்பினும், தான் எப்படியிருந்தாலும் தன் பிள்ளை நன்றாக இருக்க வேண்டும் என்று கருதும் ஒரு தந்தை போலத் தன் அடியார்கள் சிறக்க இருக்க வேண்டும் என்று எண்ணும் கருணையுள்ளங் கொண்டவனே எம்பெருமான் என்பதைத்தானே சுட்டுகின்றார் அடிகளார்!

குறள் விளக்கம்

''அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை''

என்பது பொய்யில்புலவர் அருளிய பொருளுரை. ''அறத்தின் பயன் இதுவென விளக்கிக் கூறவேண்டா! பல்லக்கைச் சுமப்பவனுக்கும் அதன்மீது அமர்ந்து செல்பவனுக்கும் இடையே உள்ள தன்மையினைக் கொண்டே அறிந்து கொள்ளலாம். பல்லக்கைச் சுமப்பவன், முற்பிறவியில் பாவஞ் செய்தவன்; அதில் அமர்ந்திருப்பவன், முற்பிறவியில் அறஞ் செய்தவன். அறப்பயனை இதை வைத்தே உணரலாம்!'' என்று. இக்குறட்பாவுக்கு ஓர் உரை கூறுவதுண்டு! அப்முறையிற் பார்த்தால், சம்பந்தப் பெருமானின் பல்லக்கைச் சுமந்து சென்றவர்கள் அனைவருமே பாவம் செய்தவர்களாவர்! அங்ஙனமாயின், சம்பந்தரது சிவிகையைத் தாங்கிவந்த நாவுக்கரசரும் பாவஞ் செய்தவரா என்ற வினா எழக்கூடும். இதற்கு ஏற்ற விடையாக,

''அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடையே-மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பிரீத்தார் திரிகுவர்மற்
றுந்துஞ் சிவிகையினை ஊர்ந்து''

என்னும் பாடலைச் சிவப்பிரகாசர் பாடினாரோ என்று எண்ணத் தோன்றுகிறது சம்பந்தரது சிவிகையைத் தாங்கியோர் அனை

வரும் தோள்களாலெடுத்திருக்கின்றனர். எனவே சிவிகையில் இருப்பவனையும் சுமப்பவனையும் வைத்துக் கொண்டு அறஞ் செய்தான் இவன் என்றும், மறஞ் செய்தான் அவன் என்றும், இக்குறளுக்கு உரை கூறினால், என்றும் புலராது யாணர் நாட் செல்லுகினும் நின்றலர்ந்து தேன் பிளிற்றும் நீர்மையதாய் இலங்கும் திருக்குறள், பொய்யாகிப் போய்விட ஏதுவாகும்! எனவே பொய்யாமொழியைப் பொய் ஆக்காமல், அதற்குக் கூறப்படும் உரையினைப் பொய்யாக்கிப் புத்துரை கூறினால் உலகம் ஏற்குமன்றோ?

ஈண்டு, 'மறுத்தார்' என்ற சொல்லிற்குக் குறளை மறுத்தார்' என்று பொருள் கொள்வதற்கு மாறாகச் சொல்லப்பட்டு வரும் பழைய உரையை மறுத்தார் எனக் கொள்ளுதல் பொருத்தமாகத் தோன்றுகிறது. ''சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் கையிற் காணப்படும் வேறுபாட்டை மட்டும் வைத்துக்கொண்டு அறத்தாறு இது எனக் கூறிவிடவேண்டாம்!'' எனப்பொருள் கொண்டால் குறளுக்கு ஏற்றம்; சம்பந்தப் பெருமானின் சிவிகை தாங்கி வந்தோர்க்கும் ஏற்றம்! எனவே இவ்விடத்தில் சிவப் பிரகாசர், குறளை மறுத்ததாகக் கொள்ளாமல், குறளுக்குச் சொல்லப்பட்டுவரும் பழைய உரையை மறுத்ததாகக் கொள்ளு வதில் யாருக்கும் இழுக்காகாது! அன்றியும் தெய்வப் புலவர் திருவள்ளுவரிடத்து எல்லையில்லாப் பேரன்பு பூண்டவராகிய நம் சிவப்பிரகாசர். குறளை மறுத்தார் எனக் கொள்வதும் ஒல்லாது!

பொய்கையிடத்தழுத புகலியர்கோன் .

திருஞான சம்பந்தர் இவ்வுலகில் திருவவதாரஞ் செய்யா மற்போனால், சைவம் இல்லை; சைவத்தோடு பின்னிப்பிணைந்த செந்தமிழும் இல்லை! ஞானசம்பந்தரது வரலாற்றில் சிறப்பாகக் கொள்ளத்தக்கது, அவர் பொய்கையிடத்தழுத புண்ணியச் செயலேயாம்!

சீகாழிப்பதியிலே, அந்தணர்தம் குடி முதல்வராய் விளங்கிய சிவபாதவிருதயர், நீராடப் போகும்போது, தாம் பெற்ற ஞானக் கன்றாகிய சம்பந்தரையும் உடன் தாங்கிச் சென்றார். குழந் தையைக் குளக்கரையில் இருத்திவிட்டுப் பெரும்பொழுது நீர்க்குள் மூழ்கித் திளைத்தார். தந்தையை காணாது குழந்தை

அழுதது. ஆம்! உலகங்கட்கெல்லாம் ஒப்பிலா அப்பனாக விளங்கும் சிவபெருமாகிய தந்தையைக்காணாமல்தான் அழுதது!

'அழுகையிலேபிறப்பது அவலம்' என்பர்அறிஞர். ஆனால், சம்பந்தர் அழுகையினால் அவலம் பிறக்கவில்லை; மாறாக, ஆன்ற சைவம் மலர்ந்தது! இனிய தமிழிசை ஏற்றம் பெற்றது!

"கண்மலர்கள் நீர்ததும்பக் கைம்மலர்களாற் பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணிஅதரம் புடைதுடிப்ப
எண்ணில்மறை ஒலிபெருக எவ்வுயிரும் குதுகலிப்ப
புண்ணியக்கன் றனையவர்தாம் பொருமிஅழு தருளினார்"

எனத் தெய்வச் சேக்கிழார், அழுத குழந்தையின் அழகுறு செயல்களை வண்ணத் தமிழால் வரைந்து காட்டுவார்!

அழுகின்ற பிள்ளையார்தமை நோக்கி அருட்கருணை, எழுகின்ற திருவுள்ளத் திறையவர்தாம், எவ்வுலகும் தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்தருளித் 'துணை நகில்கள் அழுகின்ற பால் அடிசில் பொன்வள்ளத் தூட்டு' என்றான். உமையம்மையும் சிவஞானத் தின்னமுதம் குழைத்தருளி 'உண் அடிசில்' என ஊட்டினாள்!

"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமைஇலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில்"

என்பது சேக்கிழார் திருவாக்கு!

இவ்வரிய நிகழ்ச்சியினை நம் செந்தமிழ்ச் சிவப்பிரகாசர், அகம் குழைந்து உணர்கின்றார். ஞானப்பால் உண்ட செய்தியைத் தன் ஒண்பாவால் உணர்த்துகின்றார்:

"பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையினியற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு-நாவான்
மறித்தெஞ் செவியமுதாய் வாதித்தபிரான் தண்டை
வெறித்தனர் கமலவே வீடு"

பூக்கள் மலிந்த மணிநீர்ப் பொய்கைக்கரையில் இயற் பாவால் மொழிவதற்காக ஞானப்பால் உண்ட ஞானசம்பந்தர், அதனை அப்படியேவிழுங்கி விடாமல், தம் நாவினால் மீட்டும் திரளுமாறு செய்து. எளியோமாயிருக்கும் எமது செவியில் அமிழ்தமாக வார்த்தார்! அத்தகைய தலைவனுடைய, தண்டை அணிந்த தாமரை மலர் போன்ற நறுமணங்கமழும் தண்ணிய திருவடிகளே எமக்கு முத்தி!

'ஞானசம்பந்தப் பெருமானின் திருவடிகளே - முத்தி' என்று கூறுவதன் வாயிலாக, அவரையே தம்முடைய தலைவ-னாகக் கருதிவிட்டார் சிவப்பிரகாசர் என்பது புலனாகின்றது.

சிவஞானம் பெறுதற்கு மூலகாரணமாய் நின்றது ஞானப் பாலுண்ட நிகழ்ச்சியே! எனவே, நம் சிவப்பிரகாசரும் தாம் பாடுமிடமெல்லாம் இதனையே எண்ணிஎண்ணி உள்ளம் உருகு கின்றார்

''சீகாழியில், இலைபடர்ந்த பொய்கைக் கரையிடத்து அழுது நின்றார் ஞானசம்பந்தர்! அவ் அழுகுரலைச் செவி யாற் கேட்டுப் பின்பு அக்குழந்தையைக் கண்ணாரக் கண்ட பிறகே பால் சுரந்தாள் அன்னை உமையாள்! ஆனால், அவர், அங்ஙனம் பாலுக்காக அழுதார் என்ற நிகழ்ச்சியைத் தன் முன்னிலையில் நின்ற சிலர் சொல்லக் கேட்ட அவ்வளவிலே தாய்மை உணர்வு மேலீட்டால், பால் சுரந்தாள், வளவர்கோன் பாவையாம் மங்கையர்க்கரசியார்! அழுகுரல் கேட்டுக் கண்-ணாரக் கண்ட பிறகு, பால் சுரந்த உமையன்னை உயர்ந்த-வளா? நெடுந்தொலைவிலிருந்தபோதும், குழந்தையைக் கண்-ணாற்கூடக் காணாமல், குழந்தை அழுதது எனச் செவியாற் பட்ட மாத்திரத்திலே பால் சுரந்த மங்கையர்க்கரசி அன்னை உயர்ந்தவளா? இவ்விருவரில் உயர்ந்தவர் யார் என்பதை நீயே சொல்லு!'' எனச் சம்பந்தரையே இதில் சம்பந்தப்படுத்து-கிறார் சிவப்பிரகாசர்!

''இலைபடர்ந்த பொய்கை யிடத்தழுதல் கண்டு
முலைசுரந்த அன்னையோ முன்னின் நிலைவிளம்பக்
கொங்கை சுரந்தவரும் கோமகளோ சம்பந்தா
இங்குயர்ந்தார் ஆர்சொல் எனக்கு''

இக்கேள்வி, சிலப்பதிகாரத்தில், மலைவளங்காணச்சென்ற மன்னவனாம் சேரன் செங்குட்டுவன், தன் மாண்புமிகு மனையாளை நோக்கி, ''உயிருடன் சென்ற ஒருமகள் தன்னினும், செயிருடன் வந்தவச் சேயிழை தன்னினும், நன்னுதல்! வியக்கும் நலத்தோர் யார்?'' எனக் கேட்ட கேள்விக்கு மிகநயமாகக் கூறிய விடையை நினைப்பூட்டுகின்றதன்றோ?

சிவப்பிரகாசர் அருளிய நூல்களில் பிரபுலிங்கலீலையும் ஒன்று. அதில், பார்வதி தேவியின் முத்துமாலையைப் புகழ வரும் ஓரிடம்! ''அவள் மார்பிலே மணிவடம் தாழ்ந்து கிடந்தது. அதற்கு ஒரு சிறப்பு உண்டு. அவள் மார்பகத்திற் கிடந்து மருவுகின்ற சிறப்பே அது! ஆனால், அம் மார்பகங்கட்கும் ஒரு பெருமை உண்டு! அது என்ன தெரியுமா? இதோ கூறுகின்றார் :

''அரவு லாஞ்சடை அண்ணலைப் பிள்ளைதான்
பருவ மூன்றினிற் பாடஇன் பால்தரும்
பொருவில் கொங்கைப் புகழெனப் பொங்கொளி
மருவும் ஆர மணிவடம் தாழ்ந்துற''
(பி.லீலை.கைலாச.22)

பாம்பு உலாவுகின்ற பெருஞ்சடை கொண்ட சிவபிரானைச் சம்பந்தப்பிள்ளை தனது மூன்றாம் வயதில், வேதநெறி தழைத்தோங்கவும், மிகுசைவத்துறை விளங்கவும், பூதபரம்பரை பொலியவும், புனிதவாயால் பொன்னான செந்தமிழைப் பாடவுமாக இனிய பாலைக் கொடுத்தமையால், அம்மையின் மார்பில், பொருவில் அதாவது ஒப்புயர்வற்ற நகில்களாக ஆயின! என்று கூறும் சிவப்பிரகாசரின் கற்பனைத் திறத்தை எங்ஙனம் கழறுவது?

''தண்புகலிச் சம்பந்தா! திருக்கோயிலில் இறைவன் திருமுன்னர் நின்று புகழ்ச்சியொடு நீ பாடும்போது தந்தையினும், பால் கொடுத்த தாய்க்குத் தான் மகிழ்ச்சி மிகவுண்டு போலும்!'' என மற்றொரு பாடலில் இவர் கூறுவது ''ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்'' என வள்ளுவர் கூறிய வாய்மொழியை நினைவுபடுத்துவதுடன், உலகியலையும் சுட்டிக் காட்டுவதாக உள்ளது!

முடிவுரை

இங்ஙனம் திருஞானசம்பந்தரைத் தம் திருப்பாடலில் போற்றும் சிவப்பிரகாசர் இறுதியாக,

''வல்லார் பிறப்பறுப்பர் வண்மை நலங்கல்வி
நல் ஆதரவின் நாளங்கள்-எல்லாம்
திருஞான சம்பந்தன் சேவடியே என்றும்
உருவான சம்பந்தம் உற்று''

என ஞானசம்பந்தர் திருவடிகளே சிவஞானம்! அவைகளே பிறப்பறுக்கும் தன்மையன என்கின்றார்! இவ்வாறு கூறுவதன் வாயிலாக ஞானசம்பந்தப் பெருமானைத் தம் தெய்வமாகவே போற்றி வழிபடும் நிலையினைக் காணலாம்! ஆம்! திருஞான சம்பந்தர் சேவடியே - வீடு! அவ் வீட்டின்பத்தைப் பெற நாமும் சிவப்பிரகாசர் வழிநின்று, ஞானசம்பந்தர் சேவடிபற்றிச் சிவஞானம் பெறுவோமாக!

7

# கடல் கடந்தேறிய காவலர் (திருநாவுக்கரசர்)

பவளம்—கட்டளைக் கலித்துறை

தமிழ் இலக்கிய உலகில் நான்கு, நாற்பது, நானூறு, நாலாயிரம் முதலான எண்களுக்குத் தனிச்சிறப்புண்டு. அறம், பொருள், இன்பம், வீடு என நான்கு; கார் நாற்பது, களவழி என்ற நாற்பது; அகநானூறு, புறநானூறு என நானூறு; நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என நாலாயிரம். இங்ஙனம் எண்களாற் பெயர் பெற்ற நூல்களை நாமறிவோம். உலக வழக்கில் நாற்பதாயிரம் என்ற எண்ணுக்கும் சிறப்பு உண்டு, ''நலமோர் எட்டுணையும் கண்டிலேன் இதை நாற்பதாயிரம் கோயிலிற் சொல்லுவேன்'' என்ற பாரதி வாக்கு இதனை மெய்ப் பிக்கும். இம்முறையில் சிவப்பிரகாச அடிகளார் பாடிய 'நால்வர் நான்மணி மாலை'யில் பாடப்பட்ட அடியார் நால்வர் பாடப்பெற்ற பாக்களும் நாற்பது. 'நாலுபேர் போன வழியே நாமும் போவோம்'என்பது, நம்நாட்டில் வழங்கிவரும் பழமொழி. பக்தி வெள்ளம் கரைபுரண்டோடிய காலம் — நாயன்மார்கள், குறிப்பாகச் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நால்வர் தோன்றிய நற்காலம் எனலாம். இந்நால்வர் காட்டிய நன்னெறியை — சிவநெறியைப் பின்பற்றவேண்டும் என்ற கருத்தினை உட்கொண்டே 'நாலுபேர் போனவழியே நாமும் போவோம்' என்ற பழமொழியை மொழிந்திருக்கக் கூடும் எனக் கருதலாம். இத்தகு ஏற்றம் பெற்ற நால்வர் மீது பாடப்பட்ட இந்நால்வர் நான்மணிமாலையில், இரண்டாவதாக நிற்பது 'பவளம்' என்னும் மணியாம். செம்மைக்குக் காட்டாக நிற்பது பவளம்; கடலுளே பிறப்பினும் அக்கடலின் தன்மையை ஏற்காதிருப்பது பவளம்; செம்மைப் பொருளாய் விளங்கும் சிவபரம்பொருளைச், செம்மைசேர் நெறியில் நின்று அருள் பெற்றவர் நாவுக்கரசர்; கடலிலே போட்டபோதும் அக்கடலின்-வாய்ப் படாமல் கரையேறிய காவலர் நாவுக்கரசர். இத்தகு நாவலர் பெருமானுக்குப் பவளமணிமாலை சூட்டிப் பரவு கின்றார் பாவலர் பெருமானாகிய சிவப்பிரகாசர். எழுத்தெண்ணி யாக்கப்படும் இலக்கண நெறிமுறையும், துள்ளல் ஓசையும் உடையது கட்டளைக் கலித்துறையாகும்; அருஞ்கலை நூல்

அளவெல்லாம் பொங்கும் உணர்வுறப் புலன்சிறக்க எழுத்தெண்ணிப் படித்த வித்தகர் — எத்துணை இடையூறுகள் வரினும் 'நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்' எனத் துள்ளலுடன் எடுத்துப் பேசும் ஆற்றல்மிக்க வாக்கின்மன்னவராம் திருநாவுக்கரசரைக் 'கட்டளைக்' கலித்துறையில் பாடிய சிவப்பிரகாசரின் நுண்மாண் நுழைபுலம் எண்ணி இன்புறத்தக்கது.

கடல் கடந்தேறிய காவலர்

திருத்தகுசீர் அதிகை அருள் தலத்தின் ஓங்கும் சிவக்கொழுந்தின் அருட்பெருமைத் திறத்தால் வாய்மை உருத்தகு மெய் உணர்ச்சி வடிவாகிச் சைவ ஒளி விளங்கப் பொருத்தமுற உழவாரப் படை கைக்கொண்ட புண்ணியன் நண்ணிய சீர்ப் புனிதன் — கருத்தமர்ந்த கலைமதி—கருணை ஞானக் கடல். அலகில் கலைத்துறை தழைப்ப, அருந்தவத்தோர் நெறிவாழ, உலகில் வரும் இருள்நீக்கி ஒளி விளங்குகதிர் போற் பின்மலரும் மருள்நீக்கியாராம் திருநாவுக்கரசர் இவ்வுலகில் திருவவதாரஞ் செய்தார். இத்தகு அரசர்தம் வாழ்வில் அமைந்த அரிய நிகழ்ச்சிதனைச் சொல்லோவியமாகத் தீட்டி நம் மனக் கண்முன் காட்டுகின்றார் சொல்லின் செல்வராகிய சிவப்பிரகாசர்.

நல்லாறு தெரிந்துரை நம்பர் அருளாமையினால் கொல்லாமை மறைந்துறையும் அமண்சமயம் குறுகினார் நாவரசர். 'தருமசேனர்' என்னும் பெயர் பூண்டு தலைமையினில் மேம்பட்டார். கண்தரு நெற்றியராம் கருணை வள்ளல், கடுங்கனல் போல் அடுங்கொடிய மண்டு பெருஞ் சூலைநோயினைக் கொடுத்தான்; மாளாத் துயருற்ற மருள்நீக்கியார், தமக்கெனவே வாழ்ந்து வரும் தையலாராம் திலகவதியார் திருவடி மேலுற வணங்கினார். திருவாளன் திருநீறு திலகவதியார் அளித்தார்; தம்பிரான் திருவருளால் உரைத்தமிழ் மாலைகள் சாற்றும் உணர்வு பெற்றுக் 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' எனக் கோதில் திருப்பதிகம் பாடினார். அந்நிலையில் வயிற்றடு சூலை மறப்பிணி தானும் அகன்றது. "பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடை பாடிய பான்மையினால்,

நாவுக்கரசு என்று உலகு ஏழினும் நின் நன்னாமம் நயப்புற மன்னுக'' என்னுமோர் அசரீரி எழுந்தது, இங்ஙனம், இவர், தமக்குரிய சிவநெறியினை எய்தியமை கண்ட சமணர்கள், அழுக்காறு கொண்டு, பல்லவ மன்னன்பால் பலவாறு சொல்லிப் புலம்பினர். தேரா மன்னனும், திருத்தாண்டக வேந்தர்க்குத் தீங்குபல புரிய ஆணைகள் இட்டான்; புல்லறிவோர் அஞ்சாது அவரை நீற்றறையில் இட்டனர்; பாலடிசிலில் பாழான நஞ்சு கலந்து உண்ணப் பணித்தனர்; கூற்றெனப் பாயும் கடக் களிற்றை ஏவினர்; இத்தகு எண்ணிலாக் கொடுமைகளை மதியிலா மன்னவன் இழைத்த போதும், தண்டமிழ் மாலைகள் பாடித் தம் பெருமான் சரணாகக் கொண்ட கருத்திலே திளைத்தார் தாண்டக வேந்தர். ஆயினும் அமணரும் மன்னனும் அமைதி பெற்றாரிலர் ''பாங்கொடு கல்லில் அணைத்துப் பாசம் பிணித்து ஓர் படகில் வீங்கொலி வேலையில் எற்றி வீழ்த்துமின்'' என விடுத்தான் வேந்தன். 'சொற்றுணை வேதியன்' என்னும் தூய்மொழி நற்றமிழ் மாலையாம் 'நமச்சிவாய' என்று அற்றமுன் காக்கும் அஞ்செழுத்தை அன்பொடு பற்றிய உணர்வாற் பதிகம் பாடினார் ஆளுடைய அரசர். கருநெடுங்கடலினுட் கல் மிதந்தது.

இவ்வரிய நிகழ்ச்சியைச் சிவப்பிரகாசர், நினைந்து நினைந்து நெஞ்சம் உருகுகின்றார் :

''அருகக் கடல்கடந் தேறிய தோசிலை யம்பியெனப்
பெருகக் கடல்கடந் தேறிய தோசொல் பெருமிடறு
கருகக் கடல்விடம் உண்டோன் அடியிற் கசிந்துமனம்
உருகக் கடலன்பு பெற்றசொல் வேந்த உனக்கரிதே''
(22)

பெருமை பொருந்திய கழுத்தும் கருமையை ஏற்குமாறு கடல்விடம் உண்ட சிவபெருமானின் திருவடிகளை நினைந்து நினைந்து நெகிழ்வு பெற்றுப் பின்பு கரைந்து உருகுமாறு செய்யவல்ல அன்பைக் கடலளவு பெற்ற நாவரசே! இரண்டு கடல்களைக் கடந்த பெருமை உனக்குண்டு! ஒன்று, சமணக் கடலைக் கடந்து, சைவக் கரை ஏறியது; மற்றொன்று, சமணர்களால் உவர்க்கடலில் தள்ளப்பட்டுப் பின்னர்க் கரை

ஏறியது. இவ்விரு கடல்களையும் நீ கடந்து வெற்றி கண்டனையே! இவ்விரண்டிலும் உனக்குக் கடத்தற் கரியதாயிருந்தது எது? எனக்குச் சொல்வாயாக!'' என நாவரசரைப் பார்த்துக் கேட்கிறார் நம் சிவப்பிரகாசர். கடல்விடம் உண்ட கண்டனின் திருவடிப் புணையைப் பற்றினார் நாவரசர். பிறவிப் பெருங்கடலையே நீந்தச் செய்யும் பேரருளாளன் துணையிருக்கையில், இந்த இரு கடல்கள்என்ன எத்துணைக் கடல்களையும் கடக்கவல்ல ஆற்றல் வந்துவிடு மன்றோ என்று குறிப்பினாற் சுட்டும் பொருளும் இப்பாடலில் அமைந்து, படிக்கும் நமக்குப் பெருமையூட்டுகின்றது.

''சைவத்தின்மேற் சமயம் வேறில்லை'' என்பர் சைவச் சான்றோர், ஆனால், இச் சைவத்தின் பெருமைதனைச் சைவ சமயத்தாரே சொல்லுவதாற் பயனில்லை. அதனை உலகமும் ஏற்காது. ''நிழலருமை வெயிலிலே! ஈசன் கழலருமை வெவ் வினையிற் காண்மின்'' என்ற வாக்கு ஈண்டு உன்னத்தக்கது. செல்வச் செழிப்பிலேயே உழன்று கொண்டிருப்போர்க்கு அச் செல்வத்தின் சிறப்புத் தோன்றாது. வறுமையில் வாடி, அதன் கொடுமையை உணர்ந்தவர்க்குச் செல்வம் கிடைத்தால் அப் போது தெரியும் அச்செல்வத்தின் மாட்சி! அதுபோலவே, பிற சமயமாகிய சமணத்திற் சிக்கித் தவித்த நாவரசருக்குத்தான் சைவத்தின் மேன்மை புலனாகும் என்கின்றார் சிவப்பிரகாசர்.

''ஊர்ந்து வரும்இனை வேறுடை யான்தன் உளத்தருளாற்
சார்ந்து சமண்விட் டுறும்உனக் கேவரும் சைவநலம்
சூர்ந்து மிளிர்தரு நாவர சேநல் குரவுமுனஞ்
சேர்ந்து மருவினர்க் கேசிறந் தோங்குறுஞ்
செல்வமுமே'' (34)

என்பது இவர் திருவாக்கு!

பாட்டிற்கு ஒப்பீர்!

திருநாவுக்கரசு செய்த அருஞ்செயல்கள் பலவாகும் முன்றில் தோறுஞ் சிறுமடமார் முத்தங் கொழிக்கும் மறைக் காட்டில், சண்பை ஆளுந் தமிழ்விரகராம் சம்பந்தருடன், தொல்லை வேதம் திருக்காப்புச் செய்த திருவாயிற் கதவு திறக்கத் திருப்பதிகம் பாடியருளியமையும், அந்தணரின்மேம்பட்ட அப்பூதி அடிகளாரின் அருந்தனயனைத் தழல்நாகம் தீங்கிழைக்கத்

தீயவிடம் தலைக்கொண்டபோது 'ஒன்றுகொலாம்' என்னும் உயர்தமிழ்ப் பதிகம் பாடி உயிர்ப்பித்தமையும் ஆகிய சிலவற்றை வியந்து போற்றுகின்றார் சிவப்பிரகாசர்.

நாவரசரும் ஞானசம்பந்தரும் திருவீழிமிழலையில் இருந்த போது மாரி சுருங்கி வளம் பொன்னி நதியும் பருவம் மாறியது; படர்கூர் வறுமை பரந்தது. அக்காலை, திருவீழிமிழலைநாதன் இருவர் கனவிலும் தோன்றிக் "கால நிலைமையால் உங்கள் கருத்தில் வாட்டமுறீர் எனினும், ஏல உம்மை வழிபடுவோர்க்கு அளிக்க அளிக்கின்றோம்" எனக்கூறி, ஞாலம் அறியப் படிக் காசு வைத்தருளினான். அக்காசுகளைப் பெற்ற புகலி ஆண்டகையும், ஆண்ட அரசும் 'எல்லாம் எய்தி உண்க' எனச் சோறிட்டு வறுமை தொலைத்திட்டனர்.

இவ்வினிய வரலாற்றை உட்கொண்டு சிவப்பிரகாசர் பாடும் திறத்தைப் பார்ப்போம்:

"கொள்ளைக் கதிர்முத்தின் பந்தரும் சின்னமும் கொள்ளு மொரு
பிள்ளைக் கதுதகும் நாவர சாய பெருந்தகையோய்
கள்ளைக் குவளை யுமிழ்வீ ழியிற்படிக் காசென்றுநீ
வள்ளக் குழையுமை பங்காளர் கையிலென் வாங்கினை யே" (10)

நாவரசாகிய பெருந்தகையுடையவனே! உன்னை ஒன்று கேட்பன். ஒரு தந்தைக்குப் பிள்ளைகள் பல என்றாலும், கொஞ்ச வயதுடைய சின்னஞ்சிறு பிள்ளை, தன் தந்தையிடம் காசு கேட்பது, உலகியலில் அனைவரும் அறிந்த வொன்று. சின்னக்குழந்தையாகிய ஞானசம்பந்தன், தன் தாயிடம் ஞானப் பால் உண்டு, தன் தந்தையிடம் முத்துப்பந்தரும் முத்துச் சின்னமும் பெற்றுப் படிக்காசும் பெற்றது ஏற்புடைத்தே! நீயோ, வயது முதிர்ந்து பிறர்க்குக் கொடுக்கும் பெற்றியுடை-யை! அங்ஙனமிருந்தும் மிழலைநாதனிடம் காசு ஏன் பெற்-றனை? அன்றியும் அவனோ ஆண்டி; நீயோ அரசு! ஓர் அரசன் ஆண்டியிடம் காசு பெற்ற வரலாறு எங்கேனும் உண்டா? அக் காசினையும் கைநீட்டிப் பெற்றனையே! மேலும் நீ, மணமா-

காத தூய துறவி. அவனோ, தன் உடம்பின் ஒரு பாதியைப் பெண்ணுக்குக் கொடுத்த இல்லறத்தான். அவனிடம் சென்று வாங்கினையே! இது ஏன்? - என்ற கருத்துக்கள் எல்லாம் அமையும்படி, ''நாவரசாய பெருந் தகையோய்! உமைபங்கன் கையில் என் வாங்கினையே'' என்று கேட்பது அறிவினுக்கு விருந்தாய் அமைகிறதன்றோ?

''ஆனால் அந்த உமைபங்கனோ, சம்பந்தனுக்கு ஞான அமுது உதவினன்; உனக்கோ நாட்டிலே எங்குமே காணப் படாத குடர் நோயினை நல்கினனே! இறைவன் எது செய்யினும் செய்க; ஏனெனில் அவன் ஆட்டிற்கு வல்லவன்; அவன் ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே? எனவே அவன் யாருக்கு எது நல்கினும், என் பாட்டிற்கு நீயும் அந்த ஞானசம்பந்தனும் எப்படியும் ஒப்பீர்!'' என மேலும் கூறுகிறார் பிரகாசர்:

''வீட்டிற்கு வாயில் எனுந்தொடை சாத்துசொல் வேந்த பொது
ஆட்டிற்கு வல்லன் ஒருவற்கு ஞான வமுதுதவி
நாட்டிற் கிலாத குடர்நோய் நினக்குமுன் நல்கினும்என்
பாட்டிற்குநீயும் அவனும்ஒப் பீர்எப் படியினுமே'' (2)

இப்பாடலில் நாவரசர் பாடிய தேவாரப் பதிகமானது, முத்தியை அடைவதற்கு உரிய வாயில் என்று போற்றுகின்றார் சிவப்பிரகாசர்.

துன்பில் பதம்

இங்ஙனம் நாவசர் பெருமையை நாவாரத் துதிக்கும் சிவப்பிரகாசர், 'நாவரசர்' என்ற ஓர் சொல்லே முத்தியை அளிக்கும் பெற்றியது என்பதை வரலாற்றுச் சான்று கொண்டு மெய்ப்பிக்கின்றார்.

சீதநீர் வயல்சூழ் திங்களூரில், களவுபொய் காமம் கோபம் முதலிய குற்றம் காய்ந்தவராய், வளமிகு மனையின் வாழ்க்கை நிலையினராய், மனைப்பரல் உற்ற அளவைகள் நிறைகோல்

மக்கள் ஆவொடு மேதி மற்றும் உளவெலாம் அரசின் நாமம் சாற்றும் ஒழுக்க நீர்மையராய் இலங்கியவர், அந்தணர் குலத்துதித்த அப்பூதி அடிகள். இத்தகு நல்லார், நம் நாவரசரைக் கண்ணினாற் காணாராயிருந்தும், அவர்தம் அடித்தொண்டும் தம்பிரானார் அருளும் கேட்ட அளவிலேயே, தம் தனயருடன் சாலை கூவல் குளம் தரு தண்ணீர்ப்பந்தல்பலவற்றிற்குநாவரசர் எனும் நற்பெயரே சூட்டி முடிவிலா அறங்கள் செய்தவர். தவ மேனும் புரியாமல், தழல் ஏதும் வளர்க்காமல், 'திருநாவுக்கரசு' எனும் ஓர் திருப்பெயரைச் சொல்லிய அவ்வளவிலேயே, துன்பில் பதமாம் முத்திநிலை பெற்றார் எனில், நாவரசர் பெருமையை இவ்வொரு நாவால் ஏத்தல் இயலுமோ?

''உற்றான் அலன்தவம் தீய்ம்நின் றான்அலன் ஊன்புளலா
அற்றான் அலன்நுகர் வும்திரு நாவுக் கரசெனுமோர்
சொற்றான் எழுதியும் கூறியு மேஎன்றும் துன்பில்பதம்
பெற்றான் ஒருநம்பி அப்பூதி என்னும் பெருந்
தகையே'' (38)

என நாவரசர் திருப்பெயரின் மேன்மைதனை உருக்கமாக உரைக்கின்றார் சிவப்பிரகாசர்.

மறைபுகழும் பிறைசூடியைத் தொண்டினால் மட்டு மன்றிப் பாட்டாலும் பாடி மகிழ்ச்சியூட்டுவர் நாவரசர். இவரது தொண்டிலும் தமிழ்ப் பாவிலும் நெஞ்சத்தைப் பறிகொடுத்த ஒருவன், இவரைப் போலவே தானும் விளங்கி, இவருக்கு மகிழ்ச்சியூட்டவேண்டும் என எண்ணுவான். அவ்வெண்ணத்தின் விளைவால், இவரைப் போலவே கல்லைக் கட்டிக் கடலில் விழுந்து மிதப்பேன் என்று சொல்லிப் போவானே. அவன் அன்பு இருந்தவாறு என்னே! அத்தகையோன் ஒருபுறமிருக்க, அப்பூதியும், நம்பியாரூரரும் நின்பாற் கொண்ட பேரன்பினால் ஏத்திப் புகழ்கின்றனரே! ''வெள்ளேறுடையான் தனக்கு அன்பு செய் திருத்தாண்டக வேந்த! நின்பொருட்டு எனக்குமட்டும் அன்பு எய்தாது என்கொல்?'' எனக்கேட்டுத் தன்னையே நொந்து கொள்கின்றார் சிவப்பிரகாசர்.

முடிவுரை

''திரைகடல் நீந்திய பாவல! இவ்வுலகில், பிள்ளையைப் பெற்றவர்கள் என்ற பெரும்புகழைப் பெறவேண்டினால், உன்னைப் பெற்ற தாய் தந்தையராகிய புகழனார்-மாதினியார் இவர்களைப் போல விளங்கவேண்டும். இவ்வுலகில் பிறப்பு என்பது உண்டாயின் உன்னைப் போலவே பிறக்கவேண்டும்'' என்று வேண்டுகின்றார் சிவப்பிரகாசர்:

''பெற்றால் நினைப்பெற் றவர்போற் பெறலும்
பிறப்பதுண்டேல்
நற்றா ரணியில் நினைப்போற் பிறப்பதும்
நல்லகண்டாய்
செற்றார் புரம்எரி செய்தலில் வீரன் திருப்பெயரே
பற்றா மறிவெண் டிரைக்கடல் நீந்திய
பாவலனே'' (30)

''ஆம்! பூவுலகிற் பிறந்தால் நாவரசரைப் போலப் பிறந்து நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் அமரவேண்டும்''. அதுவே இம் மனிதப்பிறவி எடுத்ததன் மாண்புறு பயனாகும்.

''தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று''

# 8

# மலை அடைந்த மாமணி (சுந்தரமூர்த்தி நாயனார்)

தமிழ்ச் சொன் மலர்

கி. பி 17ஆம் நூற்றாண்டில், காஞ்சியம்பதியில் வாழ்ந்த குமாரசாமி தேசிகருக்கு அருமந்த மகவாய்த் தோன்றிய அருட் சிவப்பிரகாச அடிகளார், 'அல்லிமலர்ப் பண்ணவனும் ஆராய்ந்து, அறிகவிதை சொல்ல' வல்லவர். ''புனை எழில் வடிவினாள், ஓர்பொதுமகள் கண்ட மைந்தர் மனமெனப் புலவர் நெஞ்சம் மருளும் இன்றமிழ்ப் பாமாலை, சின விடையவற்கே சாத்தும்'' சீர்மையர். இவர் இயற்றிய 'சோண சைலமாலை' என்ற நூலில், கைலை நாயகனிடம் கனிந்து ஓர்வரம் வேண்டு-வதாக ஒருபாடல்! ''சோண சைலனே! நின்பால் 'பிறவாமை வேண்டும்' என்ற வரத்தை, வேண்டிப் பெறுவார் பெறட்டும். யான் அங்ஙனமாகிய வரத்தை விரும்பேன். யான் விரும்பும் வரம் ஒன்றுண்டு. எனக்கு இம்மனித்தப் பிறவியே வேண்டும். அப்பிறவியும், மதுரமான தமிழ்ச் சொல்லாலாகிய மலர் மாலையை நினக்கு அணிந்து மகிழும் பேறு பெற்றதாக இருத்தல் வேண்டும்'' என்கின்றார் அடிகளார்.

''வரைவிடை யிவரு தினைப்பிற வாமை வேண்டுநர்
வேண்டுக மதுரம்
பெருகுறு தமிழ்ச்சொன் மலர்நினக் கணியும் பிறவியே
வேண்டுவன் தமியேன்''

என்று இவர் வேண்டுதலால் நமக்கு இன்பந்தரும்படி வாய்த்த நல் அமுதமாக இலங்கும் இன்றமிழ்மாலையை இறைவனுக்குச் சூட்ட வேண்டும் என்ற இவரது வேட்கையினை உணர முடிகின்றது. நாயகனின் நல்லடியராம் நால்வர்மீது மணி மாலை சூட்டுவதும், நாயகனுக்குச் சூட்டுவது போன்றதே எனக் கொண்டுதான் 'நால்வர் நான்மணிமாலை' யை நம் பிரகாசனார் தொடுத்தார் எனலாம்.

மரகதம் ஆசிரிய விருத்தம்

இம்மாலையில் மூன்றாவது வரிசையில் வருவது 'மரகதம்' என்ற மணியாம். மலைபடுபொருளாய் இலங்குவது மரகதம்; மலையுளே பிறப்பினும் மலைக்கதனால் யாது நன்மை? ஆயிழையார் கழுத்தில் அழகுறு மாலையாய்க் காட்சியளிக்கும் போதுதானே அது மாட்சியுறுகிறது? தன்னை யாக்கும்அறிவரி-யான், என்றும் மன்னிவாழ் கயிலைத் திருமாமலையில், வள்ளல் சாத்தும் மதுமலர் மாலையும், அள்ளும் நீறும் எடுத்தணைவானாம் ஆலாலசுந்தரன். மாதர்மேல் மனம் வைத்தமையால், அக்கயிலை மலையினின்றும் இத்தென்புவிமீது தோன்றியவரே நம்பியாரூ ரராம் சுந்தரர். அவர், அம்மாமலையில் இருக்கும்வரை அவாது மாண்பினை நாம் உணரவில்லை. தீதகன்று, உலகம் உய்ய இத்திருநாட்டில் திருவவதாரஞ் செய்தபிறகே சுந்தரரின் அந்த மிலாச்சிறப்பும், தில்லைவாழ் அந்தணர் முதலான திருத்-தொண்டர் பெருமையும் உணரமுடிந்தது. இத்தகு அந்தமில்புகழ் ஆலாலசுந்தரருக்கு, மரகதமணிமாலை சூட்டி மனம் மகிழ்கின்றார் சிவப்பிரகாசர். தனக்குரிய தளையன்றிப் பிறதளையும் மயங்கி வருதலும் இயல்புடையதாயினும், கழிநெடிலடி நான்காய்த் தம்முள் அளவொத்து வரும் தன்மையுடையது 'ஆசிரிய விருத் தம்' ஆகும். 'விருத்தம்' என்ற சொல்லுக்கு முரண், இடையூறு என்ற பொருள்களும் உண்டு. வேதியர் குலத்துள் தோன்றிய ஆதிசைவ மரபினராயினும், அயல்மரபாம் உருத்திர கணிகையர் குலத்துதித்த மங்கையினையும், வேளாண்குலத்துத் தோன்றிய நங்கையினையும் காதல் மனைவியராய்க் கொண்ட காளைய ராக, மங்கலம் பொலியச் செய்யும் மணவினை தொடங்கி வாழ்வினிடையே இடையூறுபல ஏற்ற ஏந்தலராக இலங்கு வராயினும், 'சொல்லார் தமிழ்இசை பாடும் தொண்டன்' என்ற நிலையிலிருந்து சிறிதும் பிறழாத செல்வராய்ச் சிறப்புற் றோங்கிய சுந்தரரை 'ஆசிரிய விருத்தப்பா'வால் போற்றும் நூலாசிரியராம் சிவப்பிரகாசர் திறம் போற்றத்தக்கது.

அமுதத் திருப்பாட்டு

தென்றிசை வாழ்ந்திடச் சுந்தரத் திருத்தொண்டத் தொகைத் தமிழ் வந்து பாடிய வாய்மையர்; 'மண்மேல் நம்-மைச் சொற்றமிழ் பாடுக' என மங்கைமணாளனாற் பணிக்கப்

பட்ட வன்றொண்டர்; 'நம்பியாரூரர்' என நல்நாமம் பெற்ற வர்; மாதொருபாகனார்க்கு வழிவழி அடிமை செய்யும் வேதியர் குலத்தில் தோன்றி மேம்படு சடையனார்க்கு ஏதமில் கற்பின் மிக்க மனையிசை ஞானியார்பால் தீதகன்ற உலகமுய்யத் திருவவதாரஞ் செய்தவர்·ஆம்! அவரே 'சுந்தரர்' என்னும் அருமைத் திருப்பெயர் பூண்ட ஆரூரர். இவர் அருளிய தேவாரம் தித்திக்கும் தன்மையது என்பதைத்,

> ''தேன்படிக்கும் அமுதாம்உன் திருப்பாட்டைத் தினந் தோறும்
> நான்படிக்கும் போதென்னை நானறியேன் நாஔன்றோ
> ஊன்படிக்கும் உளம்படிக்கும் உயிர்படிக்கும் உயிர்க்கு யிரும்
> தான்படிக்கும் அனுபவங்காண் தனிக்கருணைப் பெருந் தகையே''

என வள்ளல் இராமலிங்கர் பாட்டால் தெரியலாம்.

பாட்டில் விருப்பன் பரமன்

இத்தகைய சுந்தரரைச் செந்தமிழ்ப் பாவால் இசைத்துச் சிறப்பிக்கிறார் சிவப்பிரகாசர்.

புண்ணியம் திரண்டுள்ளதுபோற் பொலிவுறுவது அண்ண லார் வீற்றிருக்கும் திருக்கயிலாயமலை. ஆங்குக் கொலுவீற்-றிருக்கும் ஆதிபகவனுக்கு நாள்மலர் கொய்ய நந்தவனஞ் சென்ற ஆலாலசுந்தரன் என்பார், திங்கள் வாள்முகச் சேடிய ராம் அனிந்திதை, கமலினி என்னும் இரு மகளிரைக் கண்டு காதல் கூர்ந்தார். அஃது அறிந்த ஆதிமூர்த்தி, ''மாதர்மேல் மனம் வைத்தனை. தென்புவிமீது தோன்றி அம்மெல்லிய லாருடன் காதல் இன்பம் கலந்து அணைவாம்'' என்றான். அதனைக் கேட்ட ஆலாலசுந்தரரோ, கண் கலங்கக் கைகள் அஞ்சலி கூப்ப 'ஐயனே! தடுத்தாண்டருள் செய்' என வேண்டி னார். அங்கணாளனும் அதற்கு அருள் செய்தனன். ஆலால சுந்தரரும், திருமுனைப்பாடி நாட்டுத் திருநாவலூரில் ஆதி சைவ மரபில் திருவவதாரஞ் செய்தார். காளைப் பருவம் எய்தியபோது கடிமணம் செய்யப் பெற்றோர் எண்ணினர்;

திருமண நாளும் வந்தது. ஆலுமறை சூழ் கயிலையின்கண் அருள்செய்த சாலுமொழியில்வழி தடுத்தடிமைகொள்ள எண்ணிய தம்பிரான் செந்தண்மை பூண்ட அந்தண வடிவங் கொண்டு, மன்றலிடைத் தோன்றி, "இந்நாவல் நகர் ஊரன், என் அடியான்; எனக்குப் பணிசெய்ய வேண்டும்" என்றான். இருவர் வழக்கும் வெண்ணெய் நல்லூரை நண்ணியது. 'நான்மறை முனிவர்க்கு நம்பியாரூரர் தோற்றீர்! பான்மையின் ஏவல் செய்தல் கடன்' எனப் பண்பில்மிக்க மேன்மையோர் விளம்பினர். அப்போது, மாதோடு உம்பரின் விடைமேல் தோன்றிய நம் பெருமான் "நண்புல மறையோர் முன்னம் நாம் தடுத்தாண்டோம். வன்மை பேசி வன்றொண்டன் ஆயினை! அர்ச்சனை பாட்டேயாகும். ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" என்றான் அதுகேட்ட ஆரூரர், "சோதிலா அமுதே! குணப்பெருங்கடலே! நாயேன் யாதினை அறிந்து என்சொல்லிப் பாடுகேன்" என மொழிந்தார். அதற்குப் பெம்மான், "முன்பு எனைப் பித்தன் என்றே மொழிந்தாய். ஆதலால் என்பெயர் பித்தன் என்றே பாடுவாய்" என்றான். உடனே நாவலர் பெருமான் 'பித்தா பிறைசூடி' என்ற பெரிதாந் திருப்பதிகம் இத்தாரணி முதலாம் உலகெலாம் உய்யப் பாடினார். - இது சுந்தரர் வாழ்வில் முதன்முதலாக நிகழ்ந்த அரிய நிகழ்ச்சியாகும்.

திருக்கயிலை மலையில் உமையன்னைக்குத் தொண்டு செய்த கமலினி என்பாள், அலகில்சீர்த் திருவாரூரில் கதிர்மணி பிறந்ததென்ன உருத்திர கணிகைமாராம் பதியிலார் குலத்துள் தோன்றிப் 'பரவையார்' என்னும் பெயர் கொண்டு விளங்கினாள். புற்றிடம் விரும்பினாரைப் போற்றியே தொழுதுசெல்லும் சுந்தரர், பண்டைவிதி கடைக்கூட்டப் பரவையாரைக் கண்டு வேட்கை கொண்டார். இருவருக்கும் திருமணம் நிகழ்ந்தது.

அந்தணர் கயிலைமலை நீங்கி அருளாற் போந்த அனிந்திதையார் என்னும் மற்றொரு மங்கை, சான்றோர் போற்றும் தொண்டை நாட்டில், ஞாயிறு என்னும் ஊரில், மேலாங் கொள்கை வேளாண்மை மிக்க திருஞாயிறு கிழவர் என்பார்தம் அருமை மகளாய்த் தோன்றிச் 'சங்கிலியார்' என்னும் பெயர் பூண்டு பிறங்கினாள். மணவாழ்க்கையே வேண்டாம்

என வெறுத்திருந்த சங்கிலியார். திருவொற்றியூரில் கன்னி-மாடம் அமைத்துக் கண்ணுதற் பெருமானுக்கு அடித்தொண்டு ஆற்றிவரலானாள், திருவொற்றியூருக்கு வந்த திருநாவலூரார், முந்தை விதியால் சங்கிலியாரைக் கண்ணுற்றார். அவளை அடையத் துணிந்தார் "கங்கைதன்னைக் கரந்தருளும காதல் உடையீர்! திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென் வருத்தம் தீரும்" என ஒற்றியூர் நாதனை வேண்டினார். வேண்டுவார் வேண்டுவன ஈவானல்லனோ ஈசன்? 'பண்டுநிகழ் பான்மையி-னாற் பசுபதிதன் அருளாலே வண்டமர் பூங்குழலாரை மணம் புணர்ந்தார்" வன்றொண்டர்!

சங்கிலியாரை மணந்த செய்தி, திருவாரூர்ப் பரவை-யாருக்குத் தெரிந்தது; தம்மை அறியா வெகுளியினால் தரியா நெஞ்சினொடும் தளர்ந்தார். "மென்பூஞ் சயனத்திடைத் துயிலும் மேவார், விழித்தும் இனிதமரார், மறவார், நினையார், புல வியோ பிரிவோ இரண்டின் இடைப்பட்டு உருகினார். இந் நிலையில் திருவாரூர்ப் பெருமானையும் பரவையாரையும் காண விழைந்த சுந்தரர் திருவாரூர் திரும்பினார். கற்ற மாந்தர் சிலர் தம்மைக் காதற் பரவையார்பால் தூதனுப்பினார் சுந்தரர். பரவையாரோ செற்றம் மாற்றாராய், 'இங்ஙனம் தூதுவந்தால் இன்னுயிர் போதல் ஒழியாது' என உரைத்துவிட்டார். என்செய் வார் சுந்தரர்? முன்னை வினையை முன்னினார்; 'அடியார்இடுக் கண்டதரியாதார்ஆண்டுகொண்ட தோழரே! துணைஎனக் கொ-ண்டுஎம்பிரான் கோயில் சென்றார்; பேயும் உறங்கும் பிறங்குஇரு ளில் ஒருதோழர் தனிவருந்திச்சிந்தித்தார். "என்னைஉடையாய்! அன்னம் அனையான் புலவியினை அகற்றில்உய்யலாம்; அன்றிப் பிள்ளை இல்லைச் செயல்" என்று பெருமான் அடிகள்தமை நினைந்தார். அப்போது நெடியோனும் காணா அடிகள் படி தோயத் தம்பிரான் நடந்து வந்து சுந்தரர்முன் தோன்றினான். நம்பியாரூரரும் நளினமலர்க் கை தலைக்குவிய, அவன் அடித் தாமரையின் கீழ்வீழ்ந்தார். 'தாயின் நல்ல தோழரே! இவ் விரவே பரவையுறு புலவிதீர்த்துத் தாரும்' என்றார். நம்பி முகம் நோக்கிய நங்கை நாயகன், 'துன்பம் ஒழிநீ, யாம் உனக்கோர் தூதனாகி இப்பொழுதே பொன்செய் மணிப்பூண் பரவைபால் போகின்றோம்' என்றருள் செய்தார். அங்ஙனமே

இறைவன், பரவைபால் இருமுறை தூது நடந்தான். ஆண்டவனே தூதாக வந்த அருட்டிறம் வாய்ந்த பரவையார், தம் வெகுளி-யைத் தணித்துத் துணிவளார் கண்ணீர் வாரத் தொழுது, "ஒளிவளர் செய்ய பாதம் வருந்த ஓர் இரவு மாறாது அளி வரும் அன்பர்க்காக அங்கொடு இங்கு உழல்வீராகி எளிவருவீரு மானால் என்செய்கேன் இசையாது" என விண்ணப்பம் செய்தார். இருவர் ஊடலும் தீர்ந்தது. — சுந்தரர் வாழ்வில் நிகழ்ந்த அற்புதச் செயல்களில் இதுவுமொன்று!

இறைவன் உறையும் பதிதோறுஞ் சென்று, பரமன் புகழைப் பண்ணார்ந்த தமிழாற் பாடிப் பரவும் சுந்தரர், திருக் கச்சூர்தனை நண்ணி ஆலக்கோயிலின் அமுதினை அன்புருகக் கும்பிட்டார். அப்போது அமுதுண்ணும் நண்பகற்போது! ஆயினும், அமுது சமைத்துப் படைக்கும் பரிசனம் ஆங்கு வந்து சேரவில்லை. தம்பிரான்தோழர், தணிந்த பசி வருத்தத்தால், புணர்ந்தமதிற் புறத்திருத்தார். வன்றொண்டர் பசியால் வாடு வதை வள்ளற் பிரான் பார்த்திருப்பாரோ? அங்கு வாழும் ஓர் அந்தணராகப் புறப்பட்டார்; சென்றன்பர் முகநோக்கி அருள் கூரச் செப்புவார்; "மெய்ப்பசியால் மிக வருந்தி இளைத்தீர்; இப்போதே சோறு இரந்து யான் உமக்குக் கொள்வன்" எனச் செப்பித் திருக்கச்சூர் மனைதொறும் சென்று இரந்தார். அங்ஙனம் இரந்து பெற்ற இன்னடிசிலும் கறியும் 'பசிதீர அருந்துவீர்' என அளித்தார். அதனை உண்ட வன்றொண்டர் உவந்திருப்ப மறையவரோ மறைந்தருளினார். உண்மை யுணர்ந்த வன்றொடர் உள்ளம் உருகினார்.

இங்ஙனம் சுந்தரர்பொட்டு இறைவன் நிகழ்த்திய அருஞ் செயல்களுக்குக் காரணம் என்ன என்ற சிந்தனையில் ஆழ் கிறார் சிவப்பிரகாசர். "இறைவனோ வான் தொழும் ஈசன். அவன், மண்ணுலகிற் பிறந்த சுந்தரரைத் தடுத்தாட்கொண் டான்; போகட்டும். வேண்டுதல் வேண்டாமையிலானாக விளங்கும் இவ் ஈசன், ஒரு பெண்ணிடம் தூதாகச் சென்றானே; அதுவும் போகட்டும். 'இரந்து உயிர் வாழ்தலைவிடப் பரந்து கெட்டொழிதல் மேல்' எனும் அறமுறை அறிந்த அண்ணல் அல்லனோ அவன்? அப்படியிருந்தும், இப்படிமிசை, மிடியிலா மனைகள்தொறும் இரந்தனனே என்ன விந்தை!" எனப் பன்

முறையும் சிந்திக்கின்றார் சிவப்பிரகாசர். சிந்தனையின் முடிவில் எழுந்த திருப்பாட்டு இது:

''படியிலா நின்பாட்டில் ஆரூர நனிவிருப்பன் பரமன் என்பது
அடியனேன் அறிந்தனன்வான் தொழுமீசன் நினைத் தடுத்தாட் கொண்டும் அன்றித்
தொடியுலாம் மென்கைமட மாதர்பால் நினக்காதத்தூது சென்றும்
மிடியிலா மனைகடொறும் இரந்திட்டும் உழன்றமை யால்விளங்கு மாறே'' (3)

ஆம்! பைந்தமிழ்ப் பாடல் கேட்டு உள்ளம் உருகும் உமை பாகன் அல்லவா? அதனால்தான் பாடிய செந்தமிழ்ப்பாக்களிலே சிந்தை பறிகொடுத்து இந்த நிகழ்ச்சிகளை நடத்தினன் என்னும் உண்மைதனை அடியனேன்இப்போது உணர்ந்து கொண்டேன் என்று கூறும் சிவப்பிரகாசரது இப்பாட்டு, சுந்தரரைப் பற்றிய பத்துப்பாட்டுள் தலையாய பாட்டாம்.

மலை அடைந்த மாமணி

ஒரு பெண்ணிடத்தில் எல்லாம்வல்ல சிவபெருமானைத் தூதாக அனுப்பிய சுந்தரரும் ஒரு தொண்டராவரோ? என எண்ணினார் ஏயர்கோன் கலிக்காம நாயனார். அதனால் சுந்தரர் மீது மீளாச் சினமும் கொண்டார். இதனையறிந்த சுந்தரர், தாம் செய்ததும் பிழைதானே என உணர்ந்து, கலிக்காமரின் செற்றத்தைத் தணிக்க இறைவனை வேண்டினார். இவ்விருவரையும் ஒன்றுபடுத்தத் திருவுளங்கொண்ட இறைவன், கலிக்காமருக்குச் சூலைநோய் தந்து, 'இந்நோய் வன்றொண்டனால் தீரும்' எனக் கலிக்காமரிடம் சொல்ல அதுகேட்டுப் பொறாத கலிக்காமர், 'சுந்தரரைக் கண்ணாற் பார்ப்பதும் பாவம்' எனக் கருதி, வாளால்தம் வயிற்றைக் கிழித்து வாணாள் துறந்தார். கலிக்காமரைக் காணவந்த சுந்தரர் உண்மை தெரிந்து, அவரது வயிற்றிடைக் கிடந்த உடைவாளைப் பற்றி எடுத்துத், தம்முயிர் போக்கத் துணிந்தார். அந்நிலையில் கலிக்காமர் உயிர்பெற்றெழுந்து, சுந்தரரின் தூய அன்புள்ளம் உணர்ந்து, வன்றொண்டர் அடியில் விழுந்து வணங்கினார்.

இறைவன் தாமாகவே விரும்பித் தூதாகச் சென்றனன் என்றால், இந்தக் கலிக்காமர் வயிற்றிடைக் குத்திக் கொள்வானேன்? - எனச் சுந்தரரைப் பார்த்து ஒரு வினாத் தொடுக்கின்றார் சிவப்பிரகாசர். ''நோக்கலிக் காமன்வயிற்றிடைக் குத்திக் கொண்ட தேன் புகலாய் நாவலனே'' என்பது இவர் கேட்கும் கேள்வியாம்.

திருமுதுகுன்றத்து இறைவன், நம் நம்பியாரூரர்க்குப் பன்னீராயிரம் பொன்னைப் பரிசிலாக வழங்கியருளினன். பொன்னைப் பெற்ற சுந்தரர், தம் பெருமானிடம், 'இப்பொன்-னைத் திருவாரூரார் வியக்கும்வண்ணம், அங்கே வருமாறு செய்தல் வேண்டும்' என வேண்டினார். இறைவனும் 'இப் பொன்னை, மணிமுத்தாற்றிலிட்டுத் திருவாரூர்க் குளத்தில் எடுத்துக் கொள்க' எனத் திருவாய் மலர்ந்தான். அங்ஙனமே ஆரூரரும், திருவாரூரில், 'பொன்செய்த மேனியினீர்' என்னும் பொன்னான திருப்பாட்டைப் பாடி, ஆற்றிலிட்ட பொன்னைக் குளத்திலெடுத்தார்.

பரவையாரது செலவுக்குப் பணம் தர விழைந்த சுந்தரர், திருப்புகலூர் சென்று இறைவனைப் பணிந்து, செங்கல்லையே தலைக்கு அணையாக வைத்துத் துயில் கொண்டார்; பின்னர்த் துயில் எழுந்தபோது, அச் செங்கற்கள் எல்லாம் பொன் கட்டி களாக மாறியிருப்பன கண்டு மனமகிழ்ந்தார். இவ்விரு நிகழ்ச்சி-களையும் அறிந்த சிவப்பிரகாசர், ''கயிலை அடைந்த மணியே! மணிநீர் இடு பசும்பொன், திரைசங்கு எறியும் குளத்துவரச், செங்கல் செம்பொன்னாப் பாடும்பரிசு இன்று எனக்குஉன் செம் பவளத் திருவாய் மலர்ந்து பகர்வாயே'' எனச் சுந்தரரைப் பார்த்துக் கேட்பது அறிந்து இன்புறத்தக்கது.

''நம்பியாரூரரே! எலும்பைப் பெண்ணாக ஆக்கினார் சம்பந்தர்; கல்லையும் கடலில் மிதக்கச் செய்தார் நாவரசர் நீரோ திருப்புக்கொளியூரில் முதலையுண்ட பாலனைமீட்ட ருளினீர். இம்மூன்றில் எது மிகவும் அரியது என்பதை எனக்கு இயம்ப வேண்டும்!'' என்கிறார்:

''போத முண்ட பிள்ளை யென்பு பொருகண் மாது
செய்ததோ
காதல் கொண்டு சொல்லின் மன்னர் கல்மி தப்ப
வுய்த்ததோ
வாய்தி றந்து முதலை காக்க மகனை நீய ழைத்ததோ
யாது நம்பி அரிது நன்றெ னக்கி யம்ப வேண்டுமே''

என்று கேட்கும் இந்நயமான பாடல், ஓசைநயம் பெற்றுப் படிப்பார் உள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்கின்றது.

முடிவுரை

''உயர்ந்த அமுதமாகிய முத்தியின்பத்தைத் தேவாரப் பாடல்களாகச் சொரிந்த பவளம் போன்ற திருவாயினையுடைய வள்ளற்பெருமான், நம் நம்பியாரூரர்'' என நாவாரப் போற்றுகின்றார் பிரகாசர். ''சுந்தரர் வெள்ளானைமீதிவர்ந்து கயிலை அடைந்த காட்சியினைக் காணும் திருவருள் நலம் எனக்கும் வந்துறுமோ'' என ஏங்குகின்றார் சிவப்பிரகாசர் ' நினைப்பருங் கயிலாயம் அடைந்தமை நின்று காண்குறவே எனக்கு வந்துறுமோ?'' என்று ஏங்கும் ஏக்கம் நமது உள்ளத்தில் எதிரொலிக்கக் காண்கின்றோமல்லவா?

# 9

# ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல் (மாணிக்கவாசகர்)

மாணிக்கம்-அகவற்பா

எவர்க்கும் மெய்ஞ்ஞான சோதி, ஈயும் மாணிக்கமாகி, உவப்பொடு வெறுப்புமாகி, உற்றிடும் விடயத்து எய்தும் பவப்பெரும் புணரி நீந்திப் பாரதியாகும் எங்கள் சிவப்பிரகாச தேவர் செய்த இந்'நால்வர் நான்மணி மாலை'யானது, நாற்பது தருக்களைக் கொண்ட சின்னஞ்சிறு இலக்கியச் சோலை தான்! என்றாலும் இச்சோலைக்குள் நுழைந்தாலோ, இறைவனின் பசுமைக் காட்சியினைக் காணலாம்; தெய்வத்தமிழ் மணத்தை நுகரலாப்; தெய்வப் பாவலர் எனும் அஞ்சிறைத தும்பியின் இன்னோசை கேட்டு இன்புறலாம்; செவிநுகர் கனிகளாம் திருப்பாட்டைச் சுவைக்கலாம்; இத் தெய்வத் திருச்சோலையினை எண்ணுந்தொறும் எண்ணுந்தொறும், மெய்சிலிர்க்கும். இங்ஙனம் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புல இன்பமும் ஆரத் தருவது இந்நால்வர் நான்மணி மாலையாகும்!

இம்மணிமாலையில் நான்காவது வரிசையில் நிற்பது 'மாணிக்கம்' என்னும் நன்மணியாம். மலையுளே பிறப்பது மணி; அம்மணிகளே பிறப்பது ஒளி. கயிலைமலையினையுடைய மாமணியாக விளங்கும் சிவபெருமானின் திருவருளால் சேயவிளம் பரிதியென அவதாரம் செய்தவர் மாணிக்கவாசகர்; இம்மாணிக்கவாசகர்பால் தோன்றி ஒளி தருவன திருவாசகமும் திருக்கோவையாருமாகும். தென்னன் குமரன் திருமுடிக்கு வாணிபராய், நன்மணிகள் விற்ற நாயகனாய்-விடமுண்ட தன்மையால் மணிமிடற் றண்ணலாய், விளங்கும் சிவபெருமானின் தொண்டராய் விளங்கிய மாணிக்கவாசருக்குச் சிவப் பிரகாசர், மாணிக்கமாலை சூட்டுவது எத்துணைப் பொருத்தம் பார்த்தீர்களா? 'ஆசிரியப்பா' என்பது அகவல் ஓசை உடையது. 'அகவல்' என்றால் அழைத்தல் என்று பொருள்.

"வாட்டடங்கண் மாதே! நேரிழையாய்! முத்தன்ன வெண்ண-கையாய்! ஒண்ணித்தில நகையாய்! ஏலக்குழலி! மானே! கேட்டாயோ தோழி! போராற்வேற்கண் மடவீர்!" எனக் குயிலையும் கிளியையும் அழைத்துப், பாக்கள் பாடும் பா-வேந்தராம் மாணிக்கவாசகரை 'அகவற் பா'வால் இசைக்கும் சிவப்பிரகாசரை எப்படிப் போற்றினும் தகும்! ஏனைய மூவ-ரையும் நான்கடிப்பாவால் போற்றுஞ் சிவப்பிரகாசர், மணி-வாசகரை மட்டும், மூன்று அடிமுதல் 28 அடிகள் வரை கொண்ட அகவற் பாக்களால் அகங்குளிர வாழ்த்துகிறார்,

'ஆதிசீர் பரவும் வாதவூரண்ணல்'

"ஆதிசீர் பரவும் வாதவூரண்ணலே! நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ! மனம் நின்று உருக்கும் மதுரவாசக! கலங்குறு புலன்நெறி விலங்குறு வீர! ஆனந்தத் தேன்தேக்கெறியும் செய்ய மாணிக்கவாசக! செய்ய வார்சடைத் தெய்வசிகாமணி பாதம் போற்றும் வாதவூர் அன்ப!"—எனப் பலவாறாக மணிவாசகரைப் பரவும் சிவப்பிரகாசர், அவர் பிறந்த வாதவூரையும் வாழ்த்து கின்றார். "செந்தாமரைக் கண்ணனின் இடதுதிருக்கரத்தில் இருப்பது பாஞ்சசன்னியம் என்ற சங்கு. அதற்கு ஈடு இணை இவ்வுலகில் இல்லை. ஆனால் அந்தச்சங்கும் நாணுமாறு தாமரை மலர்மேல் வலம்புரிச் சங்குகள் துயில் கொள்ளுவதற்கு ஏற்ற ஊரன்றோ, நீ பிறந்த வாதவூர்?"

"செங்கண்மால் தடக்கையிற் சங்கம் நாண
முள்தாள் தாமரை முறுக்கவிழ் மலர்மேல்
வலம்புரி கிடக்கும் வாதவூர் அன்ப"

என்பது பிரகாசர் திருவாக்கு.

"பரிதி கொடுத்த சுருதிநாயகற்கு முடிவிளக்கு எரித்தார் கணம்புல்லர்; அருமகள் நறும்பூங் கருமயிர் உதவினார் மானக் கஞ்சாறர்; நென்முளைவாரி இன்னமுது தருத்தினார் இளையான்-குடிமாறர்; பூட்டி அரிவாள் ஊட்டி அரிந்தார் அரிவாட்டாயர்; தண்டையைத் தடிந்தார் சண்டேசுவரர்; மைந்தனை அரிந்தார் சிறுத்தொண்டர்; பூக்கொளு மாதர் மூக்கினை அறுத்தார் செருத் துணையார்; நகில் மாதர் வளமை துறந்தார் திருநீலகண்டர்.

— இங்ஙனமாகச் செயற்கருஞ் செயல் செய்து பண்டைநாளில் தொண்டர் ஆயினார் ஒருசிலர். நீயோ இத்தகு இன்னல்கட்கு ஆட்படாமல் தொண்டன் ஆயினை. ஆழ்ந்து பார்த்தால், ஏனையோரெல்லாம் சிவனுக்குத் தொண்டராயினர்; ஆனால் அச் சிவனோ நினக்குத் தொண்டனாயினன் என்றே சொல்லவேண்டும்!' அங்ஙனம் அச்சிவன் தொண்டனாதற்கு என்னென்னபாடெல்லாம் பட்டான் தெரியுமா? இதோ, சிவப்பிரகாசர் செப்புவதைக் கேட்போம்:

''மதுரைமா நகரிற் குதிரை மாறியும்
விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்தும்
நீற்றெழின் மேனியில் மாற்றடி பட்டும்
நின்னைத் தொண்டன் என்னக் கொண்டனன்''
(12: 22 — 25)

மணிவாசகர் வாழ்வில் நிகழ்ந்த அணியான நிகழ்ச்சிகளை இந்த நான்கடிகளில் நல்லோவியமாகத் தீட்டித் தருகின்றார் சிவப்பிரகாசர்.

புண் சுமந்த மேனி

அண்ணல் அரிமருத்தனுக்கு அடல்வாதவூரண்ணல் அமைச்சுப் பணிபூண்டு, அவனியெல்லாம் தம் கிளைபோல் முறை செய்து வாழ்ந்து வரலானார். அக்காலை, மன்றல் வேம்பனும் வாதவூர் வள்ளலை நோக்கி, 'இருநிதி எடுத்துச் சென்று பரியொடு வருக' என விடுத்தான். அங்ஙனமே வாதவூரரும் பெருநிதி கைக்கொண்டு, பரிகள்வந்திறங்கும் வேலையந்துறை நோக்கி விரைந்து புறப்படலானார். வாதவூரரை ஆட்கொள்ள விழைந்த ஆதிசைவ அண்ணலாம் சிவபெருமான், செங்கண் நெடுமாலுஞ் சென்றிடந்தும் காண்பரிய, பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளித், தெங்குதிரள் சோலைத் திருப்பெருந்துறையில் அந்தணனாய்க் குருந்தமரத்தினடியிலே இருந்தான். அவனை வழியிடைக் கண்ட வாதவூரர், முன் பணிந்தனர்; அஞ்சலி கூப்பினர்; என்பு உருகி நின்றனர். அவ் வேளையில் ஞானாசிரியராய் அமர்ந்த பரமசிவன், எவர்க்கும் மெய்ஞ்ஞானமாம் ஐந்தெழுத்தையும், தண்டமிழ் பாடும் அன்பர் செவிப்புலன் வழியே சிந்தையுறத் திருவாய் மலர்ந்தான். அப்போது நம் வாதவூரர், தொழுத கையினராய்த், துளங்கிய

முடியினராய்த், துளும்ப அமுதகண்ணினராய்ப், பொடிப்புறும் யாக்கையராய் ஆகிப், பழுதிலாத சொன்மணியினைப் பத்தி செய்து, அன்பு முழுதும் ஆகிய வடத்தினால் முறைதொடுத்து, அலங்கல் அழுது சாத்தும் மெய்யன்பராயினார்! அதற்கு ஐயன் மகிழ்ந்து, 'வழுவிலாத பேர் மாணிக்க வாசகன்' என மணிப் பெயர் சூட்டிக், கனவில் வரும் காட்சிபோலக், கடுகி மறைந் தான். வள்ளல் வாதவூர் முனிகளும், மன்னவன் பரிமாக் கொள்ள நல்கிய பொருள் எல்லாம் திருப்பெருந்துறைத் திருப் பணிக்களித்துத் திளைக்கலானார். குதிரை வாராமை அறிந்த பாண்டியன் வாதவூரரை அழைத்தான்; ஆண்டவன் ஆணைப் படி 'ஆவண மூல நாளிலே அனைத்துக் குதிரைகளும் வந்து சேரும்' என உரைத்தார் வாதவூரர். ஆனால் முதல் நாள் வரை பரிகள் வாராமை அறிந்த பாண்டியன், வாதவூரரைச் சிறையில் அடைத்தான். அப்போது வாதவூரர், வள்ளற் பிரானை உன்னி 'எந்தாய்! எனைத்துலகும் ஈன்றாய்! சிறி-யேற் கிரங்காயோ?' எனச் சித்தம் உருகினார். தொண்டனின் துயரம் தாங்காத் தூயவன், நரிகளைப் பரிகளாக்கி, அப்பரி களை நடாத்தும் தலைவனும் தானேயாகி, மதுரை வந்தான்; பாண்டியனிடம் கயிறு மாறிப், பரிகளைக் கொடுத்து மீண்டான் முக்கண்மூர்த்தி! வாதவூரர், சிறை நீக்கம் செய்யப்பட்டார். ஆனால் என்ன விந்தை? அன்றிரவே பரிகள் எல்லாம் நரி-களாகிக் காடு நோக்கி ஓடலாயின. கரியின் ஓசையும் பல்லிய ஓசையும், கடுந்தேர்ப்பரியின் ஓசையும், இன்றமிழ் ஓசையும் பாணர் வரியினோசையும் நிரம்பிய மணிநகர் எங்கும் நரி-யினோசையாய்க் கிடந்து விழித்தது மதுரை நகரம்.

'இம்மாயஞ் செய்தானை என்செய்வது?' எனச் சூழ்ந்த பாண்டியன் கடுஞ்சினங்கொண்டு 'இவ்வாதவூரனைக் கடுமை யாய்த் தண்டிக்க' என்று ஆணையிட்டான். எனவே, மணி-வாசகரை, வையைச் சுடுமண்ணில், கதிர் நோக்கிக் கனல் மூட்டும் கடும்பகல் உச்சியில், இரவிக் கடவுள் நேர்நின்று எதிர் நோக்க நிலைநிறுத்திக், கரங்களிலும் நுதலிலும் கல்லேற்றிக் கடுந்தண்டனை அளித்தனர். அத்தண்டனையினை ஆற்றமுடியாமல், 'ஐயவோ! என்னுடைய அன்பவோ! அன்பர்க்கு மெய்யவோ!' என முக்கட் தனிச்சுடரை

அழைத்து, அழுது துதி செய்தார் வாதவூரர். அன்பர்க்கு அருளும் ஆலவாய்ச் சொக்கன், உண்மை விளங்கும் பொருட்டு, வையையிலே பெருவெள்ளம்வரச் செய்தான், வையையும், புணரிபோல் புரண்டு மதுரை நகருட் புக்கது. மனம் மருண்ட பாண்டியன், 'நெடுநீர் வையை அடைப்பது, கடிதில் வேண்டும்; ஒல்லையில் வம்மின்' என மாந்தர்க்கு ஆணையிட்டான். மதுரை மக்களனைவரும் கூரிய கொட்டு மண்சேர் கூடையுங் கொண்டு வையைக் கரைமேல் வந்து நின்றனர். ஆனால் அளவில் ஆண்டு மன்னிய நரைமூதாட்டியாய்ப், பிட்டு விற்று உண்டு வாழும் பேதையாய், ஐயனை அகத்தினால் நோக்கி அன்பினால் ஊட்டுவாளாய் 'வந்தி' என்னும் பெயர் பூண்டாளொருத்தி மீனவன் ஆணையை நிறைவேற்ற முடியாது நிலைகலங்கி நின்றாள். யாவர்க்கும் எளியனாம் ஈசனோ, அவ் வந்திக்கு நிந்தனை வாராதபடி அவள் தரும் பிட்டுக்கு மண் வெட்டும் கூலியாளாய் வந்தான். வையைக் கரைவந்து 'வந்தியின் ஆள்' என்று வரைவித்துக் கரையடைக்கச் சென்றான். ஆனால் அவனோ கரையடைக்காமல், ஏனையோர் அடைத்த கரைகளையும் உடைத்தெறிந்து அலகிலா விளையாடலைச் செய்வானாயினன். வந்தியின் பங்குமட்டும் அடைபடாமை கண்ட பாண்டியன், வெகுண்டெழுந்து, பொற்பிரம்பைப் பொற்கரத்திலேந்தி, வந்தியின் கூலியாளாக வந்த எம்பெருமானை - அண்டமும் அளவிலாத உயிர்களுமாகக் கொண்டவனாகிய இறைவனின் முதுகிலே வீசிப் புடைத்தான். அவ்வளவில் அருட்பெருஞ்சோதியாம் ஆண்டவன் மறைந்தருளினன். ஆனால் பாண்டியன் அடித்த அடி, அடித்த அவன் முதுகில் மட்டுமன்றி அனைத்து உயிர்கள் முதுகிலும் பட்டது! இறைவன் ஆடலும் மணிவாசகர் பெருமையும் உணர்ந்த பாண்டியன், வாதவூரரை வணங்கிப் 'பெருமானுக் களித்தேன் என்பிழை செய்தேன் பெரியோனே' எனப் பணிந்து பிழை பொறுக்க வேண்டினன். மணிவாசகர் அப்பிழைதனைப் பொறுத்து, எப்பிழையும் பொறுக்க வல்ல எம்பிரான் அடித் தொண்டில் ஈடுபடலானார் இந் நிகழ்ச்சிகளையெல்லாம் மணிவாசகப் பெருந்தகையே, தம் திருவாசகத்துள் உணர்ந்து உணர்ந்து உள்நெகிழ்கின்றார்.

''பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்''

என்பது திருவாசகம். பெண்சுமந்த பாகத்தன், மண் சுமந்தான்; அம்மட்டோ? பிரம்படி பட்டுப் புண்ணும் சுமந்தானே! அவன் அருள் இருந்தவாறு என்னே என்று ஏங்குகிறார் மணிவாசகர்.

''இங்ஙனம் எம்பெருமான் மணிவாசகரைத் தொண்டனாகக் கொண்டானே! அதற்கென்ன காரணம்? வாதவூர் அன்ப! பாடும்பணிநீ கூடும்பொருட்டு இங்ஙனமெல்லாம் செய்தான்'' என்கிறார் சிவப்பிரகாசர்.

முத்திப் பயன்தரும் மதுரவாசகம்

மணிவாசகரைக் கருணை மழை பொழியும் கருமேகமாக உருவகித்துப் பாடும் பாடல், சிவப்பிரகாசரின் கற்பனை நயத்தை எடுத்துக் காட்டுவதாக உள்ளது. ''உலகம் உவப்ப உகந்த மாணிக்கவாசகன் என்னும் ஒரு மாமுகிலானது, சிவன் என்னும் கருணைக்கடலில் முகந்து, பொழிந்த பெரு நீரே திருவாசகம். இந் நீரானது, காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கும் ஓதுவார், மனம் எனும் ஒண்குளம் புகுந்து, நா என்ற மதகில் நடந்து, கேட்போர் செவி என்னும் மடையிற் சென்று, உள்ளம் என்னும் நிலத்திற் பாய்ந்து, ஊன்றிய அன்பு எனும் வித்தில் சிவம் என்னும் மென்முளை தோன்றிப் பின் வளர்ந்து, கருணை என்னும் மலரை விரிக்கும்! இறுதியிலே, விளங்குறு முத்தியாகிய மெய்ப்பயன் தருமே'' என்கிறார் இவர்.

மாணிக்கவாசகம் எத்தகையன்? அவன் புகன்ற மதுர வாசகம் எப்படிப்பட்டது? தெரியுமா? சிவப்பிரகாசர் கூறுவன கேட்போம் :

''திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தின்
நிழல்வாய் உண்ட நிகரில் ஆனந்தத்
தேன்தேக் கெறியும் செய்ய மாணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்
யாவரும் ஓதும் இயற்கைத்து ஆதலின்
பொற்கலம் நிகர்க்கும் மதுரவாசகம்
ஓதின் முத்தி உறுபயன்
வேதம் ஓதின் மெய்ப்பயன் அறமே'' (32)

வேதம் ஓதின் அறமாகிய மெய்ப்பயன் கிட்டும்; மதுர வாசகம் ஓதினால் முத்தி உறுபன் உறுதியாகக் கிட்டும் என வாசக மேன்மை உரைக்கின்றார்.

வாதவூரர் வழங்கிய வாசகத்திற்கு உருகாதோர் ஒரு வாசகத்திற்கும் உருகாரன்றோ? திருவாசகத்தைப் படித்துப் படித்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து, ஊற்றெழுங்கண்ணீரதனால் உடப்பு நனைந்து நனைந்து இறும்பூது கொண்ட மேலை நாட்டறிஞராம் டாக்டர் போப் ஐயரை அறியாதார் யார்? இதனாலன்றோ,

''வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்
தீஞ்சுவைகலந்து
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே''

என வள்ளல் இராமலிங்கர் வாய்மையுடன் உரைக்கலானார். இதனைச் செந்தமிழ்ச் சிவப்பிரகாசர் போற்றும் முறை விந்தையாகவுள்ளது.

''முக்கணன்உரைத்தவேதம்சிறந்ததா? அப்முக்கணனைப் பரவும் வாதவூர் மொழிந்த வாசகம் சிறந்ததா?'' என்ற வினாவைத் தாமாக எழுப்தக் கொண்டு அதற்கு விடைகூறு முகத்தான் பின்வரும் பாடலைப் பாடுகின்றார் சிவப்பிரகாசர் :

''விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கண்
காரணன் உரையெனும் ஆரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்தது என்குவீர் ஆயின்
வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவா சகமிங் கொருகால் ஓதில்
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை யுலகில் மற்றையர் இலரே'' (4)

என்கிறார். இங்ஙனம் இவர் சொல்லுவதற்கு என்ன காரணம்? இதோ இவர் வாக்கு! ''பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம் மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே வாசகம்; அதற்குப் பொருள் தூசகல் அல்குல் வேய்த்தோள் இடத்தவளே'' எனத் திருவாசகத்தாற் சுட்டப்படும் பொருள் சிவனே எனும் காரணத்தையும் கழறுகின்றார்; இதுமட்டுமன்று; மணிவாசகர் புகன்ற மதுர வாசகத்தைச் சிவபெருமானே எழுதினான் என்றால் வாசகப் பெருமைதனை வாக்கால் உரைக்க முடியுமா என்கிறார் பிரகாசர். இங்ஙனம் இயம்பும் சிவப்பிரகாசர் திருவாக்கு, சிந்தனைக்குரியதாவதன்றி, நகைச்சுவை பயப்பதாகவும் உள்ளது.

''கண்ணுதற் கடவுள் ஒருகலையேனும் உணரான் (அதாவது எக்கலையாலும் உணரப்பட முடியாதவன்). அவனுடைய கரங்களோ வளைந்திருப்பன; கண்கள் மூன்று; அவற்றில் ஒன்று, காலையில் காணும் (அதாவது சூரியன்); மற்றொன்று மாலையில் காணும் (அதாவது சந்திரன்); இன்னொன்று. யாரேனும் பழித்தால் விழித்து எரியும் (அதாவது நெற்றிகண்). இப்படியிருந்தும் எப்படி இத்திருவாசகத்தைப் பழுதின்றி எழுதினன். ஓகோ! அவன், தன்னைப் புகழ்ந்து பாடுவார் பாட்டைக் கேட்பதில்தான் புகழ்ச்சி விருப்பினன் ஆயிற்றே!'' என நயம்பட உரைக்கின்றார் :

"திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன்
ஒருகலை யேனும் உணரான் அஃதான்று
கைகளோ முறிபடுங் கைகள் காணின்
கணகளோ ஒன்று காலையில் காணும்!"

"வாசக! வேதப் பொருள் முழுதும் கொள்ளை கொள்ளையாகக் கொண்டாயே! அதில் ஒரு சிறு பங்காவது அடியேனுக்கு அருளல் ஆகாதோ? வாதவூர் அன்ப! சிவனின் பேரருள் பெற்ற நீ, பெறாதார் போல நெஞ்சம் நெக்குருகி நிற்கின்றனை! ஆனால் யானோ அவ்வருளில் சிறிதும் பெறாமல், பெற்றவர் போல உள்ளக்கவலை தீர்ந்தேன். ஆம்! 'நன்றறிவாரிற் கயவர் திருவுடையர், நெஞ்சத் தவல மிலர்' எனும் தெய்வப்புலவர் திருக்குறளுக்கு இலக்காகி நின்றேன்! 'வாதவூரனைக் கடிதில் மனத்தால் கட்டவல்லார்க்குச் சிவன் தானே முத்தி தருவன்' என்றும் ஏத்துகின்றார்.

முடிவுரை

இறுதியாகப் 'பாவெனப் படுவது உன் பாட்டே; பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' என நூலின் தொடக்கத்தில் 'பூ' எனத் தொடுத்து, இறுதியிலும் 'பூவே' என முடிக்கும் புண்ணியச் செல்வராகிய சிவப்பிரகாசரின் சேவடியைப் போற்றி. நாளும் நற்றமிழால், நம்பெருமான் புகழ் பாடி, நால்வரைத் துதித்து நற்பேறு காண்போமாக!

# 10

# திருவெம்பாவைத் திருவிழா

முன்னுரை

''திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின் கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள் தொடுமணற் கேணியில் சுரந்து நீர் பெருகி'' அன்பராவர். அத்துணைச் சிறப்புற்றது மணிவாசகப் பெருமான் அருளிய 'திருவாசகம்'. இவ் வாசகத்தை, உள்ளம் ஈடுபட்டுப் பாடினால், நற்கருப்பஞ் சாற்றினிலே தேன் கலந்து, பால் கலந்து, செழுங்கனித் தீஞ்சுவை கலந்து, ஊன் கலந்து, உயிர் கலந்து உவட்டாமல் இனித்திடும். இத்தகைய திருவாசகத்தின் ஒரு பகுதியே 'திருவெம்பாவை'.

சங்க காலத்தில்

'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்பது தமிழகத்துப் பழமொழி. வழி, யாருக்குப் பிறக்கும்? பாடுபட்டு நிலத்தைப் பயன்படுத்தி, நாற்று நட்டு, நீர்பாய்ச்சிக் களையெடுத்து உரம்போட்டு 'இனி நமக்கு நிலமகள் அள்ளி அள்ளித் தருவாள்' என்று எண்ணும் உழவர் பெருமக்களுக்குமட்டுமா வழிபிறக்கும்? ''கடந்த ஆண்டுகளில்தான் அல்லல்பட்டோம்; புத்தாண்டாகிய தை பிறந்தாலாவது வழிகிட்டுமா?'' என்று ஏங்குகின்றவர்களுக்குமட்டுமா வழிபிறக்கும்? இல்லை இல்லை. ''பருவம் வந்தபிறகும் தனக்கு ஒரு மணாளன் கிடைக்கமாட்டானா?'' என்று பெருமூச்சுவிட்டு ஏங்கித் தவிக்கும் கன்னிப் பெண்களுக்கு வழிபிறக்கும் மாதமே — தை மாதம்!

''தைத் திங்களில் திருமணம் நடக்கவேண்டும்'' என்று விரும்பும் கன்னியர், அதற்கு முந்திய மார்கழித் திங்களில் நீர்த் துறைக்குச் சென்று நீராடிப் 'பாவை' நோன்பு நோற்பர். இஃது, இன்று நேற்றுத் தோன்றியது அன்று; இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே, தமிழகத்தில்இருந்துவருவதொன்று. மார்கழித் திங்கள் 'முன் பனிக் காலம்' ஆகும்; அக்காலத்தில், மணமாகாத இளமகளிர், விடியலுக்கு முன்பே எழுவர்; தன்

அன்னையரோடு நீர்த்துறைக்குச் செல்வர்; பைஞ்சாய்க் கோரையைக் கொண்டு 'பாவை' அதாவது 'பதுமை' ஒன்று செய்வர்; அகற்குப் பூச் சூட்டுவர்; அழகுபடுத்துவர்; நீர்த்துறை மணலில் வைப்பர்; நீரில் இறங்கி விளையாடுவர்; பின்பு ஈரம் புலராத ஆடையுடன் அப் பாவையை வழிபடுவர். தமக்கு நல்ல மணவாளன் வாய்க்க வேண்டும் என்று வேண்டுவதுடன், ''வெம் பாதாக வியனில வரைப்பு'' என்றும் வேண்டுவர். 'மழை பொழிய, அதனால் வெப்பமின்றி இவ்வுலகம் விளங்குவதாக'' என்பது இதன் பொருள். இவ்வாறு இவர்கள் செய்யும் இவ் விழாவுக்கு 'அம்பா ஆடல்' என்றும், 'தைந்நீராடல்' என்றும் பெயர். இவ் வரலாற்றைச் சங்க இலக்கியமான 'பரிபாடல்' விரிவாக உரைக்கிறது. பின்னர் வந்த சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாம் ஆண்டாள் அம்மையாரும்,

''மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர், போதுமினோ நேரிழையீர்''

என்ற பாடியமை அனைவரும் அறிவர். மார்கழித் திங்களில், மகளிர் ஒன்றுசேர்ந்து நீராடும் பால்மையை இதனால் அறியலாம்.

சங்ககாலத்தே 'தைந்நீராடல்' எனச்சிறப்புற்றிருந்தவிழா, பிற்காலத்தே மார்கழித் திங்கள் 'திருவாதிரை விழா' வாக மாற்றம் பெற்றுவிட்டது. இதற்குக்காரணம், மணிவாசகர் அருளிய 'திருவெம்பாவை' என்றும் கூறலாம் 'பாவை'யை வைத்துப் போற்றியதால் 'பாவை' எனப்பட்டது; ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் 'எம்பாவாய்' என முடிவதால் 'எம்பாவை' எனப் பட்டது என்றும் மொழியலாம்.

திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை வழிபடச் சென்ற மணிவாசகர், மார்கழி மாதத்தில் வைகறைப் போதில் எழுந்து மகளிர் ஒன்றாகக்கூடி, நீராடச் செல்லும் இனிய காட்சியினைக் கண்ணாற் கண்டார்; அதனால் முகிழ்த்தது 'திருவெம்பாவை' என்னும் தீந்தமிழ்ப்பாட்டு.

'எம்பாவை' என்பதோடு 'திரு' என்னும் அடைமொழி சேர்ந்து 'திருவெம்பாவை' எனப்பட்டது. இஃது இருபது பாடல்களைக் கொண்டது. இதனை ஐந்து பிரிவுகளாகப்

பிரிக்கலாம்: (1) மகளிர் ஒருவர்க்கொருவர் நீராட அழைத்தல். (2) நீரில் மூழ்கி ஆடுதல். (3) இறைவன் இயல்பு கூறுதல். (4) வேண்டுதல் (5) மார்கழி நீராடி இறைவனைப் போற்று-தல்.

(1) நீராட அழைத்தல் : முதல் எட்டுப் பாடல்கள், இள மங்கையர், மற்ற மங்கையரை நீராட அழைப்பதாக அமைந்துள்ளன. "வாள்போல் கூரிய கண்களையுடைய பெண்ணே! நாங்கள் அனைவரும் யாரைப்பற்றிப் பாடுகிறோம் தெரியுமா? முதலும் முடிவும் இல்லாதவன் அரிய, பெரிய சோதி வடிவானவன். ஆம்! நம் முழுமுதலான சிவபெருமானையன்றோ பாடி வருகின்றோம். நாங்கள் இப்படிச் சேர்ந்து பண் இசைத்து வரு-வதைக் காதினாற் கேட்டுங்கூடத் தூங்குகின்றாயே, அல்லது, நின் காது, கேட்காத செவிடா? நாங்கள், மகாதேவனின் திரு வடிகளை வாழ்த்திக்கொண்டு வந்தோமா? இந்த வாழ்த் தொலியை வீதியிலிருந்து கேட்ட மாத்திரத்தானே ஒரு பெண் ணானவள், இறைவனை எண்ணினாள்; விம்மிவிம்மி அழுதாள்; தன்னையே மறந்தாள்: தனது மலர் சூழ்ந்த படுக்கையில் இப்-படியும் அப்படியுமாகப் புரண்டுகொண்டிருக்கிறாள்; என்ன ஆவாளோ? தெரியவில்லை. ஆனால் தோழியாகிய நின் செயல்தான் இப்படி உள்ளது!"

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்குழல்கள் வாழ்த்திய
வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னேஎன்னே
ஈதே எந்தோழி பரிசேலோ ரெம்பாவாய்"

—"இவ்வாறு கூறிக்கொண்டு, அடுத்த வீட்டுக்குச் சென்றனர் மகளிர். அங்குள்ளவளைப் பார்த்து, 'நேர்மையான அணிகலன் அணிந்த மங்கையே! என் அன்பெல்லாம் பரஞ்சோதிப் பெம் மானுக்கே" என்று சொல்வாயே, இரவு பகல் எப்போதும் அவ னைபற்றிப் பேச வேண்டாமா? இப்போதோ நீ படுக்கைமீதல்-

லவா பாசம் வைத்துள்ளாய்!'' என்றனர். இதைக் கேட்ட அவருக்குச் சினம் வந்து விட்டது: ''தோழிகளே! சீசீ! இப்படி நீங்கள் பேசலாமா? விளையாடும் இடம் இதுதானா?'' என்றாள். வந்த தோழிய ''விண்ணோர்கள் ஏத்தும்படியான திருவடிகளையுடையவனல்லவா நம் சிவலோகநாதன்? தில்லைச் சிற்றம்பல ஈசனுக்கு அன்பரல்லவா நாமெல்லோரும்? படுக்கை விட்டு எழுந்து எம்முடன் வருக!'' என்றனர்.

அவளை அழைத்துக்கொண்டு அடுத்தவளை நாடிச் சென்றனர் பெண்கள், அங்குள்ளவளைப் பார்த்து, ''முத்துப்போல் ஒளிவிடும் பற்களையுடைய நங்காய்! முன்பெல்லாம் எங்கட்கு முன்னர் எழுந்து, 'என் தலைவன்; ஆனந்தமயமானவன்; எனக்கு அமுதமானவன்' என்று வாய்ஊற இனிக்க இனிக்கப் பேசுவாய்! இப்போது ஏன் உறக்கம்? எழுந்து கடை பிறப்பாய்!'' என்றனர். உள்ளேயிருந்தவள், ''நீங்கள் அனைவரும் நம் ஈசன்பால் நீண்ட காலம் பற்றுடையவர்கள்; பழமையான அடியவர்கள்; நல்லியல்புகள் கொண்டவர்கள். யான், புதிதாகத் தானேஅடியவளானேன்! எனது சிறுமை போக்கி ஆட்கொண்டால் என்னவாம்?'' என்றாள். வந்தவர்கள், ''ஐயகோ! நின் அன்புடைமை நாங்கள் அறிய மாட்டோமா?நம் சிவபெருமானை நல்லுள்ளங்கொண்டோர் பாடாமலிருப்பரோ? எழுந்து வருக'' என்றனர். அவளும் சேர்ந்து கொண்டாள்.

அடுத்து, வேறொருத்தியின் இல்லம் ஏகினர். அவளைப் பார்த்து, ''ஒளிபொருந்திய முத்துப்போல் புன்முறுவல் கொள்பவளே! உனக்குமட்டும் இன்னும் விடியவில்லையோ?'' என்றனர். அதற்கு அவள், படுத்திருந்தவாறே, ''ஆமாம்! என்னை எழுப்புகிறீர்களே! கிளிபோல் இனிக்கப் பேசும் நம் தோழிமார் அனைவரும் வந்துவிட்டார்களோ?'' என்றாள், ''அடி பெண்ணே! இரு. இரு! எண்ணிப் பார்த்து உனக்குச் சொல்கின்றோம். அதுவரை, நீ, கண்மூடித் தூங்கிக் காலத்தை வீணாக்காதே! விண்ணுக்கு ஒப்பற்ற மருந்தாக உள்ளவன் — நான்மறையின் சிறந்த பொருளாக உள்ளவன் — கண்ணுக்கு இனிமையாக உள்ளவன்! இத்தகு எம்பெருமானைப் பாடிவருகின்றோம். அதனால் உள்ளம் கசிய நெக்குநின்று உருகுகின்றோம். இப்போது வந்தவர்களை எண்ணத் தலைப்பட்டால், இந்நிலை

மாறிவிடும். ஆதலால் நீயே எழுந்து வந்து எண்ணிப்பார்! குறைந்தால் மீண்டும் உறங்கப் போ'' என்றனர்.

இப்போது அவளும் சேர்ந்துகொள்ள, அடுத்தவளை நாடிச் சென்றனர். ''அழகான கூந்தலையுடையவளே! 'திருமாலும் பிரமனும் அறியமுடியாத சிவபெருமானை நாம் நன்கு அறிவோம்!' என்று பாலும் தேனும் ஊறும்படியான நின் வாயில், பொய் பேசுபவளே! கதவைத் திற! இவ்வுலகும் விண்ணுலகும் வேறும் அறிவதற்கு அரியவனான சிவபெருமானின் கோலத்தையும், அத்தகையான் எளியோமாகிய நம்மை ஆட்கொண்டு அருளும் சீலத்தையும் பாடினாலும், 'சிவனே சிவனே' என்று ஓலமிட்டாலும் அவனை உன்னால் உணரமுடியாது. உன் இயல்பு இது! எழுந்து எம்முடன் வா!'' என்றனர்.

அவளோடு அடுத்து ஒருத்திவீடு சென்றனர். ''மான் போன்ற பெண்ணே! நேற்று எங்களிடம் நீ சொன்னது என்ன? 'நாளைவந்து உங்களை நானே எழுப்புவேன்' என்றல்லவா சொன்னாய்! ஆனால் இப்போது உறங்குகின்றாயே. உனக்கு வெட்கமில்லையா? இன்னும், பொழுது புலரவில்லையா? வானும் நிலனும் பிறவும் அறிவதற்கு அரியவனான எம்பெருமான், தானாக எளிவந்து நம்மை ஆட்கொண்டு அருளுவான். அத்தகையானின் சேவடிகளைப் பாடி வந்துள்ளோம். எங்கட்கு நின் வாய்திறந்து பேசாமல் இருக்கிறாயே? ஊன் உருகாமலிருக்கிறாயே. இஃது உனக்குத் தகும். எம் தலைவனைப் பாடுவோம்! எழுந்து வருக'' என்று அழைத்தனர்.

பின்பு வேறொருத்தியை அழைக்கச் சென்றனர் ''அம்மா! இவ்வளவுதானா? இன்னும் உண்டா? தேவரும் எண்ணுதற்கரியவன்; ஒப்பற்றவன்; பெருஞ் சீர்த்தியுடையவன்; அத்தகையானின் அடையாளங்களைக் கேட்ட அளவிலேயே 'சிவன் சிவன்' என்றல்லவா வாய்திறப்பாய்! 'தென்னவனே!' என்று கூறி, தீயினைச் சேர்ந்த மெழுகுபோல் உள்ளம் உருகிடுவாய்! இப்போது நாங்கள் அனைவரும் 'எமக்கு அரசன், எங்கட்கு இன்னமுது' என்று சொன்னோமே கேட்டாயா? கேட்டும் துயில்கின்றாயோ? கொடிய நெஞ்சுடைய பேதைகள்.

போல் எதுவுமின்றிக் கிடக்கிறாயா? நீ தூங்கும் பரிசு மிக நன்றாயுள்ளது எழுக!'' என்றனர்.

இறுதியாக ஒருத்தியைச்சென்று கண்டனர். ''பெண்ணே! கோழி கூவுகிறது; பறவைகள் எங்கும் ஒலியெழுப்புகின்றன; வெண் சங்கொலிகள் இசைக்கின்றன. நம் பரஞ்சோதி—பெருங்கருணை—விழுப்பொருள் எனத்தகும் சிவபெருமானைப் பாடிவருவது கேட்டிலையோ? வாழ்க நீ! இதென்ன பெரிய உறக்கம்? வாய் திறவாயோ? கடல்போல் கருணை கொண்ட இறைவன்மீது நீ வைத்த அன்பு இவ்வளவு தானா? ஊழிக் காலத்திற்கும் முதல்வனாக இருக்கும் சிவபெருமானை ஏழை பழங்காளனைப் பாட வேண்டாமா? எழுந்து வருக!'' என்று அழைத்தனர்.

இவ்வாறு வந்தவர்கள் எட்டுப் பெண்களையும் ஒருவர்பின் ஒருவராய் எழுப்பி இப்போது அனைவரும் ஒருங்குசேர்ந்து நீராட நீர்த்துறைக்குப் புறப்பட்டனர்.

(2) நீராடி மகிழ்தல் : ஐந்து பாடல்களில், இம் மங்கையர், நீரில் மூழ்கி நீராடும் செயல்களை விளக்குகின்றார் மணிவாசகர் :

தாமரை மலர்களில் தேனீக்கள் மொய்க்கும் வளப்பமான பெரிய பொய்கைகளில் நுழைந்தனர் இப் பெண்கள். 'முசேர்' என்று ஓசை உண்டாகும்படித் தங்கள் கையால் தண்ணீரை அடித்துக் குடைந்தனர். அப்படி நீராடும்போதும் இறைவன் புகழ் பாட மறந்தாரிலர். ''ஐயனே! உன் திருவடி பாடி, வழிவழி உனக்கு அடியாராகி வாழ்ந்துவருகின்றோம். பெரிய நெருப்புப்போல் மேனியுடையவனே! திருவெண்ணீறு அணிந்தவனே! சிறிய இடையையும் மைதீட்டப்பட்ட பெரிய கண்களையுமுடைய உமாதேவியின் மணாளனே! ஐயனே! நீ ஆட்கொண்டருளும் அரிய திருவிளையாடலால் நின் திருவடிப் பேறு பெறும் அடியார்கள் வழிகளிலே நாங்களும் சென்று உய்திபெற விழைந்தோம். எங்கட்கும் நல்வழிகாட்டி எம்மைக் காப்பாற்றவேண்டும்'' என்று வேண்டினர்.

நீராடும் இப் பொய்கையில் பூக்கள் நறுமணம் பரப்புகின்றன; பூக்களில் தேன் மிகுந்துள்ளது; தேனினைப் பருக

வண்டுகள் இன்னிசை எழுப்புகின்றன. இத்தகு பொய்கைகளில் மூழ்கி நீராடுங்கால், அப் பெண்களின் வளைகளிலிருந்து ஓசை எழும்புகின்றது; நீண்ட மேகலை என்ற அணிகளும் ஆரவாரிக்கின்றன. மலர்களிலுள்ள வண்டுகள் இப்போது மங்கையரின் அழகான கூந்தலைச்சுற்றி வட்டமிட்டு இன்னிசைபாடுகின்றன. நீராடும்போதும், நீறு அணிந்த சிவபெருமானை எண்ணிப் போற்றுகின்றனர். ''நமது பிறவித் துன்பம் இனி இல்லாமற் போகவேண்டும் என்பதற்காகவே, தில்லைச் சிற்றம்பலம் என்னும் சிதம்பரத்தில், நெருப்பினை ஏந்தி நடனமாடுகின்றான் நடராசப்பெருமான். இவ் வானத்தையும் பூமியையும் பிற எல்லாவற்றையும் படைத்தும், காத்தும், மறைந்திருந்தும் என இவ்வாறு விளையாட்டைச் செய்தருளுபவன். அத்தகைய அருளாளனைப்பற்றிப் பேசிக்கொண்டே, அவனது பொன் போன்ற திருவடியை ஏத்திக்கொண்டே இருஞ்சுனையில் ஆடுவோம்'' என்று கூறி நீராடினர்.

ஆழமான மடுவினைக் கொண்டது இத் தாமரைத் தடாகம். இதில் பசுமையான நீலநிறம்பொருந்திய குவளை மலர்கள் ஒருபக்கம் பூத்துக் குலுங்குகின்றன; செம்மையான தாமரை மொட்டுக்கள் மற்றொருபக்கம் ஒளிவீசிக்கொண்டிருக்கின்றன. ஆங்காங்கே பறவைக் கூட்டத்தின் ஒலியும் கேட்கின்றது. தம்மைப்பற்றியிருக்கும் 'ஆணவமலப்' பாசத்தினின்று விடுதலைபெற விரும்புவார், வைகறைப் போதில் இத் தடாகத்தில் நீராடுவாராதலால் அவர்களின் ஓசையும் கேட்கின்றது. இங்குள்ள குவளைமலர்கள், உமாதேவியின் நீலமலர்க் கண்களை நினைவுபடுத்துகின்றன; தாமரை மலர்கள், சிவபெருமானின் திருவடிகளை நினைப்பூட்டுகின்றன. நீராடுவோரின் ஆரவாரம், இறைவன் திருமுன்னர் 'அரகரா' என்று ஒலி எழுப்பும் அடியார்களை நினைவுபடுத்துகின்றது. இவ்வாறெல்லாம் எண்ணும் இப் பெண்டிர், ''இப் பொய்கை, எங்கள் தலைவியாம் பார்வதியையும் எம் தலைவனாம் சிவபெருமானையும் போலல்லவா காட்சியளிக்கின்றது. எனவே இதில் பாய்ந்து பாய்ந்து நீராடுவோம்'' என்றனர். அப்படி ஆடுங்கால், அவர்களின் சங்கு வளையல்கள் ஒலிஎழுப்புகின்றன; மார்பகங்கள், விம்மிதமுறுகின்றன; மூழ்கிமூழ்கி எழுவதால் குடைந்தோடும் நீரும் மேலோங்கி எழுகின்றது.

மங்கையர் நீராடும்போது, அவர்கள் காதுகளில் அணிந்துள்ள 'குழை' என்னும் காதணி ஆடி அசைகின்றது; உடம்பிலுள்ள பசுமையான அணிகலன்கள் ஆடி அசைகின்றன. மகளிரின் நீண்டு உயர்ந்த கூந்தல் அசைந்தாடுகின்றது; கூந்தலைச் சுற்றி வண்டுக்கூட்டங்கள் அசைந்தாடுகின்றன. இங்ஙனம் அனைத்தும் ஆடுமாறு, குளிர்ந்த புனலில் நீராடும் அப்பெண்கள், "சிற்றம்பலத்தில் உள்ள நடராசப் பெருமானைப் பாடுவோம்; மறைகளின் உட்பொருளாயுள்ளவனைப் பாடுவோம்; ஒளிவடிவானவனைப் பாடுவோம்; கொன்றைமலர்மாலை சூடியவனைப் பாடுவோம்; ஆதியாய் உள்ளவனைப் பாடுவோம்; உலகத் தோற்றத்திற்கு இறுதிதருவானைப் பாடுவோம்; நம்மை இந்நிலைக்கு ஆளாக்கிய எம்பெருமாட்டியின் திருவடித் திறம்பாடி ஆடுவோம்" என்று கூறினர்.

"காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்
சோதி திறயபாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆடேலோ ரெம்பாவாய்!"

என்பது அவர்கள் பாடியதாக வரும் அருமைத் திருப்பாட்டு.

இறைவன் புகழ்பாடும் இம் மங்கையரில் ஒருத்தி நிலை இப்படியாயிற்று; 'எம்பெருமான் எம்பெருமான்' என்று வாய் வலிக்காமல் ஓயாது புலம்புவாள்; உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கி நிற்பாள்; அவள் கண்களிலிருந்து தாரைதாரையாகக் கண்ணீர் சிந்தும்: தேவர்களை ஒருபோதும் தொழமாட்டாள்; நடராசப் பெருமானைமட்டும் வழிபாடு செய்வாள். அவளிருக்கும் நிலை கண்டு 'இவள் ஒரு பைத்தியம்' என்றுகூடச் சொல்லுவர். இவ்வாறு தன்னை வந்தடைந்தோரை ஆட்கொள்ளுபவன் எம்பெருமான். "கச்சு அணிந்த மார்பகங்களையுடைய மங்கையீர்! இத்தகைய அருள் வள்ளலாம் நடராசப் பெருமானாம் வித்தகன் திருவடியைப் பாடி, இந்த அழகிய தடாகத்தில் நீராடுவோம்,' என்றனர் அப் பெண்கள்.

(3) இறைவன் இயல்பு கூறுதல் ; பெண்கள் நீராடுதற்கு முன்னும் பின்னும் எம்பெருமானின் இயல்புகளைக் கூறிச் செல்வர். ''குற்றமற்ற குலத்திலே வந்த சிவபெருமான்கோயிலுக்குப் பணிசெய்யும் மங்கையீர்! அவனின் திருவடித் தாமரைகள் கீழே உள்ள பாதாளம் ஏழினையும் கடந்தவை; சொல்லுக்கு எட்டாதவை. தாமரைப் போது பொருந்திய அவனது திருவடியோ எல்லாப் பொருள்களையும் தாண்டி அப்பாலுள்ளது. அவனது உடம்பின் ஒருபக்கம் உமா தேவி! எனினும், ஒரு திருமேனி மட்டுமே உடையவன் அல்லன். எல்லாப்பொருள்களிலும் உள்ளவன். மறைகளும் அமரர்களும், இம் மண்ணுலகத்தவரும் துதித்தாலும் அவன்பெருமை சொல்லும் தரத்தன்று! ஆயினும் தோழர்க்குத் தோழன்; தொண்டர்கள் உள்ளத்தில் உள்ளவன். அவனுக்கு ஊரேது? பேரேது? அவனுக்கு உற்றார் யார்? அயலவர் யார்? அவனைப் பாடும்பரிசே பரிசு!''

மேலும் அவர்கள் சொன்னார்கள்: ''வண்டுகள் தேன் உண்ணும் நறுமணக் கூந்தலை உடையவளே! சிவந்த கண்களையுடையவனிடமும், நான்முகனிடமும், அமரர்களிடமும் வேறு எவரிடமும் இல்லாத ஒப்பற்ற பேரின்பத்தை நமக்கு அளித்தருளியவன் சிவபெருமான். அத்தகையான், இன்று, அனைவரின் இல்லம்தோறும் எழுந்தருளியுள்ளானே! அவனது செங்கமலப் பொற்பாதங்களை நமக்கு அளிக்கும்எளிவந்தசேவகனாக உள்ளானே! அடியோங்களாகிய நமக்குஆரமுதமாக உள்ளானே. நாம் நலம்பெற அவனைப் பாடி இப்புனலில் ஆடுவோமாக.'' இதோ அவர்கள் கூற்று;

''செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நம்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்''

மேலும் அவர்கள், ''பெண்ணே! திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கிறான் நம் இறைவன். அவனின் திருவடித் தாமரைகளை இறைஞ்சுகின்றனர் தேவர்கள். இறைவனது பேரொளியில், அத் தேவர்களின் முடிகளிலிருந்த மாணிக்கங்களின் ஒளி தோற்றது; அதுபோலச் சூரியன் தன் ஒளிக் கதிர்களைப் பரப்பியதும் இருட்டு ஒளிந்தது; விண் மீன்கள் ஒளி மங்கியது; அவை அகன்று போயின. நம் இறைவன், பெண்ணாக-ஆணாக-அலியாக விளங்கும் ஒளிசேர் விண்ணாக-மண்ணாக இத்தனைக்கும் வேறாக விளங்குபவன்; கண்ணுக்கு அமுதமாய் நிற்பவன். இத்தகையானின் திருவடிகளைப் பாடி இப் பூம்புனலில் ஆடுவோம்'' என்றனர்.

(4) வேண்டுதல்: மார்கழி நோன்பு நோற்பதால் தமக்கு நல்ல கணவன் கிடைக்கவேண்டும் என்பது ஒன்று; மழை பொழிந்து மன்னுயிர் சிறக்கவேண்டும் என்பது மற்றொன்று. இவ்விரண்டில் முன்னது தம்பொருட்டு; பின்னது, பிறர்பொருட்டு, இவ்விரண்டு நோக்கமும் ஈடேற, மங்கையர் மார்கழி நீராடி மகிழ்வதாக மணிவாசகர் மொழிகின்றார்.

திருவெம்பாவை கொண்டாடும் பருவமங்கையர், சிவபெருமானிடம் இப்படி வேண்டுகின்றனர்: ''முதன்முதலாகத் தோன்றிய பரம்பொருள் எதுவோ, அதற்கும் முன்னதாகவே இருந்துவரும் பழம் பொருளே! பின்னால் தோன்றும் புதுமைப் பொருள் எதுவோ அதற்கும் புதுமையாளனாக இலங்கும் பெற்றியனே! எங்கட்கு ஒருசிறப்பு உண்டு. அஃதாவது, உன்னையே தலைவனாகப் பெற்றதே அது! உனக்குமட்டுமே நாங்கள் அடிமை! உனக்குத் தொண்டு செய்யும் மெய்யடியார் எவரோ, அவரே எமக்குக் கணவனாக வாய்க்க வேண்டும். அவர் மாட்டு அன்புடையராவோம்; அவர் தாள் பணிவோம். அவர், எம்பால் அன்பு கொண்டு சொல்வனவற்றையும் ஏற்றுத் தொண்டு செய்வோம். எம் தலைவனாகிய இறைவா! இத்தயை இயல்பினை எங்கட்கு நீ அருளவேண்டும். அவ்வாறு அருளுவையாயின், எவ்விதக் குறையுமின்றி வாழ்வோமன்றோ?''-இப்படி வேண்டும் அழகான திருப்பாட்டு இது:

''முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே!

உன்னைப் பிரானாகப் பெற்றஉன் சீரடியோம்!
உன்னடியார் தாள்பணிவோம், ஆங்கவர்க்கே பாங்கா
வோம்!
அன்னவரே எம்கணவர் ஆவார்! அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்!
இன்ன வகையே எமக்கெங்கோல் நல்குதியேன்
என்ன குறையு மிலோமேலோ ரெம்பாவாய்!''

—இவ்வாறு வேண்டும் மங்கையர், இவ் வேண்டுகோளை ஏற்று அருள்வானோ மாட்டானோ என்று எண்ணினர் போலும்! எனவே மற்றுமொரு வேண்டுகோள்விடுத்தனர்:

''எங்கள் பெருமானே! திருமணமானதும் மணப்பெண்ணின் பெற்றோர்கள், புதுமாப்பிள்ளையிடம் 'எங்கள் பிள்ளையை நும் கையில் அடைக்கலமாக, ஒப்புவித்தோம்'' என்பர். இது, தொன்றுதொட்டுவரும் பழமையான சொல்லாகும். எங்கட்கு இத்தகைய கணவன் வருவானோ என்று அச்சமாக உள்ளது. ஆகவே நின்பால் ஒன்று சொல்ல விழைகின்றோம். அதனைக் கேட்டருள்வாயாக! எம் மார்பகங்கள், எக்காரணம்கொண்டும் நின் அடியாரின்றி மற்றவரின் தோளைத் தழுவுதல் கூடாது. எம் கைகள், உனக்கே தொண்டு செய்வதற்கன்றி வேறொன்றிற்கல்ல! இரவுபகல் எந்நேரமும் உன் காட்சிதவிர வேறு காட்சியினை எம் கண்கள் காண்டலாகா! இத்தகைய பரிசினை எங்கட்கு நீ அருள்வாயானால், சூரியன் எங்கு உதித்தால்தான் என்ன என்று எண்ணிக் கவலையின்றி வாழ்வோம்!''

''எம்கொங்கை நின்அன்பர் அல்லார்தோள் சேரற்க''

என இவர்கள் வேண்டுவது, சிவபெருமானைத் தொழும் அன்பரே, தங்களுக்குக் கணவனாக அமையவேண்டும் என்ற கருத்தினை விளக்குவதாகும்.

நல்ல கணவனும் அமைந்து சிவத்தொண்டு செய்ய வேண்டுமானால், ஊரும்நாடும் உலகமும் வளமாக இருக்க வேண்டுமல்லவா? அந்த வளப்பத்தைத் தருவது 'மழை'யன்றோ? எனவே இம் மங்கையர் 'மழை பொழிய வேண்டும்' என்று வேண்டலாயினர்.

''ஏ மேகமே! நீ, கடலை அடைகிறாய்; அதன்மூலம் எல்லை சுருங்குமாறு நீரை முகந்துகொள்கிறாய் எப்பிராட்டி-யின் நீலவண்ணம்போலத் திகழ்கிறாய்; அவளின் சிற்றிடை போல மின்னுகிறாய். அவளின் திருவடிகளில் உள்ள சிலம்புகள் ஒலிப்பனபோல் முழங்குகிறாய். அவளது திருப்புருவம் போல், வான வில்லாக வளைந்து தோன்றுகிறாய். இத்தகைய பிராட்டியைச் சிவபெருமானாகிய எம் தலைவன், பிரிவின்றித் தன் உடம்பில் செம்பாதியாகக் கொண்டுள்ளான். அத்தகையா-னின் அடியவர்க்கு அருள்சுரப்பவள் உமாதேவி. அவள் சுரக்கும் அருள்மழைபோல், ஏ மேகமே! நீயும் மழைபொழிந்து மன்னு-யிர்க்கு உதவுவாயாக!''

''அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்'

இவ்வாறு நாடு வாழ, நன்மழை பொழியவேண்டும் என வேண்டுகின்றனர் மங்கையர்.

(5) மார்கழி நீராடி இறைவனைப் போற்றுதல்: இவ்வா-றெல்லாம் ஆடிப்பாடி ஆண்டவனின் அருட்டிறம் பேசும் மங்கையர்கள், இறுதியாக ''இம் மார்கழித்திங்களில் நன்னீ-ராடி நற்பூசை செய்து நல்ல கணவனைப் பெற்றுச் சிவத்-தொண்டில் ஈடுபட வேண்டும். இத்தகைய அருளைத் தரும் சிவபெருமானைப் பல்லாற்றானும் போற்றுவோமாக'' என்ற கருத்தில் பின்வருமாறு கூறுகின்றனர்:

''நம் பெருமானே! நின் ஆதியாம் திருவடிமலர்களைப் போற்றுவோம்; எல்லாப் பொருள்களுக்கும் அந்தமாய் உள்ள நின் செம்மையான தளிர் போன்ற திருவடிகளைப் போற்று-வோம். எல்லாவுயிர்க்கும் தோற்றம், காப்பு, அழிவு என்னும் இம் மூன்றிற்கும் காரணமாகவுள்ள நின் திருவடிகளைப் போற்றுவோம். எவரும் காணமுடியாத நின் தாமரைத் திரு-வடிகளைப் போற்றுவோம். நாங்கள் உய்யுமாறு எம்மை ஆட்கொண்டருளும் பொன்போன்ற நின் திருவடிகளைப் போற்றுவோம். இவ்வாறு உன்னை எண்ணுதற்கு உரியதாகத் திகழும் இம் மார்கழிநீராடலையும் போற்றி வணங்குவோம்!''

இத்தகைய அரிய திருப்பாட்டு இது!:

"போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்!
போற்றி அருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்!
போற்றியெல் லாவுயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்!
போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்!
போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறாம் இணையடிகள்!
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்!
போற்றியாம் உய்யஆட் கொண்டருளும் பொன்மலர்கள்!
போற்றியாம் மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய்!"

முடிவுரை : தமிழகத்தில் சங்ககால முதற்கொண்டு சிறப்புறக் கொண்டாடப்பட்டு வருவது 'தைந்நீராடல்'. பண்டைத் தமிழ்நெறியை உட்கொண்டே மணிவாசகத் பெருந்தகையும் 'திருவெம்பாவை' என்னும் தீந்தமிழ்ப் பாடல்களைப் பாடினார். 'முத்தொள்ளாயிரம்' எனும் தமிழிலக்கியம், 'ஆதிரையான்' எனச் சிவபெருமானை ஏத்திக் புகழ்கிறது. சிவனுக்குரிய திருவாதிரைநாள், மார்கழித் திங்களில் 'திருவெம்பாவை விழா' எனத் தமிழகத்து எல்லாச் சிவன் கோயில்களிலும் சிறப்புறக் கொண்டாடப்பட்டு வருகின்றது. இவ்விழா, வெளிநாடுகளிலும் கொண்டாடப்படுகிறது என்பதும் இங்கு எண்ணத்தக்கது. திருவெம்பாவைத் திருநாளில் 'தேவாரம்' முதலான பிற திருமுறைகள் ஓதுதல் கூடாது என்பதும், திருவெம்பாவைப் பாடல்கள் மட்டுமே ஓதவேண்டும் என்பதும் மரபு. சைவப் பெருமக்கள் இருக்குமிடங்களில் 'திருவெம்பாவை' முழங்கட்டும்; திருமணமாகாத கன்னியர்கள் இவற்றை உள்ளன்போடு ஓதட்டும்; அதனால் நன்மணம் பெற்று நல்ல கணவனை அடையட்டும்; இல்லறம் செழிக்க நன்மழை பொழியட்டும்!

வாழ்க மணிவாசகர் மலரடி!

[குறிப்பு: திருவெம்பாவைப் பாடல்கள் ஆழ்ந்தபொருளுடையன; அரிய தத்துவங்கள் உரைப்பன. எல்லோரும் அறிதற் பொருட்டு எளிதாக இங்குத் தரப்பட்டுள்ளன ]

11

# மாணிக்கவாசகர் சிந்தனைகள்

## (1)

பல்வகைப்பிறவி

வாதவூர் அண்ணல் மலர்வாய்ப் பிறந்தது, திருவாசகம் என்னும் தீந்தமிழ்த்தேன். இதனைப் பார்த்தாலும், படித்தாலும், படிக்கப் பக்கம் நின்று கேட்டாலும் இத்தனைக்கும் தித்திக்கும் இனிமையுடையது. இதனை ஒருகால் ஓதின், கருங்கல் மனமும் கரைந்து உகக்கண்கள் தொடுமணற்கேணியின் சுரந்து நீர்பாய, மெய்ம்மயிர் பொடிப்ப, விதிர்விதிர்ப்பு எய்தி, அன்பர் ஆதல் திண்ணம்!

மணிவாசகப் பெருந்தகையார், எண்ணுதற்கெட்டா எழிலார் கழலுடைய ஈசனை விண்ணிறைந்து, மண்ணிறைந்து, மிக்காய், விளங்கொளியாய், எண்ணிறந்து எல்லையிலாதானைப் புகழ எண்ணுகின்றார். 'ஐயா நின் பெருஞ்சீர், பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்று அறியேன்!'' என ஏங்குகின்றார்.

அறிந்து ஏத்தும் நெறி அறியமாட்டாமைக்குக் காரணம் என்ன? யான செய்த பொல்லாவினைதான்! இப்பொல்லாவினை, பல்வேறு பிறப்புக்களில் நுழைந்து, தம்மைத் துன்புறுத்திவிட்டது என்பதைச் சொல்லோவியமாகத் தீட்டிவிடுகின்றார்:

''புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்'' (சிவபுராணம்)

என்பது மணிவாசகர் மணிமொழி. உலகத் தோற்றத்தில், கற்பாறை அணுக்களில் அடங்கிக் கிடந்து, பின் புல்லாகியும், அடர்ந்த புற்செடிகளாகியும், மரங்களாகியும் படைக்கப்பட்டு, நிகழ்கின்ற பல்கோடி நிலையியற் பொருள்களுக்குள்ளும், புழு,

பாம்பு முதலிய ஊர்வனவாகியும், பறப்பனவாகியும், விலங்குகளாகியும், மக்களாகியும், பேயினங்களாகியும், பூதகணங்களாகியும், வலிய அசுரராகியும், முனிவராகியும், விண்ணவராகியும் படைக்கப்பட்டு . இயங்கும் பல்கோடி பிராணிகள்உள்ளும் அடங்கிய எல்லாவகையான பிறப்பினும் உடல் எடுத்து, இறந்து உழன்று அலுத்தேன் என இரங்குகின்றார்.

பிறவாநெறி

இங்ஙனம், வினையின் செயல்வகையைக் காணும்முகத்தான், தாம் பண்டு பிறந்து இறந்து கழித்த பிறப்புக்களை உணர்ந்து கூறுவது 'தம்மை உணரும் நெறி' எனப்படும். 'தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்'' சான்றோர் என்பர் மெய்கண்டார். ''கூறுமின் நீர், முன்பிறந்து இங்கு இறந்தமை'' என்று திருமூலரும் கேட்டார்.

ஆணவ இருளில் கிடந்த யான், பல்வகைப் பிறப்புக்களில் உழன்றதும், பக்குவம் வந்தகாலை, அவற்றின் நீங்கி, அறிவு சிறந்ததும் ஆகிய இவற்றைச் சிவபரம்பொருளின் திருவருள் கண்ணாகக் கண்ட எனக்கு இனி, அதன் தொடர்பு நீங்கிப் பிறவாநிலை பெறுதல் விரைவில் கைகூடுதல் பற்றி

''எம்பெருமான்,
மெய்யே, உன் பொன்னடிகள் கண்டு, இன்று வீடு உற்றேன்''

என்கின்றார்.

சிவபரம்பொருளின் பொன்னடி கண்டு வினைவீடு பெற்றேன் என மகிழ்ந்து உரைக்கும் மணிவாசகர், அதனைக் கண்ட இடம் இது என்பார், 'என் உள்ளத்துள்' என்றும், கண்டவிடத்துச் சிவபரம்பொருள் ஓங்காரமாய் நின்றார். என்பதனை ''ஓங்காரமாய் நின்ற மெய்யா'' என்றும் விளக்குகின்றார்.

''ஊனக் கண்ணில் உணராப் பதியை
ஞானக் கண்ணிற் சிந்தை நாடி''

என்று சிவஞானபோதமும் கூறுதல் இங்கு ஒப்புநோக்கத்தகும்.

அரிது அரிது மானிடர் ஆதல் அரிது மானிடர் ஆயினும், நல்லுடல் பெறுதல் அரிது; வாய்ந்தது நந் தமக்கு ஈது ஓர்

பிறவி. இப்பிறவி தப்பினால், எப்பிறவி வாய்க்குமோ? பெறுதற்கு அரிய இம் மானிடப் பிறவியைப் பெற்றுள்ளோம் இனிப் பிறவி வாராமற் காக்க, இப் பிறவி தான் துணைபுரியும். இதற்குரிய வழி யாது? இதோ மணிவாசகர் கூறுவது:

''சிந்தனை,நின் தனக்குஆக்கி, நாயினேன்தன்
கண்ணிணை,நின் திருப்பாதப் போதுக்குஆக்கி,
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி, வாக்கு,உன்
மணிவார்த்தைக்கு ஆக்கி''

இங்ஙனம் ஐப்புலன்களும் அவனுக்கே எனும் நிலைக்கு வந்தால், இறைவன் நம்பொருட்டு நிலந்தன்மேல் வருவான், நீள்கழல்கள் காட்டுவான்; நாயினும் கடையாய்க் கிடக்கும் நமக்கும் தாயிற் சிறந்த தயைதனைக் காட்டி அருள்வான்; அதனால் பிறவாநெறி பெறலாம். ஆம்! மணிவாசகர் சிந்தனையை உளத்திற் கொள்வோம்! பிறவிப் பெரும்பயன் எய்துவோம்!

(2)

அறிதற்கு அரியவன்

பெருந்துறை புகுந்து, பேரின்ப வெள்ளம் மூழ்கிய புனிதர் மாணிக்கவாசகர். அவர் அருளிய வாசகத்தை, நாம் கலந்து பாடுங்கால். நற்கரிப்பஞ் சாற்றினிலே, தேன் கலந்து, பால் கலந்து, செழுங்கனித் தீஞ்சுவை கலந்து; ஊன் கலந்து, உயிர் கலந்து, உவட்டாமல் இனிக்கவல்லது. கற்கண்டின் எப்பக்கத்தைச் சுவைத்தாலும், அதன்சுவை குன்றாததுபோலத் திருவாசகத்தை எப்பக்கம் புரட்டினாலும், அதன் தீஞ்சுவை குன்றாது.

எல்லாம்வல்ல சிவபெருமான் எத்தகையவன்? ஐயா என ஓங்கி, ஆழ்ந்து, அகன்ற நுண்ணியன்; மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடர்; அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவு; பெருங்கருணைப் பேராறு; ஆரா அமுது; அளவிலாப் பெம்மான்; சொல்லற்கு அரியான்; இன்நுழை கதிரின் துன் அணுப்புரையச் சிறியவாகப் பெரியோன்; அரியதில் அறிய அரியோன்; நூலுணர்வுணரா நுண்ணியன்; பாரார், விசும்புளார்; பாதாளத்தார், புறத்தார், ஆராலும் காண்டற்கு அரியான்; விண்ணாளும் தேவர்க்கு மேலாய வேதியன்; மண்ணாளும்

மன்னவர்க்கு மாண்பாகி நின்றவன்; பெற்றி பிறர்க்கு அறியாப் பெம்மான்!

இத்துணைப் பெரியவன் ஆயிற்றே? எங்ஙனம் காண்பது என்று கலங்கவேண்டாம் என்கின்றார் மாணிக்கவாசகர். தன்னை வந்து சரண் அடையும் அடியவர்கட்கு மிகமிக எளியன் அவன். நீக்கமின்றி எங்கும் நிறைந்திருப்பவன்தான். எனினும், அடியார் உள்ளக் கமலத்தில் விரைந்து எழுந்தருளி யிருப்பன். வள்ளுவப் பெருந்தகையும்,

''மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்''

என்றுதானே கூறினார்? மணிவாசகர், சிவபெருமானைச் சிக்-கெனப் பிடித்துக் கொண்டவர். ''யான் உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன், எங்கெழுந்து அருளுவது இனியே?'' என்று கேட்டவர். 'அவனே கதி' என்ற எண்ணம் வந்து-விட்டால், அவன் ''பால்நினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பரிந்து'' உதவ முன்வருவான். இது, மணிவாசகர், அனுபவ முறையிற் கண்டு, உலகுக்கு உணர்த்திய உண்மை.

சிவபெருமான், பிரமன் முதலானோர் காணாப் பெற்றி யன். முன்னைப் பழம்பொருட்கும் முன்னையன்: பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியன்: தன்னேரில்லோன்: சொற்பதம் கடந்த தொல்லோன்: சித்தமும் செல்லாச் சேட்சி யன்; மேலொடு கீழாய் விரிந்தோன். அந்தமும் ஆதியும் அகன் றோன்: பந்தமும் வீடும் படைப்போன்;

இவனின் பெருமை பேசவந்த அடிகளார், ''பெறுதற்கு அரிய அமுதமே! முற்பட்டு முதலும் நடுவும் முடியும் ஆனவனே! பிரமன் முதலானவர்கள் நின்னை அறிவில்லை எனின், வேறு யார்தாம் உன்னை அறியக்கூடும்?'' என்று பேசுகின்றார்.

''முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்;
மூவரும் அறிகிலர், யாவர்மற்று அறிவார்?''

என்று கேள்வி கேட்டார்.

ஏழையின் குடிசையில் இறைவன்

> ''பந்தணை விரலியும் நீயும், நின்அடியார்
> பழங்குடில்தொறும் எழுந்தருளிய பரனே''

என்று அவனது எளிவந்த தன்மையையும் எடுத்து இயம்புகின்றார்.

''ஏழைகளின் சிரிப்பில் இறைவனைக் காண்போம்'' என்பர் அறிஞர். இங்கே மணிவாசகரோ, ''ஏழைகளின் குடிசையில் இறைவனைக் காண்போம்'' என்கின்றார்.

ஒரு குடிசை; அதுவும் மிக மிகப் பழைய குடிசை. மழைக்கு ஒழுகும், வெயில் ஒளி, வீட்டினுள் பாயும். அப்படியானால் அது ஏழையின் குடிசையாகத்தான் இருக்கமுடியும். அந்தக் குடிசையிலும் எங்கள் சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்றார். அதுவும் தனியாகவே இல்லை; பந்தணை விரலீயுடன்! பந்தை அணைந்த விரல்களையுடையவள் உமாதேவி தானே? அவளுடன் எழுந்தருளியிருப்பான் அந்தக் குடிசையில்! ஆனால் அந்த ஏழை எப்படிப்பட்டவனாயிருக்க வேண்டும்? சிவனையே எண்ணும் சிந்தனையுடையவனாக சிவனடியாராக விளங்கவேண்டும்!

> ''முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய் ;
> மூவரும் அறிகிலர், யாவர்மற்று அறிவார்?
> பந்தணை விரலியும் நீயும், நின் அடியார்
> பழங்குடில் தொறும் எழுந்தருளிய பரனே''
> (திருப்பள்ளி)

என்பது மணிவாசகர் அருள்வாக்கு. ''நகமெலாம் தேயக் கையெலாம் நாள்மலர் தொழுது தூவி, முகமெலாம் கண்ணீர் மல்க, முன் பணிந்து ஏத்தும் தொண்டர், அகமலாற் கோயில் இல்லை, ஐயன் ஐயாறனார்க்கே'' என்பர் நாவரசர்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கும் மெய்யடியாராக விளங்கினால், இறைவன் தானே வந்து தலையளித்தாட்கொள்வான் என்பது மணிவாசகர் நமக்குக் கூறும் நற்சிந்தனைக் கருத்தாம்!

(3)

நாடக நடிகர்

செல்வம் நிலையற்றது; இளமை நிலையற்றது; யாக்கை நிலையற்றது, ''இளமையும் நில்லா, யாக்கையும் நில்லா, வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா'' என்பது தண்டமிழ்ச் சான்றோர் கண்ட நெறி. ஆம்! நிலையற்றவை இவையெனக் காட்டிற்கு ஓடிவிடவேண்டுமா? வாழ்க்கையைப் பாழடிக்க வேண்டுமா? வேண்டவே வேண்டாம்! உடல் முதலாயின மாயாகாரியப் பொருள்கள். இவற்றின் நிலையாமை உணர்ந்து, இவற்றினின்று நீங்கி, என்றும் நிலையுதலுடைய மெய்ப்பொருள் உணர்ச்சியில் தலையிடலே அருளாளர் கடமை!

மணிவாசகர், அவ்வுணர்ச்சி வாயிலாக ஆண்டவன் திருவருளை வேண்டி, அவற்றிற்குரிய சாதனங்களை மேற்கொள்ளுதற்குத் துணைபுரிய வேண்டிய மனம், அங்ஙனமின்றி, எதிர்மறையான உலகியற் செயல்களில் ஈடுபடுவதுகண்டு, நெஞ்சிற்கு அறிவுறுத்துகின்றார். அவ் அறிவுரை 'அறிவுறுத்தல்' என்ற பகுதியில் இடம் பெற்றுள்ளது. திருவருட்பேற்றிற்குத் துணை செய்யவேண்டிய தம் மனம், அவ்வுதவி செய்யாமையோடு, தடையாகவும் சேறலைக் குறித்துவருந்தி, அம் மனம் உணருமாறு ஆண்டவனை முன்னிலைப்படுத்தி, அப்பேற்றின் இன்றியமையாமையை இப்பகுதியில் தெரிவுறுத்துகின்றார்.

''மாணிக்கமலையே! எம்மை அடிமையாக உடையவனே! நாடகத்தில், நான் ஒரு நடிகன்; சிவனடியார் திருவேடம் பூண்டவன்; உன்பால் உண்மை அன்பின்றி, வேட மாத்திரமே பூண்டவன்; நாடகத்தில் இந்திரனாக நடிக்கும் ஒருவன், நடிக்கின்ற தன் திறமைக்குரிய பயனை விரும்புவானேயன்றி இந்திரனுக்குரிய போகங்களை விரும்பான்; ஒருகால் விரும்பினாலும், அப்பயனை அவன் பெறமுடியாது இதுவே உலக இயல்பு. ஆனால், யானோ, மெய்யன்புடைய சிவனடியார் உருக்கொண்டு, இவ் உலகை வஞ்சிக்க நடிக்கின்றேன். நடிப்புத் திறமைக்குரிய பயனை விரும்பாமல், மெய்யன்பர் பெறத்தக்க வீட்டின்பத்தில் தலைப்பட முற்படுகின்றேன். வேடம் பூண்டு நடிப்பவனும், நடித்தல் தொழில் முடிந்தபிறகே பயன்பெற

விரும்புவான். யானோ, மேற்கொண்ட நடிப்பு முற்றுப்பெறு தற்கு முன்பே, இடையிலேயே வீட்டின்பம் பெற விழை கின்றேன்'' — இப்பொருள்படி மணிவாசகர் மொழியும் அற்புதத் திருப்பாட்டு இது :

''நாடகத்தால் உன்னடியார் போல், நடித்து நான், நடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே, இடையறா அன்புனக்கு, என்
ஊடகத்தே நின்றுருகத் தந்தருள், எம் உடையானே!''

நடிப்பு ஓர் அரிய கலை. அக்கலையில் வல்லாரை உலகம் போற்றுதல் கண்கூடு. சிவனடியார் போல் நடித்தல்-கூடக் காலப்போக்கில் ''ஐயோ, மக்கள் எல்லாம் நம்மை உண்மைச் சிவனடியாராகவே எண்ணுகின்றனரே. அதற்காக-வேனும் நாம் நல்லவராக வாழவேண்டும்'' என்ற எண்ணம் தலைப்படலும் உண்டு. எனவே நடிப்பும் சிலவேளையில் மெய்-யாகிவிடவும் கூடும். மணிவாசகர் உலகியலை நோக்கி உரைத்த பாட்டு இது! எனினும் பொருள் பொதிந்தது. இறைவனது திருவடிக்கே அகம் குழையவேண்டும்; அன்பு உருக வேண்டும்; பூமாலை புனைந்து ஏத்தவேண்டும்; புகழ்ந்துரைக்க வேண்-டும்; திருக்கோயில் தூவி மெழுகவேண்டும்; கூத்தாட வேண்-டும்; நாம் ஒரு சிவனடியார் என்று பிறர் நம்மை நம்புமாறு இவற்றைச் செய்தாலும் இவற்றிற்குரிய பயன் உண்டு!

ஈசன் அருட்டிறம்

''பண்சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண்டலத் தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்!''
(திருஅம்மானை)

ஆம்! எல்லாம்வல்ல சிவபெருமான், அன்பால் தன்னை நாள்தோறும் அர்ச்சித்த, வந்தி மூதாட்டிக்காக, இவ் உலகில் மானிட வடிவம் தாங்கினான். கூலியாளாக வந்தான்; பிட்டுக்கு

மண் சுமந்தான்; பெண்ணைப் படைத்தவன், பெண் சுமந்தான்; சுமந்தவனுக்குக் கிடைத்த தண்டனையோ பிரம்படி! அவனது பொன்னார் திருமேனி, புண் சுமந்தது. எதற்காக? ஒரு வந்திக் காக! தம்மை நினைந்து நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து ஊற் றெழும் கண்ணீர் அதனால் உடம்பு நனைந்து நனைந்து பாடிய மணிவாசகருக்காக!

முடிவுரை

ஆம்! இறைவனை அடைய ஒரே ஒரு வழி. அதுதான் அன்புநெறி; பத்தி நெறி! ''வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே'' என்றார். இறைவனை எண்ணுவோம்; ஏத்து வோம்: அன்பினால் உருகுவோம்; அப்போது அவன் நமக்கு அருள்சுரப்பான். இதுவே மணிவாசகர், மன்பதைக்கு உணர்த் தும் மாண்பார் சிந்தனைக் கருத்தாம்!

# 12

# தெய்வச் சேக்கிழார்

முன்னுரை

'தெய்வப் புலவர்' எனச் சிறப்பிக்கப் பெறுபவர் இருவர், ஒருவர், 'தெய்வப் புலவர்' திருவள்ளுவர்; மற்றவர் 'தெய்வப் புலவர்' சேக்கிழார். தெய்வ அருள்பெற்று நூலியற்றியோர் அல்லது தெய்வத் தன்மை எய்தியோர் என்று இவர்களைப் பற்றி இயம்பலாம். இவருள் 'தெய்வப் புலவர்' சேக்கிழாரைப் பற்றி ஒருசிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

வாழ்க்கை வரலாறு

'தெண்ணீர் வயல் தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து' என்று புகழப் படுவது தொண்டைநாடு. பாலாறு பாய்ந்து வளஞ்சுரக்கும் சிறப்புடையது இந்நாடு. இதன் இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்று 'புலியூர்க் கோட்டம்'. அதன்கண் ஒரு பிரிவாக இலங்குவது 'குன்றத்தூர் நாடு', அந்நாட்டு ஊர்களுள் ஒன்று 'குன்றத்தூர்'.

'சோறு மணக்கும் மடங்களெலாம், தூய்மை மணக்கும் சிந்தையெலாம்,
சுவண மணக்கும் ஆடையெலாம், தொங்கன் மணக்கும் தோள்களெலாம்,
சேறு மணக்கும் கழனியெலாம், செல்வம் மணக்கும் மாடமெலாம்,
தென்றல் மணக்கும் மேடையெலாம், தெய்வ மணக்கும் செய்யுளெலாம்,
நீறு மணக்கும் நெற்றியெலாம், நெய்யே மணக்கும் கறிகளெலாம்,
நெருப்பு மணக்கும் குண்டமெலாம், நேய மணக்கும் வீதியெலாம்,
சாறு மணக்கும் குன்றத்தூர்......'' (சேக்கிழார் பிள்ளைத்தமிழ்)

என மகாவித்துவான் மீனாட்சிசுந்தரப்பிள்ளை, இவ்வூரினைக் குறித்துப் போற்றிப் பாடுவர் இக் குன்றத்தூரில் சிறப்புற்ற குடிகள் பல. அவற்றுள் வேளாண் குடியும் ஒன்று. அக்குடியில் ஒரு பிரிவு 'சேக்கிழார் குடி'. சோழப் பெரு மன்னர்களால் நன்கு மதிக்கப்பட்ட இத் தமிழ்க்குடியில் அவதரித்தவரே 'தெய்வச் சேக்கிழார்'. இவர்தம் இயற்பெயர் 'அருண்மொழித் தேவர்' என்பது. இவருடன் பிறந்த இளவல் 'பாலறாவாயர்', கருவிலே திருவுடையராய்த்தோன்றிய அருண்மொழித்தேவர், நுண்மாண் நுழைபுலமிக்கவராய்த் திகழ்ந்தார். அதுகண்ட சோழவேந்தன், இரண்டாம் குலோத்துங்கன் என்னும் அநபாயன், அவரைத் தம்பால் வரவழைத்து. முதலமைச்சராக ஆக்கினான்; 'உத்தம சோழப் பல்லவன்' எனும் பட்டமும் அளித்துப் பெருமைப்படுத்தினான்.

சேக்கிழார், தாம் தோன்றிய ஊரான குன்றத்தூரில் 'மடவிளாகம்' ஒன்றை ஏற்படுத்தி, ஆங்கு ஒரு திருக்கோயிலை எழுப்பிச் சோழ அரசரின் 'திருநாகேச்சுரம்' போல இதுவும் அப்பெயர் பெறவேண்டுமென விரும்பித் 'திருநாகேச்சுரம்' எனும் பெயர் சூட்டி, அக் கோயில் நாள்வழிபாட்டிற்கெனப் பல நிவந்தங்களையும் தந்தருளினார்.

அக்காலத்தில் ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான 'சீவக சிந்தாமணி'யே பெருவழக்காய்ப் பயின்றுவந்தது. சோழமன்னனும், அக் காப்பியத்தைப் புலவர்வாய்க் கேட்டு மகிழ்ந்து வரலானான். இதனையறிந்த அமைச்சர் பெருமான் சேக்கிழார், அரசனிடத்து,

> ''வளமருவு கின்ற சிவகதை இம்மைக்கும்
> மறுமைக்கும் உறுதிதரும்''

என்று இயம்பினார். அது கேட்ட அரசன், 'அச் சிவகதை யாது?' என வினவினான். சேக்கிழார் ''திருவாரூர் இறைவனே, 'தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று அடி எடுத்துக்கொடுக்க, நம்பியாரூரர் 'திருத்தொண்டத் தொகை' பாடியருளினார் அதனை விரித்துத் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் பொருளுரைக்கக் கேட்ட நம்பியாண்டார் நம்பி, 'திருத்தொண்டர் திருவந்தாதி' பாடினார். இவ்வாறு வந்த

திருத்தொண்டர் வரலாறுகளை, நும் முன்னோராகிய இராசராச சோழன் உள்ளிட்ட பலரும் அன்புடன் போற்றி வந்தனர்'' என்று கூறினார். அரசன், 'அத்தகைய வரலாறுகளை எனக்குச் சொல்க' என்று வேண்டினன்: அருண்மொழியாரும் அவ்வாறே 'தில்லைவாழ் அந்தணர்' முதல் 'திருநீலகண்ட யாழ்ப்பாணர்' வரையிலான இனிதெடுத்துக் கூறினார். இதனை,

''......''வளவன் கேட்டு
மெல்லியலாள் பங்கர் திருவருளை நோக்கி
வியந்தடிமைத் தொண்டு செய்து பேறு பெற்ற
செல்கதியை''

நினைந்துருகினான். ''ஒப்பரிய பொருள்தெரிந்து விளங்கித் தோன்ற, உவமைஉடைத் தாயகதை கற்க, நிற்கத் தப்பில் பெருங் காவியமா விரித்துச் செய்து தருவீர்'' எனச் சேக்கிழாரை வேண்டிக்கொண்டான் வேந்தன். அன்றியும் அவருக்கு வேண்டும் பொன்னும் பொருளும் மகிழ்ந்து கொடுத்தான்.

தெய்வச் சேக்கிழார் திருத்தில்லை அடைந்தார். நடராசப் பெருமான் திருமுன் பணிந்து எழுந்தார்.

''அடிகளே, உனதடியர்சீர் அடியேன் உரைத்திட அடி
எடுத்து
இடர்கெடத் தருவாய்''

எனத் தொழுது நின்றார். நடராசப் பெருமான் திருவருளால், 'உலகெலாம்' எனும் வாக்கு, அசரீரியாக எழுந்து ஒலித்தது. தில்லைவாழ் அந்தணர் அனைவரும் அவ்வொலி கேட்டு வியந்தனர். சேக்கிழாரும், ஆயிரக்கால் மண்டபத்தே அமர்ந்து, இறைவன் எடுத்துக் கொடுத்த அவ் அடியை முதலாக வைத்துத் திருத்தொண்டர் புராணத்தைப் பாடிமுடித்தார். செய்தியறிந்த சோழன், தில்லை நண்ணி, நடராசப் பெருமான் திருவுருவைக் கண்டான். அவனுடைய கண்கள் ஆனந்த நீர் சொரிந்தன; கை இரண்டும் தலைமேற்குவிந்து அஞ்சலி செய்தன; மனம் உருகிற்று; மயிர்க்கால்கள் சிலிர்த்தன; நாக் குழறியது; தன் உடல் முழுதும் பூமியற்படியக் கீழேவீழ்ந்து வணங்கினான். அப்போது எம்பெருமானின் சிலம்பொலி ஓசை கேட்டது.

மக்கள் அனைவரையும் தில்லைக்கு வரப்பணித்தான். சேக்கிழார் தாம் பாடிய தெய்வ மாக் கதையை விரித்துப் பொருளுரைத்தார். திருநெறித் தமிழ் வல்லோர்களும் சிவாகமங்கள் படித்தபேர்களும், கருநெறிப் பகைஞானநூல் பல கற்றபேர்களும், மறை கற்ற பேர்களும், குருநெறிக்குரியோர்களும், இலக்கண இலக்கியங்கள் குறித்த பேர்களும் பெருநெறிப் பல காவியங் கதை பேச வல்லவர்களுமாகப் பலரும் திரண்டனர். சேக்கிழார் சொல்வதைக் கேட்டு எழுதி வைத்தவர் பலர்; இருந்து வரசிப்பவர் பலர்; பொருளுரைப்பவர் பலர்; மகிழ்ந்து கேட்பவர் பலர்; தலையசைத்துக் குதுகலிப்பவர் பலர்; சிரிப்பவர் பலர்; தேனிப்பவர் பலர்; குன்றைமுனிச் சேக்கிழார் செய்த அரிய தவத்தினை நினைப்பவர் பலர்!

ஆண்டு ஒன்று கழிந்தது; புராண விரிவுரை நிறைவெய்தியது. சோழப் பேரரசன், சேக்கிழாரையும் அவர் அருளிய திருத்தொண்டர் புராணத்தையும் தம் பட்டத்து யானை மீதேற்றித் தானும் உடனமர்ந்து, முறையாகத் தன் இரு கரத்தாலும் இரு வெண்சாமரங் கொண்டு வீசினான். இதனை உமாபதி சிவாசாரியார்,

"......அரசனுங் கூடஏறி
முறைமையினால் இணைக்கவரி துணைக்கரத்தால் வீச
அரசர்கோமானீ......
இதுவன்றோ நான்செய்த தவப்பயன் என்
றிசைத்தான்" (87)

எனப் பாடுவர். "ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர் இத் தமிழகத்தில், மோசிகீரனார் என்ற தண்டமிழ்ப் புலவருக்குச் சேரமன்னன் கவரிவீசினான் என்னும் செய்தியைப் புறநானூறு சொல்லக் கேட்டோமேயன்றி நேரிற் கண்டோமில்லை; இப்போதோ, சேக்கிழார் என்னும் இத் தெய்வத் தமிழ்ப்புலவருக்கு நம் சோழப் பேரரசன் கவரி வீசுவதைக் கண்ணாற் காண முடிந்தது" என அனைவரும் எண்ணி அகமிக மகிழ்ந்தனர்.

திருவீதி உலாவந்தபின்பு, தில்லைத் திருவம்பலம் முன்பு நின்று யாவரும் வணங்கி நின்ற சோழமன்னன், சேக்கிழாருக்குத் 'தொண்டர்சீர் பரவுவார்' எனப் பட்டமளித்து ஞானமுடிசூட்டி, அவரை வணங்கினான்.

சேக்கிழார் வாழ்ந்த காலத்தைப் பற்றி, அறிஞரிடையே கருத்து வேறுபடுகள் உண்டு. எனினும் அவரது காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று பலரும் கருதுவர்.

தனிப் பெருங் காப்பியம்

''நம் தமிழக வரலாற்றில், தமிழ்நாட்டில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும், நாகரிகப் பண்பாடுகளையும் கருவாகக் கொண்டு, பிறமொழிச் சார்பின்றித் தமிழ்மொழியிலேயே முதல் நூலாகத் தோன்றிய காப்பியங்கள், சேர முனிவராகிய இளங்கோவடிகள் இயற்றிய முத்தமிழ்க் காப்பியமும் குன்றை முனிவராகிய சேக்கிழாரடிகள் இயற்றிய திருந்தொண்டர்புராணமும் ஆகிய இரண்டுமேயாகும் என்பது பேராசிரியர் க. வெள்ளை வாரணனார் கூற்று. (பெரிய புராணம், திருவாவடுதுறை ஆதீனப்பதிப்பு) இக் காப்பியத் தலைவர் நம்பியாரூரர். ஏனைய அடியார்கள் வரலாறெல்லாம், நம்பியாரூரால் எடுத்துரைக்கப் படும் கிளைக் கதைகள் போல்வன. இப்பெரிய புராணத்தைக் குறித்துத் தமிழில் வெளிவந்த ஆராய்ச்சி நூல்கள் பலவும் இக் கருத்தை எடுத்துரைப்பன காணலாம்.

சமுதாயப் புரட்சி

சேக்கிழார் வாழ்ந்த காலம், தமிழகத்தில் சாதிவேறுபாடுகள்மிக்கோங்கிய காலம்; சாதிகளுக்குள் உயர்வு தாழ்வுகள் கற்பிக்கப்பட்ட காலம்; 'தென்னிந்திய வரலாறு' எழுதிய நூலாசிரியர், பிற்காலக் சோழர்காலத்திய சமூக வாழ்க்கையில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

> ''இக்காலத்தில் (பிற்காலச் சோழர் காலத்தில்) ஏற்பட்ட மிக முக்கிய சமூக மாறுதல், கிளைச்சாதிகளின் வளர்ச்சி யாகும்... தொழில்மட்டுமன்றி, சமூகப் பழக்கவழக்கங் களும் வாழ்க்கை முறைகளும், இன வேற்றுமைகளை வலுப்படுத்தின. பொதுவிருந்துண்ணுவதிலும், கோவி லின் பல பகுதிகளுக்குள் செல்வதிலும் தனி உரிமைகள் நிலைபெறலாயின கீழ்வகுப்பினரின் நிலை, வரவரத் தாழ்ந்து கொண்டே போயிற்று என்பது மறுக்க முடியாத உண்மை!''

இதனை மனத்துட்கொண்டு சேக்கிழாரின் நூலை ஆழ்ந்து நோக்கினால்தான் அவர், தமது நூல்வாயிலாக எத்தகைய சமூகப் புரட்சிகளைச் செய்துள்ளார் எனபது தெரியவரும். சேக்கிழார் ஓர் அமைச்சராக் இருந்தமையாலேதான், துணிச்சலாகச் சிலவற்றைப் பாட முடிந்தது என்றும் கருதமுடிகின்றது. அறுபத்துமூன்று நாயன்மார்களின் வரலாற்றை நும்பமாகப் படித்தால் இவ்வுண்மை புலனாகும்.

தமிழகச் சாதிகளுள் மிகவும் உயர்ந்ததாகக் கருதப்படுவது 'ஆதிசைவ அந்தணர்' குலம். இறைவனது திருமேனியைத் தீண்டுதற்குரியர் இக் குலத்தவரே. உயரிய குலத்தில் அவதரித்தவர் சுந்தரமூர்த்தி நாயனார் என்றழைக்கப்படும் நம்பியாரூரர் ஆவர்.

> ''மாதொரு பாக னார்க்கு வழிவழி அடிமை செய்யும்
> வேதியர் குலத்துள் தோன்றி மேம்படு சடைய னார்க்கு
> ஏதமில் கற்பின் வாழ்க்கை மனைஇசைஞானி யார்பால்
> தீதகன் றுலகம் உய்யத் திருஅவ தாரம் செய்தார்''
> (பெ. பு. தடுத். 3)

நம்பியாரூரர் 'பிறந்தார்' அல்லது 'தோன்றினார்' என்றில்லாமல், 'திருஅவதாரம்செய்தார்' என வருவது உன்னத்தக்கது. அவதாரம் செய்தற்குரியவன் இறைவன் ஒருவனே! ஈண்டு இறைவனாக நம்மால் வழிபடுதற்குரியவர் நம்பியாரூரர் ஆதலின், சேக்கிழார் 'திருஅவதரரம் செய்தார்' என நயமாகக் குறித்துள்ளார்.

இவ் உயரிய குலத்தில் தோன்றிய நம்பியாரூரர், அக்காலச் சாதிவழிக்கப்படி தமது ஆதிசைவ அந்தணர் குலப் பெண்ணை மணமுடிக்கும் வேளையில், சிவபெருமானே, மனித உருத்தாங்கி வந்து, அத்திருமணத்தைத் தடுத்துவிட்டான்.

திருக்கயிலையில் இருந்த 'அந்தமில்சீர் அனிந்திதை'யும், 'கந்த மாலைக் கமலினி'யும் இறைவன் திருவருளால், தமிழகத்தில், முறையே சங்கிலியாராகவும் பரவையாராகவும் பிறந்தனர். நம்பியாரூரர், இவ்விருவரையும் மணமுடித்தார். ஆனால் இவர்கள் ஆதிசைவ அந்தணர் மரபைச் சார்ந்தவரல்லர்.

பரவையார், திருவாரூரினள்; 'உருத்திர கணிகை' எனப்படும் 'பதியிலார் குலத்'தில் தோன்றியவள். அவளைக் கண்டு காதலுற்றுக்கடிமணம் செய்த ஆரூரர், திருவொற்றியூரில் வேளாண் மரபில் வந்த சங்கிலியாரையும் கண்டு காதல் கொண்டு மணமுடித்தார். இஃது எத்துணைச் சமுதாயப் புரட்சி என்று எண்ணிப் பார்த்தல் வேண்டும். 'சாதிகள் இல்லை' எனப்பெருமையாகப் பேசிக்கொள்ளும் இவ் இருபதாம் நூற்றாண்டிற்கூட நடக்கமுடியாத அருநிகழ்ச்சி இது! இதனைத் தெய்வச் சேக்கிழார் தவிர, வேறு எவரும் சொல்லியிருக்க முடியாது என்பது திண்ணம்!

இதுபோன்ற மற்றொன்றையும் இவண் குறித்திடல் சாலும்; அறுபத்துமூவருள் அப்பூதியடிகள் என்பார் ஒருவர்; அவர் அந்தணர் குலத்தவர்.

''அந்தணரின்மேம்பட்ட அப்பூதி அடிகளார்''(திருநா.201) என்பர் சேக்கிழார். அந்தணர் குலத்தவரேயாயினும் 'ஆளுடைய அரசரா'ம் திருநாவுக்கரசர்பால் பேரன்பு பூண்டொழுகியவர். அப்பரின் அருட்செயல்களைக் கேட்ட மாத்திரத்தானே, அவர்பால் மெய்யன்பு கொண்டு, தாம் உருவாக்கிய தண்ணீர்ப் பந்தல், குளம், கிணறு, சாலை அனைத்திற்குமே 'திருநாவுக்கரசர்' பெயரை வைத்த நல்லருளாளர்; தாம் பெற்ற குழந்தைகட்கெல்லாம் 'திருநாவுக்கரசர்' எனும் பெயர் சூட்டிமகிழ்ந்தவர்!

முன்பின் நேரிற் கண்டறியா நிலையில், நாவரசர் திங்களூர் வர, வந்தவர் தம்மால் வணங்கப்பெறும் அருளாளர் எனும் உண்மையறிந்ததும் அளவிலா உவகை கொண்டு பணிந்து வரவேற்றார் அப்பூதியடிகள். அவர் மட்டுமன்று, அவர்தம் துணைவியாரும் மக்களும் அப்பர் திருவடியில் வீழ்ந்து வணங்கினர்.

''மற்றவரும் மனமகிழ்ந்து மனைவியார் மைந்தர் பெருஞ்
சுற்றமுடன் களிகூரத் தொழுதெழுந்து''

(திருநா. 202)

தாம் அந்தணராயினும், வேளாண்மரபில் தோன்றிய நாவரசரைத் தம் வீட்டுக்கு உள்ளே அழைத்துச் சென்றார்

அப்பூதியடிகள்; மனைவி மக்கள் மட்டுமன்றித் தம் உறவினர் பலரையும் வரவழைத்து, அப்பரடிகளைத் தொழச் செய்தார். அப்பூதியடிகளின் துணைவியாரும் சிறிதும் மனங்கோணாமல், தூய நற் கறிகளான அறுவகைச் சுவையால் இன்னமுது ஆக்கி-னார் என்பதும் இவண் எண்ணத்தக்கது.

நாவரசரை வீட்டினுள் வரவழைத்து, ஆசனத்து இருத்தி, அவரின் திருவடிகளைத் தூநீரால் கழுவி, அந்நீரைத் தம் உடம்பில் தெளித்துக் கொண்டனர். அப்பர் அளித்த திருநீற்றை அனைவரும் வாங்கி அணிந்து கொண்டனர்.

''அருந்தவர் எழுந்து செய்ய அடியிணை விளக்கி வேறோர்
திருந்தும் ஆசனத்தில் ஏறிப் பரிகலம் திருத்து முன்னர்
இருந்துவெண் ணீறு சாத்தி...'' (அப்பூதி : 31)

என்பது சேக்கிழார் வாக்கு.

இக்காலத்திலுங்கூட ஆடவர்கள், சாதிவேறுபாடு கருதாத-வராயிருப்பினும் அவர்தம் மனைவியர்க்கு அத்துணையளவு மனப்பக்குவம் வாய்ப்பதில்லை. தொன்றுதொட்டு வரும் பழக்கமே அதற்குக் காரணம். ஆனால் சாதிவேறுபாடுகள் மிக்கிருந்த அக்காலத்தில், ஓர் அந்தணர் இல்லத்திற்குள் வேளாளர் ஒருவர் செல்வதும், அவரை ஆங்குள்ளோர் வரவேற்று உண வளிப்பதும், அவர்பால் திருநீறுபெற்றுப் பூசுவதும் ஆகிய செயல்-களைச் சேக்கிழார் பாடியிருப்பது எத்துணைப் பெரிய புரட்சி என்பதை எண்ணிப்பார்த்தல் வேண்டும்.

பெரியபுராண வாயிலாகச் சேக்கிழார் செய்த சமுதாயப் புரட்சிகள் பலவாம் அவையெல்லாம் தனித்து ஆராய்தற்குரியன.

பெரியபுராணம்

பெரிய புராணத்தில் பேசப்பெறும் சிவனடியார்கள், பல்வேறு ஊரினர்; பல்வேறு காலத்தினர்; பல்வேறு மரபினர். அவருள் ஆடவர் உண்டு; மகளிர் உண்டு; அரசர் உண்டு; எளியரும் உண்டு. ஆனால் இவர்கள் அனைவரும் சிவபெருமானையே முழுமுதற்பரம்பொருளாகக் கொண்டொழுகியோர். தாம் எடுத்த கொள்கையினின்று எத்துணை இடர்ப்பாடுகள்

நேர்ந்தபோதும் பிறழா மாண்பினர். இவ் அடியார் பெருமை கூறும் இந்நூலுக்குச் சேக்கிழார் இட்ட பெயர் 'திருத்தொண்டர் புராணம்' ஆகும்.

'இங்கிதன் நாமங்கூறின் இவ்வுலக கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டின் மாக்கள் சிந்தையுட் சார்ந்துநின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறவிருள் போக்குகின்ற
செங்கதி ரவன் போல் நீக்கும் திருத்தொண்டர் புராண
மென்பாம்'' (10)

என்னும் பாடலால் இதனை அறியலாம். எனினும் இன்று 'பெரிய புராணம்' என்பதே பெருவழக்காயுளது. தெய்வப்புலவர் திருவள்ளுவர் ''ஒத்த பிறப்பினராய மக்கள் இனத்தாருள், மனத்தைத் தீயநெறியினின்றும் விலக்கிநன்னெறியிற் செலுத்து தலாகிய அரிய செயல்களைச் செய்வோரே பெரியர்; அவ்வாறு மனத்தை ஒருநெறிப்படுத்தும் அறிவு வன்மையின்றி மனம் போனபடி எளிய செயல்களைச் செய்வோர் சிறியர்' என்னும் பொருள்பட,

''செயற்கரிய செய்வார் பெரியர், சிறியர்
செயற்கரிய செய்கலா தார்''

என்று கூறினார். திருத்தொண்டர்புராணத்துள் பேசப்படும் அடியார் அனைவரும் இக்குறளுரைக்கேற்ப வாழ்ந்து காட்டிய அருளாளர்கள்; செயற்கரிய செய்த பெரியவர்கள், எனவேதான் இது 'பெரிய புராணம்' எனப் புகழப்படுவதாயிற்று. 'பெரிய' என்னும் சொல் 'சிறிய' என்பதற்கு மறுதலையானதாகவன்றிப் 'பெருமைபெற்ற' என்னும் பொருள்தருவது. 'புராணம்' என்பதற்குப் 'பழைய வரலாறு' என்று பொருள் இந்நூல் இரண்டு காண்டங்கள் கொண்டது. பதின்மூன்று சுருக்கங்கள் உடையது; தெய்வ மணக்கும் நாலாயிரத்து இருநூற்று ஐம்பத்துமூன்று செய்யுட்களால் இயன்றது. பக்திச்சுவை எனும்தேன்பிலிற்றுவது

நம்பியாரூரர் பாடிய 'தில்லை வாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' எனும் திருத்தொண்டத் தொகையில் குறிக்கப் பட்ட அடியார் வரலாறுகளே இப்பெரிய புராணத்துள் இடம் பெற்றுள்ளன. தில்லைவாழந்தணர், பொய்யடிமை இல்லாத

புலவர், பத்தராய்ப் பணிவார்கள், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் திருவாரூர்ப்பிறந்தார்கள், முப்போதுந் திருமேனி தீண்டுவார், முழுநீறுபூசியமுனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார் ஆகிய ஒன்பது திருக்கூட்டத்தாரையும், 'திருநீலகண்டக் குயவனார் முதல் 'திருநீலகண்டப் பாணர்' ஈறாகவுள்ள தனியடியார் அறுபது பேரையும்பெயர்சொல்லி'அடியேன் அடியேன் என்று பாடும் நம்பியாரூரர், இறுதிப்பாடலில், 'அரனடியே அடைந்திட்ட சடையன் இசைஞானி காதலன். திருநாவலூர்க்கோன் அன்னவனாம் ஆரூரன்' என்று குறிப்பிடுவதால், தெய்வச் சேக்கிழார் நம்பியாரூரையும் அவரை இவ்வுலகத்திற்கு அளித்த அவர்தம் பெற்றோராகிய சடையனார், இசைஞானியார் ஆகியோரையும் சேர்த்து அறுபத்து மூவராகக் கொண்டு பாடியருளினார். இவ்வகையில் தனியடியார்அறுபத்து மூவர் என்றும்; தொகையடியார் ஒன்பதுபேர்என்றும் அறியலாம்.

இப்பெரியபுராணம், வெறும் சிவனடியார் வாழ்க்கை மட்டும் கூறும் நூலன்று; தமிழகத்தில் தொன்றுதொட்டு மேற்கொள்ளப்பட்டுவரும் சைவசமய தத்துவங்கள், தமிழர்பண்பாடு, நாகரிகம், பழக்கவழக்கம், ஆட்சிமுறை ஆகிய பலவற்றையும் உலகுக்கு எடுத்துரைக்கும் ஒப்பற்ற காப்பியமாகும்.

பன்னிரண்டாம் திருமுறை

முதல் இராசராச சோழனது வேண்டுகோளை ஏற்றுப் பொல்லாப் பிள்ளையாரது திருவருளால், தேவாரத் திருப்பதிகங்களைத் தில்லையினின்றும் எடுத்து, அவற்றை ஏழு திருமுறைகளாகவும், முன்பே இருந்த திருவாசகம், திருக்கோவையார் என்பவற்றை எட்டாந் திருமுறையாகவும் வகுத்தார் நம்பியாண்டார் நம்பிகள். இராசராச சோழனின் மகன் முதல் இராசேந்திர சோழன், தன் தந்தையாரைப் போலவே சிவபக்தி பூண்டு, திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம் முதலான தெய்வப் பாக்களை, மேலும் சில திருமுறைகளாக வகுக்கச் சொல்லியதற்கேற்ப, அதே நம்பியாண்டார் நம்பிகள் ஒன்பது, பத்து, பதினோராந் திருமுறைகளை வகைப் படுத்தினார். அதன்பின்னர்த் திருத்தொண்டர் புராணம் அரங்கேற்றஞ் செய்யப்பெற்ற காலத்து ஆங்கிருந்த சான்றோர் அனைவராலும், ''இது, முன்னுள்ள திருமுறைப் பாடல்களோடு

ஒத்த திருவருட்பாடல்'' என்று ஒப்புக் கொள்ளப்பட்ட காரணத்தால், பன்னிரண்டாந் திருமுறையாகச் செப்பேடு செய்யப் பெற்றது. இதனோடு 'திருமுறைகள் பன்னிரண்டு' எனும் வரன்முறை ஏற்படலாயிற்று.

பெரியபுராணத்துட்பேசப்படும் அடியார் பலரும், சிவனடியார் திருவேடத்தையும் திருக்கோயில்களையும் சிவன் எனவே கண்டு தொழுது சிவப்பேறு பெற்றவர். இவ் உண்மையை உட்கொண்டே, மெய்கண்டாரும் தம் சிவஞானபோதம் பன்னிரண்டாம் சூத்திரத்தில் பின்வருமாறு அருளிச் செய்தார்:

''செம்மலர் நோன்தாள் சேர லொட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற, நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே''

'அயரா அன்பின் அரன் கழல்அணைந்த முத்தன், வினைப் பயனை அனுபவிக்கப் புறத்துச் செல்லுங்கால், சீவன் முத்தன் எனப்படுவன் அச்சீவன் முத்தன், புறத்துச் செல்லுங் கால், செங்கமல மலர்போல விரிந்து விளங்கிய முதல்வனுடைய பொறுக்கும் திருவடியை அணையவொட்டாது, அத்திருவடியை மறக்கும்படி மும்மலங்களும் செய்விக்கும். ஆதலால், அவ்வாறு மறக்கும்படி செய்விப்பதை இயல்பாகவுடைய அம் மும்மலங்கள் என்னும் அழுக்கை ஞானம் என்னும் நீரினாற் கழுவி, அவ்வாறு கழுவுதலால் அயரா அன்புசெய்யும் மெய்ஞ்ஞானிகளோடுகலந்து கூடி, மலத்தினால் உண்டாகும் மயக்கம் நீங்குதலால், இடைவிடாத அன்பினையுடைய அம் மெய்ஞ்ஞானிகளுடைய திருவேடமாகிய விபூதி உருத்திராக்கங்களையும் சிவாலயத்தையும் முதல்வன் எனவே கண்டு வழிபட்டு வாழ்வன்'' என்பது இதன் பொருள். (சிவஞானபோதம் பொ. முத்தையாபிள்ளை விளக்கம்)

தெய்வச் சேக்கிழாரின் 'பெரிய புராணம்' பன்னிரண்டாம் திருமுறையாகச் சேர்க்கப்பட்டதும், அப் பெரியபுராணம் விரித்துரைக்கும் அடியார் பெருமைகளை உள்ளடக்கிய மெய்கண்டார் சூத்திரம், சிவஞானபோதத்தின் பன்னிரண்டாவதாக அமைந்த பான்மையும் ஒத்துவிளங்குதல் எண்ணிஎண்ணி இன்புறுதற்குரியது. பன்னிரு திருமுறைகளில் இறுதிக்கண் நிற்பது 'பெரிய

புராணம்'; சிவனடியார் பெருமைபேசும் சிவஞான போதச் சூத்திரமும் நூலின் இறுதிக்கண் அமைந்து விளங்குவதும் எண்ணத்தக்கது.

முதற்பாட்டு

பெரிய புராணத்தில், முதல் திருப்பாட்டாக இலங்குவது, 'உலகெலாம்' என இறைவன் அடியெடுத்துக் கொடுத்த அற்புதப்பாட்டு.

''உலகெ லாம்உணர்ந்தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்ச்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்'' (1)

''உயிர்கள் எல்லாவற்றாலும் உணர்தற்கும் ஓதுதற்கும் அரியவன்;(அங்ஙனம்அரியவனாயினும்,தன்னையாவரும்எளிதில் கண்டு தரிசித்து உய்யவேண்டும் என்னும் கருணையினால்) மூன்றாம் பிறைச்சந்திரன் உலாவுதற்கு இடமாய்க் கங்கை நீர் நிறைந்த சடையை உடையவனாகவும், அளவில்லாத ஒளியுரு உடையவனாயும், திருத்தில்லையில் திருச்சிற்றம்பலத்தினிடத்தே ஆனந்தத் திருக்கூத்து ஆடுகின்றவனாயும் உள்ள இறைவனுடைய எங்கும் நீக்கமின்றி மலர்கின்ற சிலம்பணிந்த திருவடிகளை வாழ்த்தி வணக்கம் செய்வோம்!'' என்பது இப்பாடற் பொருள் (சி. கே. சு. முதலியார் உரை)

'உலகெலாம்' என எம்பெருமானே அடியெடுத்துக் கொடுத்த பாடலாக விளங்குவதால், இதன்கண் எண்ணிலாப் பொருள் நலங்கள் இருத்தல் வேண்டும். அவற்றுட்சில மட்டும் சுட்டிக் காட்டப்படுகின்றன.

புலன்கள் ஐந்து; பொறிகள் ஐந்து. கண்ணாற் காண்டல் செவியாற் கேட்டல் நாவால் உண்டல், மூக்கால் மோந்து பார்த்தல், மெய்யால் தீண்டல் என்பன இவை. ஒரே நேரத்தில் ஏதேனும் ஒன்றையோ அன்றி இரண்டையோ நுகர்தல் கூடும். 'தேனீ' என்பது நாவால் சுவைத்தற்குரியதேயன்றிச் செவியால் நுகர்தற்குரியதன்று; மலர் என்பது மூக்கால் மோந்துபார்த்தற்-

குரியது; ஒருகால் கண்ணினால் கண்டு மகிழ்தற்கும் உரியதா-கலாம். இவ்வகையில் இருஇன்பம் கிட்டுகின்றது. ஆனால் ஒரே நேரத்தில் ஐம்புல இன்பமும் அனுபவித்தற்குரிய பொருள் உலகில் உண்டா எனில் உண்டு; அதுவே பெண்ணின்பம் என்கின்றார் தெய்வப்புலவர் திருவள்ளுவர்.

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள" (குறள்: 1101)

என்பது திருக்குறள். ஆனால் அருளுடையார்க்கு, இறைவனும் இத்தகைய இன்பம் அளிப்பவனாக இருக்கின்றான். திருநாவுக்-கரசரை நீற்றறையில் இட்டபோது அஃது அவருக்கு இறையின்-பமாகக் காட்சியளிக்கிறது.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசுதென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே"

என்பது அப்பர் தேவாரம். இதன்கண் ஐம்புல இன்பமும் ஒருசேரச் சுட்டப்பட்டமை காணலாம்.

தெய்வச் சேக்கிழார் திருப்பாட்டில் இத்தகைய ஐம்புல இன்பமும் குறிக்கப்பட்டுள்ளன.

ஓதுதல், வாழ்த்துதல்-வாய்; நிலவு, சோதி-கண்;
மலர் மூக்கு; சிலம்பு-செவி;
நீர், வணங்குதல்-மெய்

பாராவாயால் ஓதுதலும் வாழ்த்துதலும் நிகழும். கண்களால் நிலவையும், சோதியையும் காண்டல் நிகழும். மூக்கால் மலரின் நறுமணம் நுகர்தல் நிகழும். செவியால் சிலம்பொலி கேட்டல் நிகழும். நீர், மெய்க்கு இன்பம் தரும். மெய்யால் வணங்குதல் நிகழும். இங்ஙனம் ஐம்புல இன்பம் ஒருசேர நல்கும் கருணை-யுள்ளம் கொண்டவன் இறைவன் என்பதாம்.

நிலம், நீர், நெருப்பு, காற்று, வான் எனும் பஞ்ச பூதங்களால் ஆயது இவ்வுலகம். இத் திருப்பாட்டில் இந்த நுட்பமும் அமைந்துள்ளமை அறியலாம்.

அம்பலம் - இப்பூமியாகிய நிலம்; நீர் - தண்ணீர்; சோதி- நெருப்பு; காற்றில் அசையும் வேணி (சடாமுடி) - காற்று; அண்டசராசரங்கள் எனப்படும் உலகம் - வான் (ஆகாசம்) - என்று பொருள்கொள்ளவும் இடமுண்டு.

சைவ சித்தாந்தத்தில் 'பதி, பசு, பாசம்' எனும் முப்பொருள் உண்மைகள் விரிவாகப் பேசப்படும். சேக்கிழார் திருப்பாட்டில் இவையும் சொல்லப்பட்டுள்ளன; 'அம்பலத்து ஆடுவான்' என்பது 'பதி'யைக் குறிக்கும். 'உலகெலாம்' என்பது உலகத்து உயிர்களைக் குறித்தலால், 'பசு'வாகும்; பாசத்தால் கட்டுண்ட உயிர்கள், முதல்வனைஅறியவொண்ணா, ஆதலின் 'அரியவன்' எனப்பட்டான் இவ்வகையில் பதி, பசு, பாசம் எனும் மூன்றும் உரைக்கப்பட்டனவாதல் வேண்டும்.

உலகு + எல்லாம் = உலகெல்லாம் என்று வரவேண்டு- வது, ஈண்டு 'உலகெலாம்' என்று வந்தது. இஃது இறைவன் திருவாக்கு 'எல்லாம்' என்பது 'எலாம்' என வரலாம். இஃது இலக்கணத்தில் 'இடைக்குறை' எனப்படும். இவ்வாறு 'இடைக் குறை' அமைய வந்ததன் உட்பொருள் யாதெனக் காண்டல் வேண்டும். ''உயிர்கள் குறைபாடுடையன. ஆணவ மலத்தால் கட்டுண்டு கிடத்தல் என்பதே அக்குறை'' என்பதை உணர்த்- தவே, 'உலகெலாம்' என இடைக்குறையாக அமைந்தது என்று கூறலும் பொருந்தும்.

தமிழில் 'உலகு' எனத் தொடங்குவது மங்கல மரபு. நக்கீரர், தம் திருமுருகாற்றுப் படை நூலினை 'உலகம் உவப்ப' என்று தொடங்குகின்றார். சங்க இலக்கியங்களுள் ஒன்றாகிய 'குறுந்தொகை'யின் கடவுள் வாழ்த்துப் பாடல், 'ஏம வைகல் எய்தின்றால் உலகே' என உலகில் முடிவுபெறுகின்றது. கம்பரும் 'உலகம் யாவையும்' என்றே நூலினைத் தொடங்கு கின்றார். ஆனால் கம்பர் கூறும் 'உலகம்' என்பது, இறை- வனுக்குரிய அடைமொழியாக அஃதாவது 'அலகிலா விளை- யாட்டுடையாரவர்க்கு உரியதாக' அமைகின்றது. நக்கீரர் பாடலிலும் சேக்கிழார் பாடலிலும் வந்துள்ள 'உலகம்' என்பது, உலகத்து உயிர்களைக் குறித்து நின்றது 'எண்ணில்லாத உலகங்கள் உள்ளன' என்பதைக் குறிக்கவே உலகெலாம்' என்ற தொடர் அமைந்தது.

'உணர்ந்து, ஓதற்கு' என்று கூறியதிலும் ஒருநுட்பம் உண்டு. ஓதி, உணர்தல் என்பது வேறு; உணர்ந்து ஓதுதல் என்பது வேறு. ஓதி உணர்தலைவிட, உணர்ந்து ஓதுதலே சிறப்பு ''சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லு-வார்'' எனவரும் மணிவாசகர் திருவாக்கை உன்னுதல் வேண்-டும். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க ஓதுதலே ஈண்டு 'ஓதுதல்' எனப்படும்

''உணர்ந்து ஓதற்கு... வாழ்த்தி வணங்குவாம்'' என்று வந்தமையின், உணர்ந்து வாழ்த்தவேண்டும்; ஓதி வணங்க வேண்டும் என்று நிரல் நிறையாகவும் பொருள் கொள்ள-லாம். 'அரியவன்' என்பதை ஒரு சொல்லாகக் கொண்டு. பொருள் கொள்வதோடன்றி, 'அரிஅவன்' எனப் பிரித்தும் பொருள் கொள்ளலாம். அரி-திருமால்; திருமாலைவழிபட்டாலும் அவ் வழிபாடு சிவபெருமானுக்கும் உரியதாகும். 'நீர்' எனபது இறைவனின் சடாமுடியில்உள்ள கங்கையைக் குறிப்பதாயினும் இங்குக் கருணை வெள்ளத்தைக் குறிப்பதாகவும் கருதலாம். அம்பலத்து' ஆடுகின்றவன்' என்று இல்லாமல், 'ஆடுவான்' என எதிர்காலத்திற் கூறியது,''உலக முடிவுக் காலத்தில் அவன் ஒருவன் மட்டுமே சுடலைப் பொடிபூசியவனாக ஆடுபவன்'' என்றும் கொள்ளலாம்.

'மலர் சிலம்படி' என்று வருவதும் எண்ணத்தக்கது. 'சிலம்பு' என்பது, மகளிர் காலில் அணியும் அணியாகும். ஈண்டு, இறைவனுக்குரியதாகச் சொல்லப்பட்டதால், இறைவன் 'உமைபாகன்' ஆகக் காட்சி தருபவன் என்பதைக் குறிப்பால் சுட்டிதாகும். சம்பந்தப்பெருமான், 'தோடுடைய செவியன்', என்று கூறியது இங்கு ஒப்பு நோக்கத்தகும். 'தோடு' என்பது மகளர்குரியது. 'செவியள்' எனப் பெண்பாலிற் கூறாது 'செவியன்' என ஆண்பாலில் வைத்துக் கூறியது, இறைவன் 'உமைபாகன்' என்பதைக் குறித்தற்கேயாம் வள்ளுவரும் 'ஆதி பகவன்' என்றார்; எனவே தெய்வச் சேக்கிழாரும், 'சிலம்படி' என்றார். 'மலர்'என்பது தாமரை மலரைக்குறித்தது. எனினும், 'மனமாகிய தாமரை மலர்' எனினும் இழுக்கன்று. திருவள்ளுவர் 'மலர்மிசை ஏகினான்' என்றார்.'மலர் சிலம்படி' என்பது இலக்கணத்தில் வினைத்தொகை எனப்படும். அஃதாவது ''மலர்ந்த சிலம்படி, மலர்கின்ற சிலம்படி, மலரும் சிலம்படி''

என்று பொருள்படும். இறைவனது சிலம்படி. முக்காலத்தும் எக்காலத்தும் ஒலி எழுப்புவது என்பதாம். சிவபெருமானின் திருவடிப் பேறு பெறுவதே உயிர்களின் நோக்கமாக இருத்தல் வேண்டும். அதனாற்றான் 'அடி' இவண் குறிக்கப்பட்டது. திருவள்ளுவர், தம் கடவுள் வாழ்த்துப்பாக்களில் 'நாற்றாள், மாணடி, இலான்அடி, தனக்குவமையில்லாதான் தாள், அறவாழி அந்தணன் தாள், எண்குணத்தான் தாள், இறைவன் அடி'' என்றே குறித்தார். மெய்கண்டாரும் 'செம்மலர்' நோன்தாள் என்றே கூறினார்.

தெய்வச் சேக்கிழார் அருளிய இப்பெரியபுராணம் 'உல-கெலாம்' என்று தொடங்குவதோடன்றி, 'உலகெலாம்' என்றே முடிகின்றது. உலகத்து உயிர்கள் இன்புறவேண்டும் என்பதே நோக்கம்.

இனி, சைவ சமய குரவர் நால்வர் பாடிய முதற்பாட-லோடும் சேக்கிழாரின் முதற்பாடலை ஒப்பிட்டும் காணலாம்: சம்பந்தர் பாடிய முதற்பாட்டு: ''தோடுடைய செவியன் விடை-யேறி ஓர் தூ வெண்மதிசூடி'' என்பது. சேக்கிழார் பாட்டில், 'நிலவுலாவிய' என வருதல் காணலாம். அப்பரது முதற்பாடல், 'கூற்றாயினவாறு' என்பது. அதில், ''ஏற்றா யடிக்கேன் இரவும் பகலும் பிரியாதுவணங்குவன் எப்பொழுதும்'. என்று வந்துவ்ளது சேக்கிழார் பாட்டில், ''மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்'' என்பதைக் காணலாம். சுந்தரர் திருப்பாட்டு 'பித்தா பிறைசூடி' என்று தொடங்குவது. சேக்கிழார் பாட்டிலும் பிறையானது 'நிலா' வாகக் குறிக்கப்பட்டுள்ளது. மணிவாசகரின் திருவாசகம் 'நமச்சிவாய வாழ்க' என்று தொடங்குகின்றது. சேக்கிழார், 'வாழ்த்தி வணங்குவாம்' என்கின்றார். இவ்வகையிலும் தெய்வச் சேக்கிழார் பாட்டைப் படித்து இன்புறலாம்.

இனி இப்பாடலுக்குச் சைவ சித்தாந்த நுண்பொருள்களும் உரைப்பர் அறிஞர். ஈண்டு அவை விரிப்பிற் பெருகும்.

தெய்வச் சேக்கிழார்

'உலகெலாம்' என்ற ஒரு பாடலே போதும், சேக்கிழார் தெய்வத்தன்மை பெற்றவர் என்பதை எடுத்துக்கக்காட்ட! பின்-வரும் பாடல், சேக்கிழார் சீர் பேசுவது:

"கருங்கடலைக் கைநீத்துக் கொளலெளிது; முந்நீர்க்
கடற்கரையி னொய்மணலை யெண்ணியள விடலாம்;
பெருங்கடன்மேல் வருந்திரையை யொன்றிரண்டென் றெண்ணிப்
பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரித்துவிட லாகும்;
தருங்கடலின் மீனையள விடலாகும், வானத்
தாரகையை யளவிடலாஞ் சங்கரன்றா டமது
சிரங்கொடிருந் தொண்டர்புரா ணத்தையள விடநஞ்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கு மரிதே"

உமாபதி சிவாசாரியார், சேக்கிழாரையும் சிவனடியாராகவே கருதிச்,

"செல்வமணி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி" என்று ஏத்துகின்றார். ஆண்டவனுக்கும் அடியார்க்கும் 'பிள்ளைத் தமிழ்' பாடுவது உண்டு. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, தெய்வச் சேக்கிழார் மீது ஒரு பிள்ளைத் தமிழ்நூலே பாடியுள்ளார் என்பது சிறப்புக்குரியது. வேறு எப் புலவருக்கும் வாய்க்காத ஒன்று இது! உமாபதி சிவாசாரியார், சேக்கிழார் மீது ஒரு புராணமே பாடிவிட்டார். 103 பாடல்களைக் கொண்ட இது, 'சேக்கிழார் புராணம்' என வழங்கப்படுகின்றது. தெய்வ அருள்பெற்ற, தெய்வத்தன்மை கொண்ட ஒருவருக்கே இத்தகைய சிறப்புக்கள் கிட்டும். இவ்வகையில் சேக்கிழாரைத் 'தெய்வச் சேக்கிழார்' என மனங்குளிரப் போற்றலாம்.

முடிவுரை

சேக்கிழார் பாடல், "அத்தி தரும் கவி; அவாவிய புத்தி தரும் கவி; சித்தி தரும் கவி; சத்தி தரும் கவி; பத்தி தரும் கவி; பல்லோர்க்கு முத்தி தரும் கவி" எனப் போற்றப்படுவது· சைவப் பயிர் தழைக்க வந்த கொண்டலாம் சேக்கிழாரின் இப் பெரியபுராணத்தை நாளும் ஓதி உணர்ந்து வழிபட்டால் பிறவிப் பெரும்பயன் கிட்டும் என்பது ஒருதலை! சேக்கிழார் அருளிய இப் பெரியபுராணம், சைவத் திருமுறைகளில் பன்னிரண்டாந் திருமுறையாக இடம் பெற்றமையால், தெய்வச் சேக்கிழாரும் அறுபத்துமூன்று சிவனடியாருடன் அறுபத்து நான்காவது சிவனடியாராகவைத்துப் போற்றத் தக்கராவர்!

வாழி தெய்வச் சேக்கிழார் திருவடிகள்!

# 13

# சேக்கிழார் காட்டும் செந்தமிழ்ப் பண்பாடு

## முன்னுரை

''பத்திக் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவர்'' தெய்வச் சேக்கிழார். செயற்கருஞ்செயல் செய்த செந்தமிழ்அடியார் வரலாற்றைத் 'திருத்தொண்டர் புராணமா'க இவ்வுலகுக் களித்த கருணையங்கடல். இவர் அருளிய திருத்தொண்டர் புராணம் எனப்படும் 'பெரிய புராணத்'தில் செந்தமிழ்ப் பண்பாடுகள் பலவற்றைக் காணலாம். அவற்றில் ஒன்றுமட்டும் இவண் ஆராயப்படுகின்றது.

## காதலர் 'உடன்போக்கு'

பண்டைத் தமிழகத்தில் 'களவு' மணமும் 'கற்பு' மணமும் மேலோங்கி நின்றன; களவொழுக்கத்தில் ஈடுபடும் காதலர், பெற்றோர் உடன்படாத அமயங்களில், உடன் போக்காகப் போவதுண்டு. தன் மனத்திற்கினிய மங்கை நல்லாளை அவளின் பெற்றோர் அறியாவண்ணம் அழைத்துச் சென்று, தன் ஊரில் பல்லோர் அறிய மணமுடித்தல் வழக்கம். இதனைத் தொல்காப்பியம் முதலான பண்டைத் தமிழ்ப் பனுவல்கள் பரக்கப் பேசும். இதனை உட்கொண்டு தெய்வச் சேக்கிழாரும் தம் பெரிய புராணத்தில் ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் காட்டுகின்றார்.

## வணிகனும் அவன் காதலியும்

திருச்செங்காட்டங்குடியில் இருந்த திருஞானசம்பந்தப் பெருமான், அதனருகே உள்ள 'திருமருகல்' என்ற திருத்தலத்திற்கு வழிபாடு செய்யவிரும்பி, அவ்வூருக்கு வந்து சேர்ந்தார்.

அந்நாளில், வணிகன் ஒருவன், தனக்கேற்ற கன்னிப் பெண்ணை அழைத்துக்கொண்டு, திருமகல் வந்தவன், இரவுப் பொழுது ஆனதால், கோயிலருகே உள்ள திருமடம் ஒன்றில் தங்கினான். இரவு அவர்கள் அயர்ந்து தூங்கும்போது, அவ்

வணிகனை அரவம் ஒன்று தீண்டியது; விடம் தலைக்கேறியது; அவன் மாண்டுபோனான் அருகே இருந்து அக்கன்னிப்பெண் உண்மை உணர்ந்தாள்; தளர்ந்தாள்; சோர்வுற்றாள். தன் காதலனை வாளரவு தீண்டி அவன் இறந்தநிலையிலும், திருமணமாகாததால், அவனைத் தீண்டவில்லை! முன்பின் அறியாத ஊராயிருந்தமையால், அவளுக்கு ஆறுதலும் தேறுதலும் சொல்வாரில்லை. சிங்கம் போலிருந்த அவனை அரவம் தீண்டியதுகண்டு அரற்றும் அவளது நிலைக்கிரங்கிய மருத்துவர்களும் மந்திரங்கூறுவாரும் வந்து முயற்சி செய்தும் பலனில்லை. நீண்ட இரவுப் பொழுதும் கழிந்து; காலை வந்தது; மாலையும் வந்துற்றது. முறுக்கிய கூந்தலையுடைய அம்மங்கைநல்லாள் நெடிது அயர்ந்து புலம்பலானாள்.

''மண்ணிய சீர் வணிகர்குல மாணிக்கமே! உன்னையே நம்பி, என்னைப்பெற்ற அன்னையையும் அத்தனை (தந்தை) யும் பிரிந்தேன்; 'நீயே எனக்குப் புகலிடம்' என்று எண்ணி, உன்னுடன் உடன்போக்காக வந்தேன். நீயோ, இப்போது அரவு தீண்டியதால் என்னைவிட்டு உயிர் நீங்கினாய்! இனி, இப் பாவியேன் என் செய்வேன்? இப் பெரிய இன்னலைத் தீர்ப்பார் ஒருவருமில்லையே! இனி யான் உயிர் வாழேன்!'' என்று பலவாறு புலம்பினாள்; அறிவுக்கூர்மை கொண்ட அவள், அருகே உள்ள சிவன்கோயில் வாயிலின் திசை நோக்கினாள்; தொழுதாள்; அழுதாள்; செயல் ஒன்றின்றிச் சோர்வுற்றாள்.

ஆண்டவனிடம் முறையீடு

அக் கன்னிப்பெண், சிவபெருமானை நோக்கிப் பின்வருமாறு முறையீடுசெய்தாள்: ''நிமலனே! முன்னொருகால், பாற்கடலைக் கடந்தபோது, நஞ்சு எழுந்தது; அஞ்சி ஓடிய அமரர்பொருட்டு அந் நஞ்சினை உண்டாய்; இமையவர்களைக் காப்பாற்றினாய். அமுதே! நான்முகன்முதலானோரும் காணமுடியாதவாறு, அமர்ந்த அரவணிந்த எம்பிரானே! சாம்பலான மன்மதன் உயிரை, இரதிதேவி வேண்ட, அளித்த புண்ணிய மூர்த்தி! மணமுள்ள மலர்ச்சோலை சூழ் திருமருகலில் வீற்றிருக்கும் பெம்மானே! என்னை இத்துன்பத்தினின்றும் காப்பாயாக! மார்க்கண்டேயன் என்னும் சிறுமறையோன் உயிரைக் கவர்தற்பொருட்டுச் சீறிவந்த கூற்றுவனைக் காலால்உதைத்து,

அச் சிறுவனுக்கு அருள்செய்த அருளாளா! என் காதலனின் மீது ஏறிய இந்தக் கொடுமையான நஞ்சுவேகம் நீங்குமாறும், அதனால் யான் இப்பேரிடுக்கண் எனும் குழியிலிருந்து ஏறு-மாறும் அருள் புரிவாயாக!'' என்று ஓலமிட்டாள்.

சம்பந்தர் கருணை

அவ் வேளையில் ஞானசம்பந்தப் பெருமான், திருமருகல் பெருமானை வழிபடக் கோயிலுக்குச் சென்று கொண்டிருந்-தார். அக் கன்னிப்பெண்ணின் ஓலம், அவர் காதில் விழுந்தது. அருகிலிருந்த அடியார்வாயிலாக உண்மை அறிந்தார். மெய்த் தவத்தோர் புடைசூழ, அவளிருக்குமிடம் நண்ணினார். சிந்தை நொந்து புலம்பும் அவளைக்கண்டார். ''நீ அஞ்சேல்! உனக்கு உண்டான துன்பம் யாது, உன் வரலாறு யாது?'' என்று வினவினார் சம்பந்தர்.

இவ் இனிய சொல்லைக் கேட்ட அக் கன்னிப்பெண்-ணாள், கரங்களைத் தன் தலைமேல் வைத்துக் கண்ணில் அருவி சோரச் சம்பந்தப் பெருமான் திருவடியில்வீழ்ந்து வணங்கினாள்; இவண் வந்த வரலாற்றைச் சொல்லலுற்றாள்;

''அண்ணலே! என் தந்தையார், வைப்பூர் என்ற ஊருக்குத் தலைவர்; 'தாமன்' என்ற பெயரினர். இங்கே அரவம் தீண்டப்பெற்றதால் இறந்துகிடப்பவர், என் தந்தைக்கு மருகர். என் தந்தையார்க்கு எழு பெண்கள்; மூத்த மகளை, இவர்க்குக் கொடுப்பதாக, என் தந்தை முன்பு வாக்களித்திருந்-தார்; இவர் ஏழையானதால், இவர்க்குக் கொடுக்க மனமின்றிச் செல்வவளம் மிக்க வேறொருவருக்கு அவளை மணமுடித்து வைத்தார்; இவ்வாறே அடுத்தடுத்த பெண்ணையும் தருவ-தாகக்கூறி இவரை ஏமாற்றி விட்டார் என் தந்தை. இதனால் இவர் படும் துன்பத்தைக் கண்ணாற் கண்டவளாதலின், இவரது துயரத்தைப் போக்கத் துணிந்தேன்; இவரையே என் கண-வனாகக் கொள்ள முடிவுசெய்தேன். எனவே என் பெற்றோர் அறியாவண்ணம், 'உடன்போக்கு' மேற்கொண்டேன். வரும் வழியில், இம்மடத்தில் தங்கினோம்; அரவு தீண்ட மாண்டார். இப்போது நடுக்கடலில் கலம் கவிழ்ந்தாற்போல் அல்லற்படு கின்றேன். யான்செய்த நல் ஊழின் பயனாகக் கருணைக்

கடலாகிய தாங்கள்இங்கு வந்து தோன்றியுள்ளீர்கள்! என் பெருந்துன்பம் ஒழியத் திருவருள்புரிய மன்றாடுகின்றேன்!''

கற்றவர்கள் தொழுதேத்தும் காழிவேந்தர் இவ்வுரை கேட்டார்; கருணைகூர்ந்த அவளது துன்பம் ஒழியுமாறும். பாம்பு விடம் நீங்குமாறும் திருமருகல் இறைவனைவேண்டித் திருப்பதிகம் பாடலுற்றார்:

''சடையாய் எனுமால்; சரண்நீ எனுமால்;
விடையார் எனுமால்; வெருவா விழுமால்
மடையார் குவளைம் மலரும் மருகல்
உடையாய்! தகுமோ இவளுள் மெலிவே'' (சம்பந்-
தேவாரம்)

உள்ளம் உருக்கும் இத்திருப்பதிகப்பாடல்களைக் கேட்ட எம்பெருமான் இரங்காதிருப்பரோ? வணிகனும், பொங்குவிடம் தீர்ந்து எழுந்துநின்றான். அடியார்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். இவ்வரிய நிகழ்ச்சியைக் கண்டு விம்மிதமுற்ற அக் கன்னிப் பெண்ணாள், தன் கைகளை உச்சிமேல் வைத்துக் கொண்டே, ஞானசம்பந்தப் பெருமான் திருவடி வீழ்ந்தாள்; வணிகனும் வீழ்ந்தான். புகலிவேந்தராம் சம்பந்தர், அம்மட்டோடு நின்றாரிலர். நங்கையும் அவள்தனை நயந்த நப்பியாம் வணிகனும் நானிலத்தில் இன்புற்று வாழும் வண்ணம். திருமணமும் செய்துவைத்தார். சம்பந்தரின் கருணையை என்னவென்பது?

செந்தமிழ்ப் பண்பு

இவ்வினிய வரலாறு மூலம் தெய்வச் சேக்கிழார், செந்தமிழ்ப் பண்பாட்டையே காட்டியுள்ளார் எனலாம்:

1. தன் மாமன் மகனாக இருந்தும், அவனையே விரும்பி மண முடிக்கப்போவ தாக இருந்தும், அவனோடு உடன்போக்காக வந்தபிறகும், அவன் பாம்புதீண்டி இறந்த நிலையிலும், அவன்மீது விழுந்து புரண்டோ, அவனைத் தீண்டியோ எதுவும் செய்யாமல் அவனுக்கு அப்பாலிருந்தே அரற்றினாள்; கதறினாள். இவ்வரிய தமிழ்ப் பண்பாட்டைச் சேக்கிழார்,

''வாளரவு தீண்டவுந்தான் தீண்ட கில்லாள்'' (பெ. பு. சம்ப. 474)

எனும் அரிய தொடர் மூலம் காட்டுவது எண்ணி எண்ணி இன்புறத்தக்கது.

2. அரற்றிக்கொண்டிருக்கும் கன்னிப்பெண்ணை நோக்கிச் சம்பந்தர் கேட்ட கேள்வி இது: ''பயப்படேல் நீ! பரு. வரலும் நும்பரிசும் பகர்வாய்''. இந்த ஒரு கேள்விக்கு அம்மங்கை நல்லாள் கூறிய விடை, மிக நீளமானது:

''வளம்பொழில்சூழ் வைப்பூர்க்கோன் தாமன் எந்தை...'' சம்பந்தர் நும்பரிசு பகர்வாய் என்று கேட்டதற்கு அவள், தன் தந்தை வரலாறு, தன் உடன்பிறந்தார் வரலாறு, தந்தை செய்த செயல், அதனால் மனமுடைந்த மருகன், தனது உடன்போக்கு, இப்போது அரவு தீண்டிய அவலநிலை ஆகிய அனைத்தையும் விடாமற் சொல்லி விடுகின்றாள்.

''நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய், யாரையோ நீ மடக்கொடியோய்'' என்றுதான் கேட்டான் பாண்டியன் நெடுஞ்செழியன். ஆனால் கண்ணகி அளித்த விடையோ மிக நீளமானது.

''தேரா மன்னா! செப்புவதுடையேன்...'' என்று கண்ணகி கூறியது, வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கது.

''வந்த செயல் விரைவில் முடியவேண்டும்'' என்பதே கருத்து, அதனால்தான் ஒரே மூச்சில் அத்தனையையும் சொல்ல வேண்டியதாகிறது. இங்கே, கன்னிப் பெண்ணின் துயரம் விரைவில் தீரவேண்டும்; நஞ்சு நீங்க வேண்டும்; தனக்குரிய காதலனை மீண்டும் அடையவேண்டும் என்ற ஆர்வமே நீண்ட விடைசொல்லச் செய்கிறது.

முடிவுரை

தெய்வச் சேக்கிழாரின் பெரிய புராணத்துள் நுழைந்தால் இத்தகைய அரிய தமிழ்ப் பண்பாடுகள் பலவற்றைக் கண்டு இன்புறலாம். இப்பண்பாடுகளிற் சில, இன்றும் நம்மிடையே இருந்துவருவன எண்ணி மகிழ்தற்குரியதாம்.

# 14

# பத்தி இலக்கியம் தந்த பாவலர் சிவப்பிரகாச சுவாமிகள்

முன்னுரை

''வித்தாகி, முளையாகி, விளைவதாகி, விளைவிக்கும் பொழுதுமாகி, மேலுமாகிக், கொத்தாகிப் பயனாகிக் கொள் வோனாகிக், குறைவாகி, நிறைவாகிக், குறைவிலாத சத்தாகிச் சித்தாகி, இன்பமாகிச், சதா நிலையாய் எவ்வுயிர்க்கும் சாட்சி-யான முத்தாகி, மாணிக்கமாகித் தெய்வ முழுவயிரத் தனி மணியாய் முளைத்த தேவை''ப் பத்திச் சுவை நனிசொட்டச் சொட்டப் பாடிய பாவலர்கள் பலர் நம் தமிழகத்தில் உண்டு. இவர்கள் இயற்றிய இலக்கியங்களை நினைந்து நினைந்து, உணர்ந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து, அன்பே நிறைந்து நிறைந்து, ஊற்றெழுங் கண்ணீர் அதனால் நனைந்து நனைந்து, ''அருள்நிதியே, நன்னிதியே, ஞானநடத்தரசே என்னுரிமை நாயகனே'' என்று வனைந்து பாடுங்கால் உடல் குளிரும்; உயிர் தழைக்கும்; கடலனைய பேரின்பம் துளும்பும்; கருணை மலர்த்தேன் பொழியும். இத்தகைய பத்திச்சுவை கனியப் பாடிய அருளாளர்களில் தவத்திரு சிவப்பிரகாச சுவாமிகள் என்போரும் ஒருவர்.

வரலாறு

சிவப்பிரகாச சுவாமிகள், அருள் பழுத்த உள்ளத்தினர்; மூவகை நச்சும் மாய்வகை இயற்றி, புலன்வழிச் செலாது பொறியினை மடக்கிச், செந்நெறி நின்ற சீலர். ஏறத்தாழ 300 ஆண்டுகட்குமுன் காஞ்சிபுரத்தில் வீரசைவமரபில், குமார-சாமி தேசிகர் என்பார்க்கு அருமந்த மகவாய்த் தோன்றினார்; இவருடன் பிறந்தார் மூவர். அவர்கள் முறையே வேலைய சுவாமிகள், கருணைப்பிரகாசர், ஞானாம்பாள் ஆவர். சிவப்-பிரகாசர் தொடக்கத்தில் திருவண்ணாமலையிலுள்ள குருதேவர்

என்பாரிடம் தமிழ் கற்றார்; வயல்படுசெந்நெல் நிறைவுற விளைக்கும் துறை மங்கலத்தில் தங்கியிருந்தார்; நெல்லை நகர் நண்ணி வெள்ளியம்பலவாணத் தம்பிரானிடம் இலக்கணங் கற்கச் சென்றார். அவர் விருப்பப்படி 'கு' என்று தொடங்கி, 'ஊருடையான்' என்று இடையில் வைத்துக் 'கு' என்பதையே இறுதியாகக் கொண்ட வெண்பா ஒன்றினைப் பாடினார்; திருச்செந்தூர் சென்று கந்தன் விடயமாக நிரோட்டக யமக அந்தாதி நேர்பெறப் பாடி, ஆங்குள்ள புலவரை வென்றார். பின்பு சிதம்பரம் சென்று ஒரு திருமடத்தில் தங்கினார்; தவத்திரு சிவஞான பாலைய சுவாமிகளைக் கண்டு அவரையே தம் ஞானாசிரியராகக் கொண்டார். தம் தங்கை ஞானாம்பிகையைச் சாந்தலிங்க சுவாமிகட்கு மணமுடித்துக் கொடுத்தார். தம் தம்பியர் இருவரையும் இல்லறத்தில் இருக்கச் செய்து, தாம் தூய துறவற நெறி மேற்கொண்டார். பல திருத்தலங்கள் சென்று இறைவனை வணங்கிப் பாமாலைகள் பல தொடுத்தார்; இறுதியில் தம் 32-ஆம் வயதில், நல்லாற்றூரில், பாலைய சுவாமிகளால் விடப்பட்டிருந்த திருமடத்தில் இறையோடு இரண்டறக் கலந்தார்.

பிரபுலிங்கலீலை

சிவப்பிரகாசர் இயற்றிய செந்தமிழ்ப் பனுவல்கள் பலவாகும். அவை, கற்பனை வளமும் கருத்துச்செறிவும் உடையன; அணிகள் பலவும் அழகுற அமையப்பெற்றன; சிவபெருமானின் கருணை வெள்ளம் காட்டுவன.

இவரியற்றிய 'பிரபுலிங்கலீலை' கற்பனைக் காவியம் எனக்கற்றுவல்ல பெரும் புலவரால் பாராட்டப்பெறுவது. சிவபெருமான் அல்லமப் பிரபுவாக வந்து செய்த திருவிளையாடல்களைக் குறிக்கும் நூல் இது மெய்ஞ்ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் போர் நடப்பதும், முடிவில் மெய்ஞ்ஞானம் வெல்லுவதும் ஆகிய உட்கருத்துக்கள் அமையப் பாடப்பெற்றது இது. இறைவன் அல்லமதேவனாக வந்து "சமயம் எது? பொருள் நூல் எது?" எனத் தவிக்கும் மக்கட்குத் தெளிவு காட்டிச் சைவ சமயத்தின் ஒரு பகுதியாகிய வீரசைவத்தை வளர்த்த பான்மையை விளக்குகிறது, ஆயினும் இதில் வந்துள்ள உள்ளுறைப்

பொருட்கள் எந்நாட்டார்க்கும் எச்சமயத்தார்க்கும் பொது வானவை எனலாம்.

நூலின் தொடக்கச் செய்யுளே நமதுள்ளத்தைக் கவர்வ தாக அமைந்துள்ளது. உலகமளந்தானும், நான்முகனும் தம்மைக் காத்தருள வேண்டுமென்று ஏத்தி நிற்க, அவர்களிடத் துச் செல்லாமல், தானே உவந்து, எம் உள்ளங்கையினிடத்து விரும்பி அமர்ந்தவன் மாமணிச் சிவபெருமான். மலர்கள் மிகுந்துள்ள மிகப்பெரிய மரம் ஒன்று; அதன் கொம்பு நுனியில் பொருந்தியுள்ளது பசுந்தேன்; அதனைப் பெறுதற்கெனத்தகுதி யுடையார் பலர் இருக்க, அவர்க்குக் கிடைக்காமல், கையும் காலும் முடங்கியவன் அறிவில்லாதவன் ஒருவனது நாவில் அவ்வின்பத்தேன் தானே வந்து ஒழுகினால் எத்தகையதோ அத்தகைய செயலே இது என்கிறார் :-

''பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன் கைகான் முடங்கு
பொறியிலித
னாவா யொழுகிற் றெனவுலக மளந்த மாலு
நான்முகனுங்
காவா யெனநின் றேத்தெடுப்பத் தானே யுவந்தெங்
கரதலத்தின்
மேவா வமர்ந்த மாமணியைத் தொழுது வினைக்கு
விடை கொடுப்போம்''

இத்தகைய வள்ளற் பிரானாம் சிவபெருமானைத் தொழுது எம்மைப் பிறவியில் அழுத்தி வருத்தும் கருமத்துக்கு விடை கொடுப்போம் என்கின்றார்.

காவிய நாயகனாம் அல்லமதேவரைத் துதிக்கவந்த இடந்துச் சிவப்பிரகாசர், ''கலைமதிப்புலவர், சித்தர், முனிவர், நான்முகன் ஆகிய அனைவரையும் உட்கொண்டு, மிக்க வலி மையையுடைய மாயையின் தலையையும் மிதிக்கும் தன்மையர் அம்லமர்'' எனக்கூறிச் சிவபெருமானின் பெருமையைப் புலப் படுத்துகிறார்.

இறைவன் வீற்றிருக்கும் திருக்கயிலாயத்தில் பேரவை கூடிற்று. அப்போது நிகழ்ந்ததைப் புலவர் கூறும் நயம் காண்போம்.

''துதிப்ப ரோர்சிலர்; பாடுவ ரோர்சிலர்; துள்ளிக்
குதிப்ப ரோர்சிலர்; கைகளாற றோளினைக் கொட்டி
யதிர்ப்ப ரோர்சிலர்; நெக்குநெக் குருகிநெஞ் சகமெய்
விதிர்ப்ப ரோர்சில ராயி ரவையிடை மிடைந்தோர்''

வநவசைமாநகரின் மதிலும் அகழியும் எப்படியுள்ளன? மதில், சூரிய மண்டலம் வரை உயர்ந்துள்ளது. அகழி, நாக லோகம்வரையும் தாழ்ந்துள்ளது. ஆனால், உயர்ந்து சென்ற மதிலோ, சூரியன் காலடியிற் கிடக்கிறது; தாழ்ந்து சென்ற அகழியோ ஆதிசேடனின் மணிமுடியில் வீற்றிருக்கிறது. ''தாழ்ந்தோர் உயர்வர் என்று. மிக உயர்ந்தோர் தாழ்வர் என்று மறஞ் சூழ்ந்தோர் உரைக்கும் உரைகண்டாம்'' என்ற அரிய கருத்தை அழகுறக்காட்டுகின்றார். இத்தகு நகரத்தில் எவ்விதக் குறையும் இல்லை; ஆனால் ஒரேஒரு குறை ''கொடுப்போர்க்கு இரப்பார் இல்லாத குறையொன்றுள்ளது'' என்கிறார்!

ஓசை நயம்படப்பாடுவதிலும் அவர் வித்தகர். ஒரு சான்று:

''பற்றுமன மோடியிரு பார்வையினு மெய்தி
மற்றைய புலன்களை மறந்துநட மாடும்
பொற்றொடியை நண்ணவுயர் பொன்மதி லுறுப்பி
னுற்றபொறி போலசை வொழிந்திளைஞர் நின்றார்''

நால்வர் நான்மணிமாலை

இவரியற்றிய ''நால்வர் நான்மணிமாலை'', 'விருந்து' என்னும் சிறு நூல்வகையைச் சேர்ந்தது. முத்து, பவளம், மரகதம், மாணிக்கம் என்னும் நால்வகை மணிகளை முறையே கோக்கப்பட மாலை போல வெண்பா, கட்டளைக்கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்னும் நால்வகைப் பாக்கள் ஒன்றன்பின் ஒன்றாக நிரலே வர அந்தாதித் தொடையாக 40 செய்யுட்களைக் கொண்டதோர் நூல் இது. சைவசமய குரவரின் வரலாறு, தேவார திருவாசகப் பெருமை, இறைவன் திருவருள் ஆகியன, கற்பனை நயத்துடன். பக்திச் சுவையுடன் சிவப்பிரகாசரால் பாடப்பெற்றுள்ளன. எல்லாப் பாக்களுமே சிறப்பாக உள்ளன எனினும் மணிவாசகரைப் பற்றிய பாக்கள், கன்னெஞ்சையும் கனிவிக்கும் தன்மையனவாய் அமைந்துள்ளன. காரணம், இப்பாக்கள் ஆசிரியப்பாவால் அமைந்துள்ளமை எனலாம்.